உ

கடவுள் துணை.

தெய்வப்புலமைத்

## திருவள்ளுவநாயனார்

அருளிச்செய்த

# திருக்குறள் மூலம்.

## இதன் கருத்துரையுடன்.

---

திருமயிலை,

திருவள்ளுவநாயனார் சந்நிதியில்

திருத்தொண்டுசெய்துவரும்

மேற்படியூர்

**வி - சுந்தரமுதலியாரால்**

தமது - சென்னை

**விக்டோரியா ஜுபிலி அச்சுக்கூடத்தில்**

பதிப்பிக்கப்பட்டது.

முதற்பதிப்பு.

௧௮௯௩௵.

**இதன் விலை ரூபா - ௧.**

# முகவுரை.

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாய
னார் அருளிச்செய்த திருக்குறளுக்குப பரி
மேலழகர் முதலியோர் அருளிச்செய்த உரை
கள், கற்றோர்க்கு அலலாலு, மற்றோர்க்குப்
பொருள் விளங்குதல் கடினமாய் இருத்தலைப்
பற்றி யாவர்க்கும் எளிதில் பொருள் விளங்
கும்படி கருத்துரையும, அந்நாயனார் சொல்
லாதுசொலலி விடுத்தருளிய வீட்டுநெறியை
க் கொற்றவன்குடி - உமாபதிசிவாசாரியர்
அருளிய சைவசித்தாந்த சாத்திரத்தில் ஒன்
று திருவருட்பயனைககூறி இருத்தலால், அத
ற்குக்கருத்துரையும பலருக்கு உபயோகமா
க வெளியிடக்கருதி திருமயிலை - செந்தில்
வேலுமுதலியார் அவர்கள் நெடுநாள் விரு
ம்பிய வண்ணம் அச்சிட்டு முடித்தனன்.

வி-சுந்தரமுதலியார்.

## சிறப்புப்பாயிரம்.

இஃது

மஹாவித்வான்

புரசை அஷ்டாவதானம்

சபாபதிமுதலியாரவர்கள் மாணுக்கர்

திருமயிலை

### சண்முகம்பிள்ளையவர்கள்பாடிய

நேரிசையாசிரியப்பா.

பூவிரிகமலமேவியபெருந்தகை
நாவினினமர்ந்தவோவியக்கொழுந்தீண்
டொன்பான்றலையிட்டநாற்பானெண்டமிழ்
இன்பாஞ்சுவைதேக்கிரும்புலவோருருக்
கொண்டொன்மாடக்கூடலிற்சங்க
மண்டபத்தமர்ந்துவயங்கவீற்றிருந்
திறுமாந்திருப்பவிவர்செருக்ககற்றுவான்
நறுமாமலருறைநான்முகத்தொருவனே
வெள்ளறிவினரும்வீடுபேறெய்துவான்
வள்ளுவனென்னமகிமிசையவதரித்
தருந்தமிழ்மடந்தையகமகிழ்பூப்பத்
திருந்துசுவைத்தெய்வத்திருக்குறளென்ன
வாய்மலர்ந்தருளினன்வகைபெறுமுப்பால்
தூய்மலர்பொதுளியதொன்முதனீழலில்

மவுதொன்முதனிகர்மெய்கண்டதேவன்
ாவியல்சந்ததிப்பயோநிதிதனிலொரு
புரிமுத்தெனவயங்குசுகுணாகரன்
ம்புரிசிந்தைநயவுமாபதிசிவன்
ருணையினுதவியதிருவருட்பயனு
மாருவருஞ்சீர்மலியோங்குவீட்டுறுப்பென்
றின்னனகருத்துரையோடுமெற்களித்தனன்
லையணியாரெணினியம்புதுமன்ற
லையறம்பிறழாமாண்பினினோங்கிய
லையனையானுமைதன்கரநிதரும்
லையருஞ்சீர்க்குலப்புண்ணியமேரு
சோழியர்மரபிற்றோன்றியதிறலோன்
கருவிடைபுகாதாராகாதலித்தடையும்
திருவிடையார்கோத்திரந்தரவந்தோன்
மாதரார்வாண்முகமதிகண்டஞ்சி
கோதில்வான்மதியக்குடிலமேயமைதரூஉ
மேர்குலாம்வியாசமாபுரியிருந்தவச்
சீர்குலாமப்பாசாமியாஞ்செம்மலும்
பச்சைவடிவத்தெம்பார்ப்பதியனைய
பச்சையம்மையும்பரிவினொடி
செய்தவத்தால்வருஞ்செல்வப்புத்திரன்
சைவசாதனந்தனையேநாடுவோன்
இறைவனமருமிருந்தலயாத்திரை
கறைதபுமுளத்தொடுகருதியேசெய்வோன்

காழியர்பெருமான்முதறகவின்றெய்வ
மேதாவியரெலாம்விளம்பியதளிகட்
கீதோரிறும்பூதெனறியாவருமோதுறூஉம்
கீர்த்தனஞ்சிவநாமப்பெயாகெழீஇய
ஆத்தியொடுபுகனறவருஙகுணசாகரம்
தொழததகுமரசசுதந்தரமுணாத்தும்
விழுத்தகுமிந்துசணபூஷணியெனும்
பத்திராசிரியப்பண்பினைவாய்நதோன
நினைக்கமுததிநிரந்தரமளிக்கும்
தணிக்கணணுதலமர்தருமருணைப்பதி
ஞானதீபக்குடைநாளுநடைபெறத்
தானொருநற்றுணையெனச்செறிதகையோன்
தருமையாவடுதணடுறைமதுரை
வருமொருபுறவமாநகர்க்கவுணிய
மாமணியாதினமுனமகததுவநிகேதனம்
தாமகிழ்பூக்குந்தகைமைசாலறிஞன்
தெள்ளுதமிழ்கொழிக்குந்திருததகுமயிலை
வள்ளுவாகோயில்வளமலிதொண்டு
குயிற்றிடுசுந்தரக்குரிசிலென்னுமத்
தியற்றமிழ்ப்புலவனெனறிலங்குசீரியனே.

சிறப்புப்பாயிரமுற்றிற்று.

திருமயிலை

தெய்வப்புலமைத்

# திருவள்ளுவநாயனூர்

## சரித்திரச்சுருக்கம்.

நூலாசிரியர் பலரினும் உயர்வொப்பில்லாத சிறப்புப்பொருந்திய முதனூலாசிரியராய் மேற்கொள்ளப்படுகின்றனர். அவரினின்றுந்தோன்றிய திருக்குறளோவெனின், மக்களுக்கு உணரவேண்டுவனவனைத்தும் பயத்தற்சிறப்புடைத்தாய் விளங்குகின்றது. அவர், மதுரையில் அரசாட்சிசெய்த உக்கிரப்பெருவழுதியென்னும் பாண்டியராஜன்காலத்திலே ஆதி பகவன என்னும் தாய்தந்தையருக்குப் புத்திரராகத் தொண்டை மண்டலத்தில் திருமயிலாப்பூரென்னும் சிவஸ்தலத்திற்கு வடபுறம் இலுப்பைததோப்பில் திருவவதாரஞ்செய்தருளினா. அவரிடத்தே விளங்கிய பலவகைப்பட்ட அபூர்வகாரியங்களாலே அவரது தெய்வத்தன்மை உலகத்திற்கு வெளியாக்கப்பட்டது. அவர்யாவர்க்கும் பொதுவான பரமாசாரியரா யெழுந்தருளி யிருந்தாலும், அக்காலத்திலே பரிபாகப்பட்டிருந்த கொங்கணசித்தர் ஏலேலசிங்கர் முதலானோர் அவரை வழிபட்டு உபதேசம்பெற்றுய்ந்தனா. அவராலே செய்யப்பட்

ட திருக்குறள் மதுரைகடைச்சங்கத்தில் அரங்கே றியது. அச்சங்கத்துப்புலவர்கள் அப்போது திருவ ருளினலே திறக்கப்பட்ட தமதுமெய்ஞ்ஞானப்பார் வையைக்கொண்டு அவரை நான்முகக்கடவுளது திருவவதாரமாய் வந்தவரென்றும், அவரினின்றுந் தோன்றிய நூலைச் சிறந்த உத்தரவேதமென்றும், கண்டுகொண்டு யாவரும் உணர அவரது மேன்மை யைத் திருவள்ளுவமாலையால் விளக்கினர்கள்.— அப்பால், நாயனர் உலகத்தார்க்கு இல்லறநெறியை க்காட்டும்பொருட்டு வாசுகியெனனுமனைவியோடு கூடி நெடுங்காலமிருந்து பிறகு விதேகமுத்தியடை ந்தருளினர்.—

திருவள்ளுவநாயனர்
சரித்திரச்சருக்கம் முற்றிற்று.

---

## நாயனர் குருபூசைத்திருநக்ஷத்திரம்.

வெண்பா.

மாசியுத்தி ரத்தினத்தில் வள்ளுவனர் மாநிலம்விட்
டாசில்பர முத்தியடைந் தாரால் - காசினியில்
கொல்லா விரதங் குறிக்கொண்டா ரெல்லாரும்
நல்லார்வஞ் செய்மினந்த நாள்.

☞ இந்நாயனருடைய திருக்கோயில் ஸ்ரீகபா லீஸ்வரர் சந்நிதிக்கு வடபுறம் இருக்கின்றது.

# பால், இயல், அதிகார அட்டவணை.


| பால. | பக்கம். |
|---|---|
| அறத்துப்பால். | ௧ |
| பொருட்பால். | ௮௨ |
| காமத்துப்பால். | ௨௩௦ |

| இயல. | பக்கம். |
|---|---|
| இல்லறவியல். | ௯ |
| துறவறவியல். | ௫௨ |
| அரசியல். | ௮௨ |
| அங்கவியல். | ௧௩௫ |
| ஒழிபியல். | ௨௦௨ |
| களவியல். | ௨௩௦ |
| கற்பியல். | ௨௪௭ |

| அதிகாரம். | பக்கம். |
|---|---|
| கடவுள்வாழ்த்து. | ௧ |
| வான்சிறப்பு. | ௩ |
| நீத்தார்பெருமை. | ௫ |
| அறன்வலியுறுத்தல். | ௭ |
| இல்வாழ்க்கை. | ௯ |
| வாழ்க்கைத்துணைநலம். | ௧௨ |
| புதல்வரைப்பெறுதல். | ௧௪ |
| அன்புடைமை. | ௧௬ |
| விருந்தோம்பல். | ௧௯ |
| இனியவைகூறல். | ௨௧ |
| செய்ந்நன்றியறிதல். | ௨௩ |
| நடுவுநிலைமை. | ௨௫ |
| அடக்கமுடைமை. | ௨௭ |
| ஒழுக்கமுடைமை. | ௨௯ |
| பிறனில்விழையாமை. | ௩௧ |
| பொறையுடைமை. | ௩௩ |
| அழுக்காறாமை. | ௩௫ |
| வெஃகாமை. | ௩௭ |
| புறங்கூறாமை. | ௩௯ |
| பயனிலசொலாமை. | ௪௧ |
| தீவினையச்சம். | ௪௩ |
| ஒப்புரவறிதல். | ௪௫ |
| ஈகை. | ௪௭ |
| புகழ். | ௪௯ |
| அருளுடைமை. | ௫௨ |
| புலான்மறுத்தல். | ௫௪ |
| தவம். | ௫௬ |
| கூடாவொழுக்கம். | ௫௮ |
| கள்ளாமை. | ௬௧ |
| வாய்மை. | ௬௩ |
| வெகுளாமை. | ௬௫ |
| இன்னாசெய்யாமை. | ௬௭ |
| கொல்லாமை. | ௬௯ |
| நிலையாமை. | ௭௧ |
| துறவு. | ௭௩ |
| மெய்யுணர்தல். | ௭௫ |
| அவாவறுத்தல். | ௭௭ |

| அதிகாரம். | பக்கம் |
|---|---|
| உளம். | ௮௦ |
| இறைமாட்சி. | ௮௨ |
| கல்வி. | ௮௫ |
| கல்லாமை. | ௮௭ |
| கேள்வி. | ௮௯ |
| அறிவுடைமை. | ௯௧ |
| குற்றங்கடிதல். | ௯௩ |
| பெரியாரைத்துணைக்கோடல். | ௯௬ |
| சிற்றினஞ்சேராமை. | ௯௮ |
| தெரிந்துசெயல்வகை. | ௧௦௦ |
| வலியறிதல். | ௧௦௨ |
| காலமறிதல். | ௧௦௪ |
| இடனறிதல். | ௧௦௬ |
| தெரிந்துதெளிதல். | ௧௦௮ |
| தெரிந்துவினையாடல். | ௧௧௧ |
| சுற்றந்தழால். | ௧௧௩ |
| பொச்சாவாமை. | ௧௧௫ |
| செங்கோன்மை. | ௧௧௭ |
| கொடுங்கோன்மை. | ௧௧௯ |
| வெருவந்தசெய்யாமை. | ௧௨௧ |
| கண்ணோட்டம். | ௧௨௩ |
| ஒற்றாடல். | ௧௨௫ |
| ஊக்கமுடைமை. | ௧௨௭ |
| மடியின்மை. | ௧௨௯ |
| ஆள்வினையுடைமை. | ௧௩௧ |
| இடுக்கணழியாமை | ௧௩௩ |
| அமைச்சு. | ௧௩௬ |
| சொல்வன்மை. | ௧௩௮ |
| வினைத்தூய்மை. | ௧௪௦ |
| வினைத்திட்பம். | ௧௪௨ |
| வினைசெயல்வகை. | ௧௪௪ |
| தூது. | ௧௪௬ |
| மன்னரைச்சேர்ந்தொழுகல். | ௧௪௮ |
| குறிப்பறிதல். | ௧௫௧ |
| அவையறிதல். | ௧௫௩ |
| அவையஞ்சாமை. | ௧௫௫ |
| நாடு. | ௧௫௭ |
| அரண். | ௧௫௯ |
| பொருள்செயல்வகை. | ௧௬௧ |
| படைமாட்சி. | ௧௬௩ |
| படைச்செருக்கு. | ௧௬௫ |
| நட்பு. | ௧௬௭ |
| நட்பாராய்தல். | ௧௬௯ |
| பழைமை. | ௧௭௧ |
| தீநட்பு. | ௧௭௩ |
| கூடாநட்பு. | ௧௭௫ |
| பேதைமை. | ௧௭௭ |
| புல்லறிவாண்மை. | ௧௮௦ |
| இகல். | ௧௮௨ |
| பகைமாட்சி. | ௧௮௪ |
| பகைத்திறந்தெரிதல் | ௧௮௬ |
| உட்பகை. | ௧௮௮ |

| அதிகாரம். | பக்கம். |
|---|---|
| பெரியாரைப் பிழையாமை. | ௧௯௦ |
| பெண்வழிச்சேரல். | ௧௯௨ |
| வரைவின்மகளிர். | ௧௯௪ |
| கள்ளுண்ணாமை. | ௧௯௬ |
| சூது. | ௧௯௮ |
| மருந்து. | ௨௦௦ |
| குடிமை. | ௨௦௩ |
| மானம். | ௨௦௫ |
| பெருமை. | ௨௦௭ |
| சான்றாண்மை. | ௨௦௯ |
| பண்புடைமை. | ௨௧௧ |
| நன்றியில் செல்வம். | ௨௧௩ |
| நாணுடைமை. | ௨௧௫ |
| குடிசெயல்வகை. | ௨௧௭ |
| உழவு. | ௨௧௯ |
| நல்குரவு. | ௨௨௧ |
| இரவு. | ௨௨௩ |
| இரவச்சம். | ௨௨௫ |
| கயமை. | ௨௨௭ |
| தகையணங் குறுத்தல். | ௨௩௦ |
| குறிப்பறிதல். | ௨௩௨ |
| புணர்ச்சிமகிழ்தல். | ௨௩௪ |
| நலம்புனைந்து ரைத்தல். | ௨௩௭ |
| காதற்சிறப்பு ரைத்தல். | ௨௩௯ |

| அதிகாரம். | பக்கம். |
|---|---|
| நாணுத்துறவு ரைத்தல. | ௨௪௨ |
| அலரறிவுறுத்தல். | ௨௪௪ |
| பிரிவாற்றாமை. | ௨௪௭ |
| படர்மெலிந்தி ரங்கல். | ௨௫௦ |
| கண்விதுப்பழிதல் | ௨௫௩ |
| பசப்புறுபருவரல். | ௨௫௬ |
| தனிப்படாமிகுதி. | ௨௫௮ |
| நினைநதவர்புலமப | ௧௨௬ |
| கனவுநிலையு ரைத்தல். [ல் | ௨௬௩ |
| பொழுதுகண் டிரங்கல். | ௨௬௬ |
| உறுப்புநலன ழிதல். | ௨௬௯ |
| நெஞ்சொடு கிளத்தல். | ௨௭௨ |
| நிறையழிதல். | ௨௭௫ |
| அவர்வயின் விதும்பல். | ௨௭௭ |
| குறிப்பறிவுறுத்த | ௨௮௦ |
| புணர்ச்சிவி தும்பல். | ௨௮௩ |
| நெஞ்சொடு புலத்தல். | ௨௮௬ |
| புலவி. | ௨௮௯ |
| புலவிநுணுக்கம். | ௨௯௧ |
| ஊடலுவகை. | ௨௯௫ |

| ஆசிரியர்பெயர்-௯. | நூலின்பெயர்-௯. |
|---|---|
| திருவள்ளுவர். | திருக்குறள். |
| நாயனார். | முப்பானூல். |
| தேவர். | உத்தரவேதம். |
| முதற்பாவலர். | தெய்வநூல். |
| தெய்வப்புலவர். | திருவள்ளுவர். |
| நான்முகனார். | பொய்யாமொழி. |
| மாதானுபங்கி. | வாயுறைவாழ்த்து. |
| செந்நாப்போதார். | தமிழ்மறை. |
| பெருநாவலர். | பொதுமறை. |

இந்நூலின் உரையாசிரியர் பெயர்.—௧௦.

வெண்பா.

தருமர் மணக்குடையர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி - திருமலையர்
மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை செய்தா ரிவர்.

இந்நூற்களின்சிறப்பு.

வெண்பா.

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர்தமிழும் முனிமொழி யுங் - கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.
வள்ளுவர்நூ லன்பர்திரு வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை - ஒள்ளியசீர்
தொண்டர் புராணந் தொகைச்சித்தி யாராறுந்
தண்டமிழின் மேலாந் தரம்.

திருவள்ளுவநாயனார் திருவடிவாழ்க.



திருவள்ளுவநாயனார்.

சற்குருதுணை.

# திருக்குறள்மூலமும், கருத்துரையும்.

## அறத்துப்பால்.

### க-அதிகாரம்—கடவுள்வாழ்த்து.

அஃதாவது-கவி தானவழிபடுகடவுளையாயினும், எடுத்துக்கொள்ளப்பட்ட பொருளுக்கு ஏற்புடைக் கடவுளையாயினும் வாழ்த்துதலாம். அவைகளுள்- இவ்வாழ்த்து ஏற்புடைக்கடவுளை யென்றறிக.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(கருத்துரை.) எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையன - அதுபோல உலகம் கடவுளை முதலாக உடையது. (க)

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

(க-ரை.) கடவுளை வணங்காராகில் கற்றதனாற் பயனில்லை. (உ)

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(க-ரை.) கடவுளடிகளைச் சேர்ந்தவர்கள் மோட்சத்தில் வாழ்வார்கள். (ங)

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்
தார்க், கியாண்டு மிடும்பை யில.

(க-ரை.) கடவுளடிகளைச் சேர்ந்தவர்களுக்குப் பிறவித்துன்பங்கள் இல்லை. (ச)

இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(க-ரை.) கடவுளுடைய கீர்த்தியை விரும்பினவரிடத்து நல்வினைதீவினைகள் சேரா. (ரு)

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழு
க்க, நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(க-ரை.) கடவுள்வழியிலே நின்றவர்கள் நீடூழி வாழ்வார்கள். (சா)

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க்
கல்லான், மனக்கவலை மாற்ற லரிது.

(க-ரை.) கடவுளுடைய திருவடியைச் சேராதவர்களுக்கு மனக்கவலை நீக்குதல் இல்லை. (எ)

அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற
பிறவாழி நீந்த லரிது

(க-ரை.) கடவுளடிகளைச் சேராதார்க்குப்பொருளும் இன்பமுமாகிய கடல்களைக்கடத்தல் கூடாது.

கோளில் பொறியிற் குணமிலவே யெண
குணத்தான், றுளை வணங்காத் தலை.

(க-ரை.) கடவுள்பாதங்களை வணங்காததலைகள் பயன்படா. (௯)

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார.

(க-ரை.) கடவுள் பாதங்களைச சேர்ந்தவர்கள் பிறவிக்கடலைககடப்பார்கள், சேராதவர்கள் பிறவிக்கடலைக்கடக்கமாட்டார்கள். (௧0)

உம். அதி.—வான்சிறப்பு.

அஃதாவது - கடவுளது ஆணையால் உலகமும, அதற்குறுதியாகிய அறம் பொருள் இன்பஙகளும், நடத்தற்கு ஏதுவாகியமழையினதுசிறப்பைச் சொல்லுதலாம்.

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றுனமிழ்த மென்றுணர்ற் பாற்று.

(க-ரை.) மழையானது நீங்காமற் பெய்துநிற்க உயிர்களானவை நிலைபெற்றுவருகையால் அம்மழை உயிர்களுக்கு அமிர்தம். (௧)

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்
குத், துப்பாய தூஉ மழை.

(க-ரை.) உண்பவாக்கு நன்மையாகிய உணவுக ளையுண்டாக்கி அவவுணவை உணபவாககுத தானும உணவாகநிற்பது மழை. (உ)

விண்ணின்று பொய்பபின் விரிநீா வியனுலகத்
துண்ணின றுடற்றும பசி

(க-ரை.) மழைபெய்யாது பொய்க்குமாகில் உல கில் பசியானது உயிர்களை வருததும். (ங)

ஏரி னுழாஅ ருழவர் புயலெனனும
வாரி வளங்குன்றிக் கால

(க-ரை.) மழைவளம்குறைந்தால் பயிாசெய்மாக் கள் ஏருழாா. (ச)

கெடுபபதூஉங் கெட்டார்க்குச் சாாவாய்மற்
றுங்கே, யெடுப்பதூஉ மெலலா மழை.

(க-ரை.) கெடுப்பதும் கெட்டவரைக் காப்பதும் மழை. (ரு)

விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றுங்கே
பசும்புற் றலைகாண பரிது.

(க-ரை.) மழைபெய்யாவிடில் புல்லின் தலையைக் காணுதல் அரிது. (சு)

நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந
தெழிலி, தான்லகா தாகி விடின்.

(க-ரை.) மழைபொழியாவிட்டால் நெடியகட லும் வளம் குறையும். (எ)

சிறப்பொடு பூசனை செலலாது வானம
வறக்குமேல வானோக்கு மீணடு.

(க-ரை.) மழைபெய்யா விட்டால் இவ்வுலகில் தேவர்களுக்கும் பூசை நடவாது. (௮)

தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

(க-ரை.) மழைபொழியாவிடில் உலகத்தில் தருமமும் தவமும் உண்டாகா. (௯)

நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

(க-ரை.) எவ்வகைமேன்மையுடையோர்க்கும் நீரையல்லாமல் உலகியலானது நடவாது, அதுபோல மழையையல்லாமல் நீரொழுக்கம் கிடையாது.

---

## ௩-ம். அதி.—நீத்தார்பெருமை.

அஃதாவது-முற்றத்துறந்த முனிவரது பெருமையைச் சொல்லுதலாம்.

---

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

(க-ரை.) நூல்களது நிச்சயமானது துறந்தவர் மகிமையை மேலானதென்று விரும்பும். (௧)

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

(க-ரை.) துறந்தவர் பெருமையைச் சொல்லில் இறந்தவர்களை யெண்ணிக் கொண்டாற்போலும்.

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(க-ரை.) துறவறத்தைக் கொண்டவரது பெருமையே இவ்வுலகில் உயர்ந்தது. (௩)

உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்
பான், வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

(க-ரை.) ஐம்பொறிகளையும் ஐம்புலன்களிற் செல்லாமற்காப்பவன், மோட்ச நிலத்துக்கு வித்தாவான். (௪)

ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி

(க-ரை.) கௌதமமுனிவல்லமைக்குத் தேவேந்திரனே சாக்ஷியாம். (௫)

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

(க-ரை.) பெரியோர் செய்தற்கு அரிதானவைகளை அறிந்துசெய்வார்கள், சிறியோர் அவ்விதம் அறிந்து செய்யார்கள். (௬)

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்
தின், வகைதெரிவான் கட்டே யுலகு.

(க-ரை.) உலகமானது பஞ்சதன்மாத்திரைகளை யறிபவனிடத்ததே. (௭)

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

(க-ரை.) முனிவரது மகிமையை அவர்கள் மந்தி ரங்களேகாட்டும். (௮)

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

(க-ரை.) முனிவரது கோபம் கோபிக்கப்பட்ட வராலே தடுக்கமுடியாது. (௯)

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்,
செந்தணமை பூணடொழுக லான்.

(க-ரை.) அந்தணா என்று சொல்லப்படுவோர் முனிவர்களே. (௧0)

## ௪-ம். அதி.—அறன்வலியுறுத்தல்.

அஃதாவது - அம்முனிவரால் அறிவிக்கப்பட்ட மூன்றுள் அறமானது மற்றைப்பொருள் இன்பங்கள்போல் ஆகாமல் இம்மை மறுமை வீடு என்கிற மூன்றையும தருதலால் அவற்றினும் உறுதியுடைத்தென்று சொல்லுதலாம்.

சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

(க ரை.) மக்களுயிர்க்குத் தருமத்தின் மேற்பட்டது இல்லை. (க)

அறத்திஞாஉங் காக்கமு மிலலே யதனே
மறததலி ஞூங்கில்லே கேடு.

(க-ரை.) தருமத்தின் மேற்பட்ட செல்வமும் இல்லே, அததருமததை மறந்தலேப்பாக்கிலும் கேடும இல்லே. (உ)

ஒல்லும் வகையா லறவினே யோவாதே
செலலுமவா யெல்லாஞ் செயல.

(க-ரை.) மனம் வாக்கு காயம் இம்மூன்ருலும் தருமஞ்செய்யக் கடவா. (ஙு)

மனத்துக்கண மாசில ஞத லனேத்தற
ஞகுல நீர பிற

(க ரை.) தருமஞ்செய்பவனது மனம மாசற்று இருக்கக்கடவது. அறம அவவளவே. (சு)

அழுக்காறவாவெகுளி யின்ஞச்சொன்ஞன்கு
மிழுக்கா வியன்ற தறம்.

(க-ரை.) பொருமை ஆசை கோபம் கடுஞ்சொல் இந்நான்குமகடிந்து நடந்ததேதருமம. (ரு)

அன்றறிவா மென்ஞ தறஞ்செய்க மற்றது
பொனறுங்காற் பொன்ருத துணே.

(க-ரை.) இறக்கும்போது தருமஞ்செய்வோமென்ஞது இருக்கும்போதே தருமம் செய்க. அத்தருமம இறக்கும்போது உதவியாம். (சா)

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தாஞே டூர்ந்தா னிடை.

(க-ரை.) தருமஞ்செய்தலின்பயனை சிவிகை ஏறு வனிடத்திலும், அதைச்செய்யாமையால்வரும்பய னை அச்சிவிகை எடுப்பவனிடத்திலும் காணலாம்.

வீழ்நாள் படாமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

(க-ரை.) ஒருவன் தருமத்தைச்செய்தால் அத் தருமம் அவன்பிறப்பை நீக்கும். (அ)

அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

(க-ரை.) தன்மனைவியோடு கூடும் இன்பமே இன்பமாகும், பிறன்மனைவியோடு கூடும் இன்பம் துன்பமாகும். (கூ)

செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

(க-ரை.) ஒருவனுக்குச் செய்யத்தக்கது நல்வி னை, செய்யத்தகாதது தீவினை. (௧0)

---

## இல்லறம்.

இல்லறமாவது - இல்வாழ்க்கைக்குச் சொல்லப்ப டுகிற வழியிலே நின்று அதற்குத்துணையாகியகற்பு டைய மனைவியோடுகூடிச் செய்யப்படும் அறமாம்.

### ரு-ம். அதி.—இல்வாழ்க்கை.

அஃதாவது - மனையாளோடு கூடிவாழ்தலினது சிறப்பாம்.

இலவாழ்வா னென்பா னியல்புடைய மூவாக்
கு, நல்லாற்றி னினற துணை.

(க-ரை.) இல்லறததில் வாழ்பவன், பிரமசாரி வானப்பிரததன் சந்நியாசி இமமூவாக்கும, துணை யாவான. (௧)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தாக்கு
மிலவாழ்வா னென்பான றுணை.

(க-ரை.) துறந்தவர்க்கும், வறியவாக்கும், இறந் தவர்க்கும், இலவாழ்வான் துணை. (௨)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லு
னென்றாங், கைம்புலத்தா றோமப றலே.

(க-ரை.) பிதிர்க்கும் தெய்வத்திற்கும் விருந்திற் கும் இனத்திற்கும் தனக்கும் தருமமசெய்தல் தலை மையான தருமம். (௩)

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்
கை, வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

(க-ரை.) பாவத்திற்குப்பயந்து பொருளைத்தேடிப் பங்கிட்டு உண்ணும் ஒருவன் சந்ததியானது குறை தல் இல்லை. (௪)

அன்பு மறனு முடைத்தாயி னிலவாழ்க்கை
பண்பும பயனு மது.

(க-ரை.) ஒருவன் இல்வாழ்க்கை அன்பையும் அறததையும உடைத்தானல், அவவுடைமையா னது குணமும் பிரயோசனமுமாம். (௫)

அறத்தாற்றி னிலவாழ்க்கை யாற்றிற் புறத
தாற்றிற், போஒய்ப பெறுவ தெவன.

(க-ரை.) ஒருவன் இல்வாழ்க்கையைத தருமவ
ழியாக நடத்துவானுகில் துறவறததிற்போய்ப பெ
றுமபயன என்ன? (௬)

இயல்பினு னிலவாழ்க்கை வாழ்பவ னென்
பான், முயலவாரு ளெலலாந தலை.

(க-ரை.) தரும இயல்போடு இல்லறத்தில் வாழ்
பவனதவஞ்செய்வார எல்லாருள்ளும் தலையாவான.

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா விலவாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

(க-ரை.) தவததோரைத தவவழியில் நடக்கச்
செய்து தானும தன் இல்லறததினின்று தவருத
வாழ்க்கையானது, தவஞ்செயவோா நிலையினும்
பொறுமையுடையது. (௮)

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும
பிறன்பழிப்ப திலலாயி னன்று.

(க-ரை.) அறம என்று சொல்லப்பட்டது இல்
வாழ்க்கையாகும், துறவறமும் பிறனுற்பழிக்கப்படு
வது இல்லாதிருந்தால் நல்லது. (௯)

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானு
றையுந, தெய்வத்துள் வைக்கப் படும.

(க-ரை.) இல்லறத்து வழுவாதுவாழ்பவன் தெய்
வத்துள் ஒருவனுக மதிக்கப்படுவான். (௰)

## சா-ம். அதி.—வாழ்க்கைத்துணைநலம்.

அஃதாவது - அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மையாம.

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண
டான், வளத்தக்காள் வாழ்க்கைத துணை.

(க-ரை.) இல்லறததிற்குததக்க நற்குணநற்செய்கை உடையவளாகித தனனைக்கொண்டகணவன் வரவுக்குததக்க செலவுசெய்பவள் இல்வாழ்க்கைக்குத் துணையாவாள். (க)

மனைமாட்சி யிலலாள்க ணில்லாயின் வாழ்க்
கை, யெனைமாட்சித் தாயினு மில.

(க-ரை.) இலலறததிற்குத்தகுநத நற்குணநற்செய்கை மனையவளிடத்து இலலாதாயின், அவவில்வாழ்க்கை எவவளவு சிறப்புடைததாயினுமபயனில்லை. (உ)

இலலதெ னிலலவண் மாணபானு லுள்ளதெ
னிலலவளை மாணுக் கடை.

(க-ரை.) மனையவள நற்குணநற்செய்கையுடையவளாகில் இல்லாததொன்றுமில்லை, அமமனைவி நற்குணநற்செய்கை இல்லாதவளாகில் உள்ளதொன்றுமில்லை. (ஙு)

பெணணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண டாகப பெறின்.

(க-ரை.) ஒருவன் பெறும்பேறுகளுக்குள் கற்புடைய மனைவியைப்பார்க்கிலும் எவையிருக்கின்றன? (ச)

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை.

(க-ரை.) பிறதெய்வத்தை வணங்காளாகிக் கணவனைத்தொழுது எழுபவள் பெய் என்று சொல்ல மழைபெய்யும். (ரு)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

(க-ரை.) கற்பில் இருந்து தன்னைக்காத்துத் தன்கணவனைக் காப்பாற்றி நற்குண நற்செய்கைகளை மறவாதவளே மனையவள். (சா)

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர் நிறைகாக்குங் காப்பே தலை.

(க-ரை.) கணவர்வைத்த காவலென்செயும்? பெண்கள் கற்பால் தங்களைக் காத்துக்கொள்ளுங் காவலே தலைமையானகாவல். (எ)

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப், புத்தேளிர் வாழு முலகு.

(க-ரை.) பெண்கள் கணவரை வணங்கப்பெற்றால்,சுவர்க்கத்தில் தேவரால்வணங்கப்படும்பெருஞ்சிறப்பை அடைவர். (அ)

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன் னேறுபோற் பீடு நடை.

(க-ரை.) கறபு எனனும கோததிணை விரும்பிய மனையவளில்லாதவாக்குத தமது பகைவர்முன சிங்கமபோலும பெருமிதநடை இலலை. (கூ)

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல னன்மக்கட் பேறு.

(க-ரை.) மனையவளது நற்குணநற்செய்கைகளை ஒருவனுக்கு நனமை எனறும நல்லபுததிரரைப்பெறுதலை அந்நன்மைக்கு ஆபரணம் எனறுஞ் சொல்லுவர். (க0)

## எ-ம். அதி.—புதல்வரைப்பெறுதல்.

அஃதாவது-முனிவாகடன் கேள்வியாலும் தேவர்கடன் வேள்வியாலும தென்புலததார்கடன் புதல்வரைப்பெறுதலாலுமல்லது செலுத்தக்கூடாமையால், அக்கடன செலுததற்பொருட்டு நல்ல மக்களைப் பெறுதலாம்.

பெறுமவற்றுள் யாமறிவ திலலை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

(க-ரை.) ஒருவன் பெறும்பேறுகளுக்குள் அறியவேண்டியவைகளை அறிந்த மக்கட்பேற்றை யல்லது பிறபேற்றையாம்மதிக்கவேண்டியதில்லை. (க)

எழுபிறப்புந தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

(க-ரை.) பழிக்கப்படாத நற்குண முடைய புதல்வரைப்பெறுவானாயின், எழுவகைப்பிறப்பிலும் துனங்கள் அணுகா. (உ)

தமபொரு ளெனபதம மக்க ளவாபொரு டந்தம வினையான் வரும்.

(க-ரை.) தம் புதல்வரைத தமபொருளென்று சொல்லுவர், (ஏனெனில்) பிளளைதேடியபொருள் பிதாவிறகு வருமாகையால். (ங)

அமிழ்தினு மாற்ற வினிதேதம மக்கள் சிறுகை யளாவிய கூழ்.

(க-ரை.) தம்மக்கள் சிறுகையால் அளாவிய சோறானது அமிர்தத்திலும் மிக இனியது. (ச)

மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவா சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

(க-ரை.) மக்கள் உடலைதடுதல் உடற்கின்பம, அவர்சொற்களைக்கேட்டல் செவிக்கின்பம். (ரு)

குழலினி தியாழினி தென்பர்தம மக்கண் மழலைசசொற் கேளா தவா

(க-ரை.) தம்மக்கள் மழலைச் சொற்களைக்கேளாதவாகள் புள்ளாங்குழலிசை இனிதெனறும வீணையிசை இனிதென்றும்சொல்லுவா. (சு)

தநதை மகற்காற்று நனறி யவையததது முநதி யிருப்பச செயல.

(க-ரை.) பிதா பிள்ளைக்குச்செய்யும் உதவியா னது சபையில கல்வியில வலலவன என முறபட் டிருக்கச்செயல. (எ)

தமமிற்றம மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிரக் கெலலா மினிது.

(க-ரை.) தமமக்கள் அறிவுடைமையானது தம் மைவிட உலகதது உயிாகளுக்கெல்லாம் இனிதாயி ருக்கும். (அ)

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

(க-ரை.) தன்மகனைக் கல்வியில் வல்லவன் எனக்கேட்டதாயானவள் பெற்றகாலத்தைக்காட் டினும் பெருமகிழ்ச்சியை அடைவாள். (கூ)

மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொலெனுஞ் சொல்.

(க-ரை.) பிள்ளை பிதாவுக்குச்செய்யும் உதவியா னது இவன்பிதா இவனைப்பெறுதற்கு என்னதவம் செய்தானோ எனறு பிறாசொல்லுஞ்சொல்லை உண் டாக்கல். (க0)

## அ-ம். அதி.—அன்புடைமை.

அஃதாவது-அம்மனைவி புதல்வர்முதலாகியசம்பந் தமுடையவரிடத்து ஆசையுடையவனாயிருக்கை.

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்
வலர், புன்கணீர் பூச றரும.

(க-ரை.) அன்பு செயப்பெற்றவருடைய துன்பத்தைக் கண்டபோதே அன்புடையவர் கண்ணீர் உள்ளிருந்த அனபைக்காட்டும். (க)

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

(க-ரை.) அன்பில்லாதவரது எல்லாப்பொருள்களும் அவர்க்கே உரியன. அனபுடையவா எலும்பும் பிறர்க்குரியது. (உ)

அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

(க-ரை.) மக்களுயிருக்கு உடலோடு உண்டாகிய சம்பந்தத்தை அன்போடுபொருந்தவந்த பயனென்பர். (ங)

அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

(க-ரை.) அன்பானது ஆசையைத்தரும், அது சிநேகத்தையுந்தரும். (ச)

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

(க-ரை.) விண்ணுலகில் அடையும் பேரின்பத்தை மண்ணுலகில் இவவாழ்க்கையில் பொருந்திய அன்பின்பயனென்பர். (ரு)

அறத்திற்கே யன்புசார பென்ப வறியார்
மறததிற்கு மஃதே துணை.

(க-ரை.) அறியாதவர்கள் அறததிற்கே அன்பு துணையெனபர், மறத்தை நீக்குதற்கும அவவனபே துணையாம். (௬)

என்பி லதனை வெயிற்போலக் காயுமே
யன்பி லதனை யறம்.

(க-ரை.) என்பில்லாப்புழுக்களைச் சூரியன் சுடுதல்போல அன்பில்லாவுயிர்களை அறக்கடவுள்சுடும்.

அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்
கண், வற்றன் மரந்தளிர்த் தற்று.

(க-ரை.) அன்பில்லாவுயிர்வாழ்க்கையானது வன்னிலத்திற்பட்டமரம் தளிர்த்தாற்போலும். (௮)

புறத்துறுப் பெல்லாமெவன் செய்யும்யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

(க-ரை.) உள்ளன்பு இல்லாதார்க்குப் பிறவுறுப்புக்கள் இருந்து பயனில்லை. (௯)

அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல போாத்த வுடம்பு.

(க-ரை.) அன்பொடுபொருந்தியவுடலே உயிருள்ளவுடலாகும், அவவன்பிலலாவுடலே உயிரற்றவுடலாகும். (௧௦)

## கூ-ம். அதி.—விருந்தோம்பல்.

அஃதாவது விருந்தினரையுபசரித்தலாம்.

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம விருந்
தோமபி, வேளாண்மை செய்தற் பொருட்டு.

(க-ரை.) இல்வாழ்க்கையில் வாழ்வதெல்லாம் விருந்தினரைக்காப்பாற்றும பொருட்டு. (க)

விருந்து புறத்ததாத் தானுண்டல சாவா
மருகதெனினும வேண்டற்பாற் றன்று.

(க-ரை.) வந்தவிருந்தினரைப் புறம்வைத்துத் தேவாமிாதமாகினும் உண்ணப்படாது. (உ)

வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
ருவாகது பாழ்படுத லின்று.

(க-ரை.) வந்தவிருந்தினரைக் காப்பாற்றுபவன் வாழ்க்கை கெடுதல் இல்லை. (ங)

அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
லவிருந் தோம்புவா னில்.

(க-ரை.) விருந்தினரைக்காப்பவன்வீட்டில் இலக்குமி வாசம்பண்ணுவாள். (ச)

வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந
தோமபி, மிச்சின் மிசைவான் புலம.

(க-ரை.) விருந்தினரைக் காப்பவன் விளைநிலம தானே விளையும். (ரு)

செலவிருந் தோமபி வருவிருநது பார்த்திருப்
பா, னல்விருநது வானத தவர்கரு.

(க-ரை.) வந்தவிருந்தாளிகளைக்காப்பாற்றிவரும் விருந்தாளிகளுக்கு எதிர்பார்த்திருப்பவன தேவர்களுக்கு விருந்தாளியாவான். (சு)

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்
தின், றுணைத்துணை வேள்விப பயன்.

(க-ரை.) விருந்தோமபலாகிய வேள்வியின் பயனுக்கு அளவில்லை அவவிருந்தினர் தகுதியளவே அளவாம். (எ)

பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருநதோ
ம்பி, வேள்வி தலைபபடா தார.

(க ரை.) விருந்தாளிகளைக் காப்பாற்றாதார், பொருளைக்காப்பாற்றி இழந்தோம் என்பார். (அ)

உடைமையு ளின்மை விருநதோம்ப லோம்
பா, மடமை மடவார்க ணுண்டு.

(க-ரை.) செல்வத்துள் வறுமையாவது விருந்தினரை உபசரியாமை. அது அறிவில்லாரிடத்து உண்டு. (கூ)

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும விருநது.

(க-ரை.) அனிச்சப்பூ மோந்த இடத்து வாடும், விருந்தினாமுகம் வேறுபட்டுப்பார்க்க வாடும். (க0)

## கo-ம். அதி.— இனியவைகூறல்.

அஃதாவது - மனதிலுள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிற இனியசொல்லுகளைச சொல்லுதலாம.

---

ின்சொலா லீர மளைஇப படிறிலவாஞ்
செமபொருள் கணடாாவாய்ச சொல.

(க-ரை.) அறத்தின்வழியை அறிந்தவரது வாய்ச்சொற்களே இனியசொற்களாம. (க)

அகனமாந் தீதலி னன்றே முகனமாந
தின்சொல னாகப பெறின்.

(க-ரை.) முகம் மலாந்து இனியசொற்களைச் சொல்லுவானாகில் அது அகம்மலாந்து கொடுத்தலினும் நல்லது. (உ)

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம்.

(க-ரை.) தருமமானது இன்சொல்லினிடத்ததே.

துன்புறூஉந துவ்வாமை யில்லாகும் யார்
மாட்டு, மின்புறூஉ மின்சொ லவாக்கு

(க-ரை.) இனிய சொற்களையுடையவாக்குத் துன்பம் இலலை. (ந)

பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(க ரை.) ஒருவனுககு இன்சொல்லே ஆபரணம்.

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின

(க ரை.) ஒருவன் இன்சொற்சொல்லுவானாகில் பாவமதேயப் புண்ணியம் வளரும. (சு)

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல

(க-ரை.) இனிய சொற்களானவை நீதியையும் தருமத்தையும் தரும. (எ)

சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

(க-ரை.) இன்சொற்களானவை இருபிறப்பிலும் இன்பததைத்தரும். (அ)

இன்சொ லினிதீன் றல காண்பா னெவன்
கொலோ, வன்சொல வழங்கு வது

(க-ரை.) இன்சொல் இன்பத்தைத் தரக்காண்ப வன வனசொல் சொல்லுவது என்ன? (கூ)

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவார் தற்று.

(க-ரை.) இன்சொல்லிருக்கவன்சொல்சொல்லு தல் கனியிருக்கக் காயைத்தின்றற்போலும். (கo)

## ௧௧-ம். அதி.—செய்ந்நன்றியறிதல்.

அஃதாவது - தனக்குப் பிறர்செய்த நன்றியை மறவாமையாம.

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

(க-ரை.) ஒருவன் பிறர் உதவிவேண்டாது செய்த உதவிக்கு மண்ணுலகத்தையும விண்ணுலகத்தையும தந்தாலும ஒத்தல் அரிது. (௧)

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது

(க-ரை.) ஒருவன காலத்திற்செய்த உதவி சிறிதாயினும் அது உலகினும்பெரிது. (௨)

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது.

(க-ரை.) பின்வரும் பலனையெண்ணாமல் செய்த உதவியினது நன்மை, கடலினும்பெரிது. (௩)

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்கொள்வர் பயன்றெரி வார்.

(க-ரை.) தினையளவு நன்றிசெய்தாலும் பனையளவு நன்றியாகக்கொள்வர் பெரியோர். (௪)

உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து

(க-ரை.) உதவிக்கு அளவு இல்லை, உதவிசெய யப் பெறறுக்கொணடவா மகிழ்ச்சியளவே அள வாம். (௫)

மறவறக மாசற்றா கேண்மை துறவற்க
துனபததுட டுபபாயாா நட்பு.

(க-ரை.) குற்றமற்றவரது சிநேகததை மறவாதி ருககக்கடவன, துனபகாலததது உதவியானவரது சிநேகததை விடாதிருக்கக்கடவன். (௬)

எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைததவா நட்பு.

(க-ரை.) துனபத்தை நீக்கினவரது சிநேகத்தை எழுபிறப்பினும நினைப்பா பெரியோா. (௭)

நன்றி மறபபது நன்றன்று நன்றலல
தன்றே மறபபது நனறு.

(க-ரை.) பிறர்செய்த நன்றியைமறப்பது தரும மல்ல பிறாசெய்ததீமையை மறப்பதுதான் தருமம்.

கொன்றன்ன வின்னா செயினு மவாசெய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும.

(க-ரை.) நன்மைசெய்தவர் கொன்றாற்போலுந் துன்மைசெய்யினும, அவர்முன்செய்த நன்மை யொன்றை நினைக்க அத்துன்மையெல்லாம்கெடும்.

எநநன்றி கொன்றார்ககு முய்வுண்டா முய்
விலலை, செய்நன்றி கொன்ற மகற்கு.

(க-ரை.) எவ்வகைத்த தருமங்களை அழித்தவர்களுக்கும ஈடேறும்வழியுண்டாம. செய்தநன்றியைக் கெடுத்தவர்களுக்கு ஈடேறுமவழியில்லை. (௧௦)

## ௧௨ ம். அதி.—நடுவுநிலைமை.

அஃதாவது - பகைவர் அயலோர நட்பினர இம மூவகையோரிடத்தும அறத்தினவழுவாமல ஒப்ப நிறகுநிலைமையாம்.

தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப பெறின

(க-ரை.) நடுவு நிலைமை என்று சொல்லும அறமே நல்லதாம. (௧)

செபப முடையவ ஞக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப புடைத்து.

(க-ரை.) நடுவுநிலைமையுடையவனசெல்வமானது அவன சநததிக்கு உறுதியுடைத்து. (௨)

நன்றே தரினு நடுவிகந தா மாக்கத்தை
யனறே யொழிய விடல.

(க-ரை.) நடுவுநிலைமையில்லாதுவருஞ்செல்வம் நன்மையைத்தரினும அதை அப்பொழுதே விடக்கடவன். (௩)

தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப படும.

(க-ரை.) நடுவுநிலைமையுடையவர் நடுவுநிலைமை யில்லாதவர் எனபதைச சந்ததியால காணலாம.

கேடும பெருக்கமு மில்லலல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

(க-ரை.) பெரியோர்க்கு நடுவுநிலைமையே அழகு.

கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின்

(க-ரை.) நடுவுநிலைமை நீங்குவானாயின் கெடக் கடவன் எனறு அறியக்கடவன். (சு)

கெடுவாக வையா துலக நடுவாக
நின்றுக்கட் டங்கியான் றாழ்வு.

(க-ரை.) நடுவுநிலைமையில் நின்றவனது வறுமை யைப் பெரியோர தாழ்வாகநினையார். (எ)

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்
தொருபாற், கோடாமை சான்றோர்க் கணி.

(க-ரை.) ஒருவர் பக்கமும் சாயாமையே பெரி யோர்க்கு அழகு. (அ)

சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மினமை பெறின்.

(க-ரை.) சொல்லினிடத்தே கோணுதலில்லா மையே நடுவுநிலைமை. (கூ)

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப
பிறவுந தமபோற் செயின்

(க-ரை.) பிறர்பொருளையும் தமது பொருளைப் போலக்காதது வியாபாரஞ்செய்யில் அதுநல்லவி யாபாரமாம். (௱)

## கந-ம். அதி.—அடக்கமுடைமை.

அஃதாவது - காயமும், வாக்கும், மனமும, தீய வழியிலே செல்லாமல் அடங்குதலுடையனாயிருத் தலாம்.

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
பாரிரு ளுய்த்து விடும்.

(க-ரை.) அடக்கமானது ஒருவனைத் தேவருல கத்திற்செலுத்தும், அடங்காமையானது நரகத்திற செலுத்தும. (க)

காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங்கில்லை யுயிர்க்கு.

(க-ரை.) அடக்கத்தைக் காக்கக்கடவன் மக்களு க்கு அதைவிட செல்வம் இல்லை. (உ)

சறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
ாற்றி னடங்கப் பெறின்.

(க-ரை.) ஒருவன் அடங்கி நடப்பானாகில் அவ னுக்கு அவவடக்கம் மேன்மையைததரும். (ங)

நிலையிற் றிரியா தடங்கியான ேறாற்ற
மலையினு மாணப் பெரிது

(க-ரை.) அடங்கிநடப்பவன் அடக்கம மலையைப் பாரககினும மிகப்பெரிது. (ச)

எலலாாக்கு நன்றும பணித லவருள்ளுஞ்
செலவாககே செலவ தகைத்து.

(க-ரை.) அடக்கம் யாவாக்கும் நல்லதாகும், அது செல்வாககு வேறுசெலவமபோலிருக்கும.

ஒருமையு ளாமைபோ லைநதடக்க லாற்றி
னெழுமையு மேமாப புடைத்து

(க-ரை.) ஒருவன ஐம்பொறியடக்க வல்லவனு கில் அது ஏழுபிறப்பிற்கும் உறுதியுடைத்தாம.

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்ப சொலலிழுக்குப் பட்டு.

(க-ரை.) நாவொனறையேகாக்கக்கடவர்,காவாக் கால் சொற்குற்றம பொருநதித் துன்பப்படுவா.

ஒன்றானுந் தீச்சொற் பொருடபய னுணடாயி
னனறாகா தாகி விடும.

(க-ரை.) கொடுஞ்சொல்லொன் றுஉணடாயின அவனுக்கு நன்மை உண்டாகாது. (அ)

தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

(க-ரை.) தீயாற்சுட்டபுண ஆறும் நாவாற்சுட் டபுண ஆறாது. (கூ)

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

(க-ரை.) கற்று அடங்கவல்லவனையிருப்பவனி-த்து அறக்கடவுள் அடைவன. (க0)

## கச-ம். அதி.—ஒழுக்கமுடைமை.

அஃதாவது - தங்கள் தங்கள் வருணாசிரமங்களுக்குச் சொல்லப்பட்ட ஆசாரத்தை உடையவராயிருக்கையாம்.

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

(க-ரை.) ஆசாரமானது சிறப்பைத்தரலால் அவ்வாசாரம் உயிரினும் மேலானது. (க)

பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்
தோம்பித், தேரினு மஃதே துணை.

(க-ரை.) ஆசாரத்தைக்காக்கக்கடவன அவ்வாசாரமே துணை. (உ)

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

(க-ரை.) ஆசாரமேகுலமாம். அவ்வாசாரமில்லாமையே குலவீனமாம. (ங)

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்
பான், பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

(க-ரை.) பார்ப்பான வேதத்தை மறந்தாற் கற்றுககொள்ளலாம், ஆசாரங்குறைந்தால் அவன் குலங் கெடும. (ச)

அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயாவு.

(க-ரை.) பொருமையுள்ளவனிடத்துச் செல்வமில்லாமைபோல ஆசாரமில்லாதவனிடத்து மேன்மை இல்லை. (ரு)

ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம படுபாக் கறிந்து

(க-ரை.) ஆசாரமில்லாமையால் வருங்குற்றத்தையறிந்து பெரியோா அவவாசாரத்திற் குறையார். (சா)

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

(க-ரை.) ஆசாரத்தால்மேன்மை அடைவர் அவவாசாரமில்லாமையால் இழிவு அடைவா. (எ)

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொ
ழுக்க, மென்று மிடும்பை தரும.

(க-ரை.) ஆசாரமானது தருமத்திற்குக் காரணமாகும், தீயவாசாரமானது துன்பத்தைக் கொடுக்கும். (அ)

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்

(க-ரை.) நல்லொழுக்கமுள்ளவர்களுக்குத் தீய சொற்களைச் சொல்லுதல் கூடாவாம். (௯)

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

(க-ரை.) உலகத்தோடுபொருந்த நடத்தலைக் கல்லாதவர்கள் பல கற்றும் கல்லாதவர்களே. (௧0)

---

## கரு-ம். அதி.—பிறனில்விழையாமை.

அஃதாவது - காமமயக்கத்தினாலே பிறனது மனையாளை விரும்பாமையாம்.

---

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத், தறம்பொருள் கண்டார்க ணில.

(க-ரை.) பிறன்மனைவியை யிச்சித்து நடக்குந் தன்மையானது பெரியோரிடத்தில்லை. (க)

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில.

(க-ரை.) பிறன்மனைவியை இச்சித்து நடப்பவரைப்போல அறிவீனரில்லை. (உ)

விளிந்தாரின் வேறல்லா மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார்.

(க-ரை.) தெளிந்தவரது மனைவியிடத்திற்பாவஞ் செய்து நடப்பவர் உயிரோடிருந்தும் இறந்தவரே.

எனைத்துணைய ராயினு மெனணுந் தினைத்
துணையுந், தேரான் பிறனில புகல

(க-ரை.) தினையளவும அறியாதவனுகப் பிறன்ம
னையாளிடத்திற் செலலுதல் எவவளவுசிறப்புடை
யராயினும பிரயோசனமிலலை. (ரு)

எளிதெனை விலலிறபபா னெய்து மெஞ்ஞான
றும, விளியாது நிறகும பழி

(க-ரை.) பிறன் மனைவியிடததுச செலபவன
பழிப்பை அடைவான். (௫)

பகைபாவ மச்சம பழியென நான்கு
மிகவாவா மிலலிறப்பான கண.

(க-ரை.) பிறன்மனைவியைச் சோபவனிடததில்
பகை பாவம அச்சம் பழி இந்நானகு குறறங்களும்
விட்டு நீங்கா. (சா)

அறனியலா னிலவாழ்வா னென்பான பிறனி
யலாள், பெணமை நயவா தவன

(க-ரை.) பிறன்மனைவியைவிருமபாதவனே இல்
வாழ்வான எனனப்படுவான. (எ)

பிறன்மனை நோக்காத பேராணமை சான்
றோர்க், கறனென்றோ வானற வொழுக்கு.

(க-ரை.) பிறன்மனைவியை இச்சியாமையேபெ
ரியோாக்குத் தருமம். (அ)

நலக்குரியாா யாரெனி னமநீா வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தாா.

(க-ரை.) நன்மைக்குரியவாயாரென்றும் பிறன் மனைவியைசசேராதவாகளே. (௯)

அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரை
யாள், பெண்மை நயவாமை நன்று.

(க-ரை.) தருமததைச்செய்யாதவனுய்ப பாவத தைசசெய்யினும பிறன்மனைவியை விருமபாமை யே நனமை. (௧0)

## ௧௬-ம். அதி.—பொறையுடைமை.

*அஃதாவது - காரணமபறறியாவது அறியாமை யாலாவது ஒருவன்தமககுததீஙகுசெயதவிடததுத தாமும அதனை அவனுக்குச்செய்யாது பொறுதத லுடையராதலாம.*

அகழ்வாரைத் தாங்கு நிலமபோலத் தமமை
யிகழ்வார்ப் பொறுதத றலை.

(க-ரை.) வெட்டுவோரைத்தாஙகு நிலம்போல இகழ்வாரைப் பொறுத்துக்கொள்ளுதலே தலைமை யான தருமம. (க)

பொறுத்த லிறபபினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

(க-ரை.) பிறாகுற்றத்தைப் பொறுக்கக்கடவன், அக்குற்றததை மறததல் அப்பொறுமையினும நனமை. (உ)

இன்மையு ளின்மை விருந்தொரால வன்மை
யுள், வன்மை மடவாரப பொறை

(க-ரை.) தரித்திரத்திலே தரித்திரமாவது விருந்தினரைக் காப்பாற்றாமையே, வல்லமையிலே வல்லமையாவது அறிவீனர்செய்த குற்றத்தைப் பொறுத்தலே. (௩)

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறை
யுடைமை, போற்றி யொழுகப் படும.

(க-ரை.) நிறைவைவேண்டுவோனாகிற், பொறுமையைக் காக்கக்கடவன். (௪)

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து

(க-ரை.) பெரியோர்கள் பொறுமையில்லாரைப் பொருளாகநினையார், பொறுமையுள்ளோரையே பொருளாகநினைப்பார். (௫)

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்
தார்க்குப், பொன்றுந் துணையும் புகழ்.

(க-ரை.) பிறர்குற்றங்கண்டு தண்டித்தவர்க்கு ஒருநாளையின்பம, பொறுத்தவர்க்கு உலகம அழியுமளவும்புகழ். (௬)

திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

(க-ரை.) பிறர்செய்யத்தகாத கொடியவைகளைச் செய்தாலும் தான் தருமமல்லாதசெயல்களைச் செய்யாமைநல்லது. (௭)

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல.

(க-ரை.) மனச்செருக்கால் பிறர்தீமை செய்தா லும அவர்க்குத தீமைசெய்யாமல நனமைசெய்து பொறுமையாலவெல்க. (அ)

துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர்.

(க-ரை.) தீயவழியில நடப்பவர்துகொடுஞ்சொற் களைப் பொறுப்பவர் துறவிகள்போலப் பரிசுத்தகு ணமுடையவர். (கூ)

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொலலு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

(க-ரை.) தவத்தர் பசிநோயைப்பொறுப்பர், அவ ரும் பிறர்கொடுஞ்சொற்களைப் பொறுப்பவர்களுக் குப்பின்னவர். (க0)

## கஎ-ம். அதி.—~~பொறையுடைமை~~.

அஃதாவது - பிறர்செலவம்முதலானவை கண்ட விடதது பொறாமைப்படாமையாம.

---

ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்
சத், தழுக்கா றிலாத வியல்பு.

(க-ரை.) ஒருவன பொறாமையில்லாமையே நல் லவழியாகக் கொள்ளக்கடவன. (க)

விழுபபேற்றி னஃதொபப திலலை யாாமாட்டு
பழுககாறறி னனமை பெறின.

(க-ரை.) ஒருவன யாவரிடத்துமபொறுமையில்
லாமையைப் பெறுவானுகில அதைவிட வேறுபே
று இல்லை. (௨)

அறனுககம வேணடாதா னென்பான் பிறனுக்
கம, பேணு தழுக்கறுப பான

(க-ரை.) பிறனசெலவததைக்கணடு பொறுமை
கொள்வோன் மறுமைக்குத் தருமமும் இமமைக்
குச் செல்வமுமவேணடாதான எனறு சொல்லப்ப
டுவான. (௩)

அழுக்காற்றி னலலவை செய்யா ரிழுக்காற்றி
னேதம படுபாக் கறிநது.

(க-ரை.) பெரியோா பொறுமையாற் பாவஙக
ளைச்செய்யாா. (௪)

அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னர்
வழுக்கியுங் கேடீன் பது

(க-ரை.) பொறுமை கேட்டைத்தரும. (௫)

கொடுபப தழுக்கறுபபான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக கெடும.

(க-ரை.) பிறருக்குக் கொடுப்பதைக்குறிததுப்
பொறுமைகொள்பவனது சுற்றமானது, உடுக்க ஆ
டையும் உண்ணச்சோறும் இல்லாமற்கெடும். (௬)

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும.

(க-ரை.) பொறாமையுடையவனை இலக்குமியா
னவள் பொறாமைப்பட்டு மூதேவிக்குக் காட்டி
விட்டு நீங்குவாள். (எ)

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்

(க-ரை.) பொறாமையெனனும்பாவியானவன
பொறாமைகொண்டவனது செல்வத்தைக்கெடுத்து
அவனை நரகத்தில் தள்ளுவான். (அ)

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான
கேடு நினைக்கப் படும்.

(க-ரை.) பொறாமையுள்ளவன் செல்வமும் பொ
றாமையில்லாதவன வறுமையும் பழையவினையென்
று எண்ணப்படும். (௯)

அழுக்கற் றகன்றாரு மில்லை யஃதிலார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

(க-ரை.) பொறாமைபட்டுச் செல்வம்பெற்றா
ரும் இல்லை, பொறாமைவிட்டுச் செல்வம் நீங்கின
வரும் இல்லை. (க0)

## கஅ-ம். அதி.—வெஃகாமை.

அஃதாவது - பிறர்பொருளை வெளவுதற்கு நினை
யாமையாம்.

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்
றிக், குற்றமு மாங்கே தரும்

(க-ரை) நடுவுநிலைமையில்லாமல் பிறர்பொருளை இச்சித்தால் அவ்விச்சையானது குடியைக்கெடுத்துக் குற்றத்தையும் கொடுக்கும். (௧)

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்

(க-ரை) நடுவுநிலைமைக்கு அஞ்சுபவர் பொருளாலவரும் பிரயோசனத்தை விரும்பித் தீயசெயல்களைச் செய்யார். (௨)

சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்

(க-ரை.) பேரின்பத்தை இச்சிப்பவர் சிற்றின்பத்தை இச்சித்துத் தருமம் அல்லாதவற்றைச் செய்யார். (௩)

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்
வென்ற, புன்மையில் காட்சி யவர்

(க-ரை.) ஐம்புலன்களைவென்ற அறிவுடையவர் வறியோம் என்று பிறர்பொருளை விரும்பார். (௪)

அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

(க-ரை.) பொருளை இச்சித்துத் தீமையைச்செய்தால் அறிவின்பயனென்னவாம்? (௫)

அருள்வெஃகி யாற்றின்க ணின்றான்பொருள்
வெஃகிப், பொல்லாத சூழக் கெடும்.

(க-ரை.) அருளை இச்சித்து நின்றவனை, பொருளை இச்சித்துக்குற்றவழியை நினைக்கக்கெடுவான. (௬)

வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின
மாண்டற் கரிதாம பயன

(க-ரை.) பிறர்பொருளை அநுபவித்தல பயனபடாமையால் அதனைவிரும்பாதிருக்கக்கடவன. (௭)

அஃகாமை செலவத்திற் கியாதெனின வெஃ
காமை, வேணடும பிறனகைப பொருள.

(க-ரை.) குறையாத செல்வத்திற்குக காரணம யாதெனறால் பிறனபொருளை விருமபாமை. (௮)

அறனறிந்து வெஃகா வறிவுடையாச் சேருந்
திறனறிந் தாங்கே திரு

(க-ரை.) பிறனபொருளை இச்சியாத அறிவுடையவரை இலக்குமிசேருவாள். (௯)

இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும
வேணடாமை யென்னுஞ் செருக்கு.

(க-ரை.) ஒருவன பிறனபொருளை இச்சித்தால, அது அழிவைத்தரும, இச்சியாமை வெற்றியைத் தரும. (௧0)

---

௧௯-ம். அதி.—புறங்கூறாமை.

அஃதாவது - காணாதவிடத்தே பிறரை இகழ்ந்து பேசாமையாம.

அறங்கூறு னலல செயினு மொருவன்
புறங்கூறு னென்ற லினிது.

(க-ரை.) ஒருவன், தருமத்தைச செயயானுகி அதருமததைச செயயினும, பொறுமை சொலலா மையே நனமை. (க)

அறனழீஇ யலலவை செயதலிற் றீதே
புறனழீஇப் பொய்தது நகை

(க-ரை.) ஒருவனைக் காணுதவிடதது இகழ்ந்து, கணடவிடததுப் புகழ்நதுபேசுதல், தருமததை அழித்து அதருமததைசசெய்தலினும குறறம.(உ)

புறங்கூறிப பொய்ததுயிா வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந தரும.

(க-ரை.) ஒருவன, பிறனை முன் புகழ்ந்தும் பின் இகழ்ந்தும்பேசிஉயிாவாழ்தலினுமஇறத்தலேநனறு.

கணணின்று கண்ணறச் சொலலினுஞ் சொல
லற்க, முனனின்று பினனோக்காச சொல்.

(க-ரை.) ஒருவனை முன் இகழினும் பின் இகழா திருக்கக்கடவன. (ச)

அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்
சொலலும், புனமையாற காணப் படும.

(க-ரை.) தருமம் நன்றெனறு வாயினுற்சொல் லுபவனது மனதில் தருமம இல்லாமையை, அவ னது புறங்கூறுதலால அறியலாம். (ரு)

பிறனபழி கூறுவான றன்பழி யுள்ளுந
திறனறிநது கூறப் படும.

(க-ரை.) பிறனது குற்றத்தைச்சொல்லுவோனது குற்றம் பிறனால் சொல்லப்படும். (௬)

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

(க-ரை.) சிநேகஞ்செய்தலை அறியாதவர்கள் புறங்கூறி யாவர்க்கும் பகையாவர். (௭)

துன்னியார் குற்றமுந் தூற்று மரபினார்
என்னைகொ லேதிலார் மாட்டு.

(க-ரை.) உறவினர் குற்றத்தைத் தூற்றுவோர் அயலார் குற்றத்தை எப்படித் தூற்றார்? (௮)

அறநோக்கி யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

(க-ரை.) பூமியானது பொறுமை கூறுவோனது உடலைத் தருமத்தைக் கருதிச் சுமப்பதுபோலும்.

ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்
பிற், றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

(க-ரை.) அயலார் குற்றத்தைப்போலத் தங்குற்றத்தை ஆராய்வாராகில் குற்றம் இல்லை. (௧௦)

## ௨௦-ம். அதி.—பயனிலசொல்லாமை.

அஃதாவது - தமக்கும் பிறர்க்கும் அறம்பொருள் இன்பங்களுள் ஒன்றையும் தாராத சொற்களைச் சொல்லாமையாம்.

பலலார் முனியப பயனில சொலலுவா
னெலலாரு மெள்ளப படும.

(க-ரை.) பயனிலலாச சொறகளைச சொல்பவன் யாவராலும் இகழப்படுவான. (க)

பயனில பலலாரமுற் சொலலல நயனில
நட்டார்கட் செய்தலிற் றீது

(க-ரை.) பயன்படாச்சொற்களைச் சொல்லுதல் சிநேகரிடத்து நீதியில்லாதவைகளைச செயதலினும, குற்றம. (உ)

நயனில னெனபது சொலலும பயனில
பாரித் துரைக்கு முரை

(க-ரை.) பயனிலலாப்பொருளை விரித்துச்சொல்லல, நீதியிலலாதவனெ னெனபதை அறிவிக்கும. (ந)

நயன்சாரா நன்மையி னீக்கும பயன்சாராப
பண்பில்சொற பலலா ரகத்து.

(க-ரை.) பயனிலலாச சொறகள் நறகுணங்களை நீக்கும. (ச)

சீரமை சிறபொடு நீங்கும பயனில
நீர்மை யுடையார் சொலின்

(க-ரை.) நறகுணமுடையோர் பயனிலலாச சொறகளைசசொனனால அவர்மேனமை குறையும.

பயனிலசொற் பாராட்டு வானை மகனெனன்
மககட் பதடி யெனல

(க-ரை.) பயன்படாசசொறகளைச் சொலபவனை மக்களுக்குள்ளே பதரென்று சொலக. (சு)

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

(க-ரை.) அறிவுடையோர்நீதியிலாச்சொற்களைச் சொன்னாலும் பயனிலாச் சொற்களைச்சொல்லாமை நன்று. (எ)

அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

(க-ரை.) அறிவுடையோர் பயன்படாச் சொற்களைச் சொல்லார். (அ)

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த, மாசறு காட்சி யவர்.

(க-ரை.) குற்றமற்ற அறிவுடையோர் பயனிலாதசொற்களை மறந்தும் சொல்லார். (கூ)

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்
லற்க, சொல்லிற் பயனிலாச் சொல்

(க-ரை.) பயனுடையசொற்களைச் சொல்லக்கடவர், பயனிலாச் சொற்களைச் சொல்லாதிருக்கக் கடவர். (௨0)

## உக-ம். அதி.—தீவினையச்சம்.

அஃதாவது - பாவங்களாயுள்ளவைகளைச் செய்தற்கு அஞ்சுதலாம்.

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

(க-ரை.) பாவத்துக்குத் தீவினையாளர் பயப்படார், நல்வினையாளர் பயப்படுவார். (க)

*தீயவை தீய பயத்தலாற் றீயவை*
*தீயினு மஞ்சப் படும்.*

(க-ரை.) பாவமானவை துன்பங்களைக் கொடுத்தலால, அவைகள் அக்கினியிலும் கொடியன. (உ)

*அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய*
*செறுவார்க்குஞ் செய்யா விடல்.*

(க-ரை.) தம்மை வருத்துவோரிடத்தும் துன்பங்களைச்செய்யாமல்விடுதல், எல்லா அறிவினுள்ளும் தலைமை. (ங)

*மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி*
*னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.*

(க-ரை.) ஒருவன் மறந்தும் பிறனுக்குக் கேட்டை நினையாதிருக்கக்கடவன், நினைப்பானாகில் அவனுக்குத் தருமக்கடவுள் கேட்டைநினைக்கும். (ச)

*இலனென்று தீயவை செய்யற்க செய்யி*
*னிலனாகு மற்றும் பெயர்த்து.*

(க-ரை.) வறுமையாலே தீமைசெய்யாதிருக்கக் கடவன், செய்வானாகில் பின்னும் வறியவனாவன்.

*தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்*
*பால, தன்னை யடல்வேண்டா தான்.*

(க-ரை.) பாவங்கள் பின்பு தன்னைவருத்துதலை இச்சியாதவன் பாவங்களைப் பிறரிடத்துச் செய்யா திருக்கக்கடவன். (சு)

எனைப்பகை யுற்றாரு முய்வா வினைப்பகை
வீயாது பின்சென் றடும

(க-ரை.) எவ்வகைப்பகையை அடைந்தவர்களும் கடைத்தேறுவா, தீவினைப்பகையை அடைந்தவா கள் கடைத்தேறா. (௭)

தீயவை செய்தார் கெடுத லிழறன்னை
வீயா தடியுறைந் தற்று

(க-ரை.) தன்னிழலானது நெடுந்தூரம சென்றும தன்னடியிலே தங்கியதுபோலத தீவினைகளும தன்னோடு தங்கும். (௮)

தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்
றுந், துன்னற்க தீவினைப் பால.

(க-ரை.) தன்னைக்காக்கவிரும்பினால் பிறனிடத்தில் எவ்வளவும் பாவம செய்யாதிருக்கக்கடவன.

அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

(க-ரை.) ஒருவனபாவம் செய்யாதிருப்பானாகில் கேடில்லாதவன என்று அறியக்கடவன. (௧௦)

## ௨௨-ம். அதி.—ஒப்புரவறிதல்.

அஃதாவது-உலகநடையை அறிந்துசெய்தலாம்.

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

(க-ரை) மேகங்களுக்கு ஒப்பானவர் செய்யும உபகாரங்கள, பிரதிஉபகாரங்களைவேண்டுவனவல்ல.

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(க-ரை.) முயற்சிசெய்து சம்பாதித்தபொருளெல்லாம் உபகாரம் செய்யும்பொருட்டு. (உ)

புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

(க-ரை.) விண்ணுலகத்தும் மண்ணுலகத்தும உபகாரத்தைப்போலவேறொன்று இல்லை. (௩)

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்

(க-ரை.) உலகின இயல்பை அறிந்து நடப்பவன் உயிரோடு வாழ்பவன், அவ்வியல்பை அறியாதவன செத்தவன. (௪)

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

(க-ரை.) அறிவாளர் செல்வமானது ஊரார் உண்ணுங்குளத்திலே நீர்நிறைந்தாற்போலும். (௫)

பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின.

(க-ரை.) செல்வம் உபகாரம்செய்பவரிடத்தில் உண்டாகில நடுவூரிலே மரம்பழுத்தாற் போலும.

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

(க-ரை.) செல்வம் பெரியோரிடத்து உண்டா
கில் அது மருந்தாகி நிற்கும் மரத்துக்கு ஒப்பாகும்.
இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

(க-ரை.) அறிவுடையோர் வறுமையிலும் உதவி
செய்தற்குக் குறைவுபடார். (அ)

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர்மை
செய்யா தமைகலா வாறு.

(க-ரை.) உபகாரிக்கு வறுமையாவது உதவி செய
தற்கு ஏலாமையால் வருந்துயரமே. (கூ)

ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொரு
வன், விற்றுக்கோட் டக்க துடைத்து.

(க-ரை.) ஒருதவிசெய்தலால் கேடுவருமெனில்,
அவ்வுதவியைத் தன்னைவிற்றாகினும் செய்யக்கட
வன். (க0)

## உ௩-ம். அதி.—ஈகை.

அஃதாவது - வறியவராய் இரந்தவர்க்கு இல்லை
யெனுமல் கொடுத்தலாம்.

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து

(க-ரை.) தரித்திரருக்குக் கொடுத்தலே கொடையாகும், மற்றவர்களுக்குக்கொடுத்தல் பின்வாங்கிக்கொள்ளும் பயனாகும். (௧)

நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

(க-ரை.) யாசித்தல் நல்லது என்றாலும் வாங்குதல் குற்றமே, கொடுத்தலால் முத்தி இல்லை என்றாலும் கொடுத்தல் நல்லதே. (௨)

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

(க-ரை.) நற்குடியில் பிறந்தவரிடத்தில் இல்லையென்னாமையும், கொடுத்தலும் உண்டு. (௩)

இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு

(க-ரை.) இரப்பவர் இனிய முகத்தைக் காணுமளவும் இரத்தலும் துன்பம். (௪)

ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.

(க-ரை.) தவத்தோர்க்குப் பசியைப்பொறுத்தல் வல்லமை, அவ்வல்லமையிலும் பசியை ஆற்றுவோர் வல்லமைபெரிது. (௫)

அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

(க-ரை.) பொருள்பெற்றவன் வறியவர்பசியைத் தீர்த்தலே அவன் பொருள்வைக்கும் இடம். (௬)

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

(க-ரை.) பிறருக்கு இட்டு உண்ணுவோனைப்பசி நோய் தீண்டாது. (எ)

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

(க-ரை.) பொருளைத் தேடிவைத்து இழப்பவர் கொடுத்து மகிழும் இன்பத்தை அறியார். (அ)

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

(க-ரை.) பிறருக்குக் கொடாமல் தாமே உண்ணுதல் யாசிப்பதிலும் துன்பம். (கூ)

சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை.

(க-ரை) இறத்தலைவிடத் துன்பம் இல்லையாயினும், யாசிப்பவாக்குக்கொடுக்க இசையாதகாலத்து இறத்தலே இன்பமதரும். (க0)

## உச-ம். அதி.—புகழ்.

அஃதாவது - இல்வாழ்க்கைமுதல் ஈகை ஈறாகச் சொல்லப்பட்ட இல்லறததில் தவறாதவர்க்கு இம்மைப்பயனாகி இவவுலகத்திலே செய்தபடியே நிற்பதாகிய கீர்த்தியாம்.

ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

(க-ரை.) கொடுத்தலால் கீர்த்தியுண்டாக வாழக்கடவர் அக்கீர்த்தியை அல்லாமல் மக்களுயிர்க்கு இலாபம் இல்லை. (௧)

உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்
கொன், றீவார்மே னிற்கும் புகழ்

(க-ரை.) கொடுப்பவரிடத்திலேதான் கீர்த்தி நிற்கும். (௨)

ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில.

(க-ரை.) உலகத்தில் அழியாமல் நிற்பது புகழே அல்லாமல் வேறொன்று இல்லை. (௩)

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

(க-ரை.) உலகில் அழியாது நிற்கும் புகழை ஒருவன் செய்வானாகில், தேவலோகம் தேவர்களைத் துதியாது அவனையே துதிசெய்யும். (௪)

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

(க-ரை.) புகழுடம்பிற்குப் பெருக்கமாகும் வறுமையும், அவ்வுடம்பு நிலைபெறுவதாகும் மரணமும் அறிவில்லார்க்கு இல்லை. (௫)

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(க-ரை.) பிறந்தாலபுகழோடுபிறக்கக்கடவா, அவ வாறில்லாதவாகள் பிறவாமையே நலலது. (௬)

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

(க-ரை.) புகழுணடாக வாழாதவா தம்மை இகழநதவரை நொநதுகொள்வது என்ன? (௭)

வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசை
யென்னு, மெச்சம் பெறாஅ விடின்.

(க-ரை.) ஒருவன கீாததி என்னும் பிள்ளையைப் பெறுமலிருப்பானாகில், உலகிற்குவசையாம. (௮)

வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம.

(க-ரை.) கீாததி இல்லாத உடலைச்சுமந்த நிலத் தில் விளைவு குறையும். (௯)

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொ
ழிய, வாழ்வாரே வாழா தவா.

(க-ரை.) கீாததியுடன் வாழபவா உயிரோடுவாழ் பவா, அக்கீாததியினறி வாழ்பவா இறநதவா. (௧௦)

இலலறவியல முறறிற்று.

## துறவறம்.

துறவறமாவது - முன்சொல்லப்பட்ட இல்லறத்தின வழுவாது நடந்து அறிவுடையாராய்ப் பிறப்பினை அஞ்சி முத்திபெறுதற்பொருட்டுத் துறந்தவர்க்கு உரித்தாகிய அறமாம். அதுவிரதமும, ஞானமும என இருவகைப்படும்.

## விரதம்.

அதாவது - வினைமாசுதீர்ந்து அந்தக்கரணங்கள் பரிசுத்தமாதற்பொருட்டு இன்ன அறங்களைச்செய்வேனென்றும், இனன பாவங்களை விடுவேனென்றும, தமதுவல்லமைக்கு ஏற்க அளவுசெய்து கொண்டு துறநதோராலே காப்பாற்றப்படுவது.

### ௨௫-ம். அதி.—அருளுடைமை.

அஃதாவது - தொடாபுபற்றுமல் இயல்பாக எல்லா உயிர்களின்மேலும் செல்வதாகிய கருணையை உடையராதலாம.

அருட்செலவஞ் செலவத்துட் செலவம் பொருட்செலவம, பூரியார் கண்ணு முள.

(க-ரை.) கிருபையால் வருஞ்செல்வமே செல்வமாகும், பொருளால்வருஞ்செல்வங் கீழோரிடத்தும் உண்டு. (க)

நல்லாற்ற ளுடி யருளாள்க பல்லாற்றுந்
தேரினு மஃதே துணை.

(க-ரை.) நல்வழியிலேநின்று கிருபையை ஆளக்கடவர், பலவழியில் ஆராயினும அவவருளே துணை.

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்
சேர்ந்த, வின்னா வுலகம் புகல்.

(க-ரை.) கிருபைபொருந்திய மனமுடையோர் நரகத்தில் புகுதல் இல்லை. (௩)

மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

(க-ரை.) பிறவுயிாகளிடத்துக் கிருபையுடையவனுக்குத் தன்னுயிா பயப்படும் பாவம் இல்லை. (௪)

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

(க-ரை.) கிருபையுடையவர்களுக்குத் துன்பம் இல்லை. (௫)

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரரு
ணீங்கி, யல்லவை செய்தொழுகு வார.

(க-ரை.) அருளைவிட்டுப்பாவஞ்செய்பவரை மறுமைப்பொருளை மறந்தவர் என்பர். (௬)

அருளிலாாக் கவ்வுலக மில்லைப் பொருளி
லாாக், கிவ்வுலக மில்லா கியாங்கு.

(க-ரை.) பொருளில்லாதவர்க்கு இவவுலகத்தின்பம் இல்லாமைபோல் அருளில்லாதவாக்கு அம்மேலுலகத்தின்பம் இல்லை. (௭)

பொருளற்றூா பூப்ப ரொருகா லருளற்று
ரற்றுமற் ருத லரிது

(க-ரை.) பொருளற்றவர் ஒருகாலத்தில் செல்வமபெறுவா, அருளற்றவா அழிந்தவரே. (அ)

தெருளாதான் மெய்ப்பொருள் கணடற்றுற்
றேரி, னருளாதான் செய்யு மறம்.

(க-ரை.) அருளில்லாதவன் செய்யும்தருமத்தை ஆராய்ந்து பாாக்கில், மெய்ஞ்ஞானம இலலாதவன் உண்மைப் பொருளைக் கன்டாறபோலும். (கூ)

வலியாமுற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியாாமேற் செலலு மிடத்து.

(க-ரை.) வலியவன் மெலியவனை வருத்தச்செல்லும்போது தனனிலும் வலியவன தனனை வருத்தியதை நினைக்ககடவன் என்பதாம. (௧0)

உகூ-ம். அதி.—புலான்மறுத்தல்.

அஃதாவது - ஊன உண்ணுதலை ஒழித்தலாம்.

தனனூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்
பா, னெங்ஙன மாளு மருள்.

(க-ரை.) தனனுடல பெருத்தற்குப்பிறவுடலைத்தின்பவன்எவவகையால்கிருனபயுடையவனுவான்?

பொருளாட்சி போற்றாதார்க் கிலலை யருளாட்சி, யாங்கிலலை யூன்றின் பவர்க்கு.

(க-ரை.) பொருளைக்காப்பாற்றாதவர்க்குப் பொருளின்பம் இல்லை, அதுபோல அருளைக்காப்பாற்றாதார்க்கு அருளின்பம் இலலை. (உ)

படைகொண்டார் நெஞ்சமபோ னன்றூக்கா தொன்ற, னுடலசுவை யுண்டார் மனம.

(க-ரை.) ஊன் தினபவர்களது மனமானது நன்மையை விரும்பாது. (ந)

அருளல்ல தியாதெனிற் கொலலாமை கோறல், பொருளலல தவ்வூன் றினல.

(க-ரை.) கொல்லாமையே கிருபையாம, கொல்லுதலே பாவமாம், ஆதலால் ஊன உண்ணல் பாவமாம். (ச)

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண வண்ணாத்தல் செய்யா தளறு.

(க-ரை.) ஒருவன்ஊனுண்பானாயின் அவனை நரகம் விழுங்கிவிடும. (ரு)

தினற்பொருட்டாற் கொலலா துலகெனின் யாரும், விலைப்பொருட்டா லூனறருவா ரில்.

(க-ரை.) ஊனைவாஙகுபவர் இல்லாதிருந்தால் அதை விற்பவர் யார்? (சா)

உண்ணாமை வேண்டும புலாஅல் பிறிதொன் றன், புணண துணாவார்ப பெறின்.

(க-ரை.) ஊன் பிறவுடலின புணணென்றறிந்தவர்களைப்பெற்றால் அதனைஉண ணாதிருக்கவேணடும.

செயிரிற் றலைபபிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

(க-ரை.) அறிவுடையோர் ஊனதின்னா. (அ)

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று

(க-ரை.) ஆயிரம் யாகஞ்செய்தலினும் புலாலைத் தின்னாமைமிகநல்லது. (கூ)

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும.

(க-ரை.) ஊனைத்தின்னாதவனை எல்லாவுயிரும் வணஙகும. (க0)

---

## உஎ-ம். அதி.—தவம்.

அஃதாவது-மனம் பொறிவழிபோகாமல் நிற்கையின பொருட்டு விரதங்களினாலே உண்டிசுருக்குதல் முதலானசெயல்களை மேற்கொண்டு அவைகளால் தமமுயிர்க்கு வருந்துன்பங்களைப்பொறுத்துப் பிறவுயிர்களைக் காப்பாற்றலாம.

---

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண செய்
யாமை, யற்றே தவத்திற் குரு.

(க ரை.) தவத்திற்கு அழகானது பசிபொறுத்தலும் துன்பஞ்செய்யாமையுமேயாம். (க)

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

(க-ரை.) முற்பிறப்பில தவம செயதவருக்குத் தவம பலிக்கும். (உ)

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்
கொன, மற்றை யவாக டவம.

(க-ரை.) இலவாழவோா துறவிகளுக்கு உண்டியும, அருநதும இடமும உதவவேண்டித்தவத்தை மறந்தாரபோலும. (ங)

ஒன்னாத்தெறலு முவந்தாரை யாக்கலு
மெணணிற் றவத்தான் வரும.

(க-ரை.) சநதுருக்களைக் கெடுததலும், மித்துருக்களைக்காததலும தவவலிமையால்வரும். (ச)

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற்செய்தவ
மீண்டு முயலப படும்.

(க-ரை.) மறுமையில்வேண்டியபயன்களைஅடைதலால் இம்மையிலே தவமானது முயற்சிசெய்யப்படும. (ரு)

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வாரமற்
றல்லா, ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(க-ரை.) தவத்தோர் தவகாரியங்களைச் செய்வா மற்றவர் அவகாரியங்களைச் செய்வர். (சு)

சுடச்சுடரும பொன்போ லொளிவிடுந் துன்
பஞ், சுடச்சுட நோக்கிற் பவர்க்கு.

(க-ரை.) பொன்புடமிடப் பிரகாசிப்பதுபோலத் தவம்புரிவோர் துதவம் தவஞ்செய்யப்பிரகாசிக்கும்.

தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

(க-ரை.) தவத்தால் உயிர்பெற்றவனை எல்லாவுயிரும் வணங்கும். (அ)

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு.

(க-ரை.) தவவலிமையை அடைந்தவர்களுக்கு இயமனைவெல்லுதலும் பொருந்தும். (௯)

இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

(க-ரை.) பாக்கியர் சிலரும் நிர்ப்பாக்கியர் பலருமாக இருத்தற்குக்காரணம், தவம்செய்வார் சிலரும் அத்தவம் இல்லார் பலருமாக இருத்தலாம். (௧0)

## ௨அ-ம். அதி.—கூடாவொழுக்கம்.

அஃதாவது - தாம்விட்ட காமவின்பம் தம்மிடத்து உறுதியில்லாமையினாலே பின்னும்விரும்பும் வழிதோன்ற அவ்வழியேநின்று தவத்தோடு பொருந்தாத தீயவொழுக்கம்.

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

(க-ரை.) வஞ்சகனது பொய்யொழுக்கத்தை அவன ஐம்பூதஙகளும சிரிக்கும. (க)

வானுயா தோற்ற மெவன்செய்யுந தன்னெஞ் சந, தானறி குற்றப படின.

(க-ரை.) தன்னுளளம குற்றத்தில் படிந்தால் தனது உயாவானதவவேடம எனனபயனைச் செய்யும. (உ)

வலியி னிலைமையான வலலுருவம பெறறம் புலியின்றோல போாத்துமேயந தற்று.

(க-ரை.) தவவலிமையில்லாதவனது பொய்வே டமானது பசுவானது புலித்தோலைப் போாததுக் கொண்டு பயிரை மேய்ந்தாற்போலும். (ந)

தவமறைந்தலலவை செய்தலபுதன்மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(க-ரை.) தவவேடங்கொணடு ஒருவன பாவஞ் செய்தல் வேடன் புதரில்மறைந்து பறவைகளைப் பிடித்தல்போலும். (ச)

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற் றெற்றென், றேதம் பலவுந் தரும்.

(க-ரை.) பற்றுவிட்டோமென்பவர் பொய்யொ ழுக்கமானது பின்புதுன்பம்தரும். (ரு)

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணா ரில்.

(க-ரை.) துறந்தவர்போல வஞ்சித்து வாழ்பவரி னுங் கொடியவர் இல்லை. (சு)

புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

(க-ரை.) புறத்தில்குன்றி மணிபோல் சுத்தமும் அகத்தில அக்குன்றிமணிமூக்குப்போல களங்கமும் உடையவரை உலகமும உடைத்து. (எ)

மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்

(க-ரை.) களங்கம உள்ளத்திலிருக்க உடற்புறம் சுத்தமாக நீராடிககாட்டுவார பலர். (அ)

கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல.

(க-ரை.) அம்பு ஒழுங்காயிருந்தும் கொடுமை செய்யும் வீணைவளைந்திருந்தும் இனிமைசெய்யும், அதுபோலத் தவத்தோரை நடக்கையில் கண்டு கொளக. (கூ)

மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம
பழித்த தொழிந்து விடின்.

(க-ரை.) உலகம் பழித்ததை ஒழித்துவிட்டால் முண்டிதஞ்செய்தலும் சடைவளர்த்தலும் வேண்டாம். (கO)

## உகூம். அதி — கள்ளாமை.

அஃதாவது - பிறருடைமையாயுள்ளவைகளில் யாதொருபொருளேயும அவரையறியாமல் வஞ்சித்துக்கொள்ள நினையாமையாம.

எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்
தொன்றுங், கள்ளாமை காக்கதன னெஞ்சு.

(க-ரை.) முத்தியை இகழாமல் வேண்டுபவன் களவுசெய்யாமல் தன்னெஞ்சைக் காக்கக்கடவன.

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறனபொரு
ளைக், கள்ளத்தாற கள்வே மெனல்.

(க-ரை.) குறறங்களை நினைத்தலும்பாவமாதலின் பிறன்பொருளைக் களவுசெய்வோமெனறு எண்ணுதிருக்கக்கடவர். (உ)

களவினு லாகிய வாக்க மளவிறந
தாவது போலக் கெடும.

(க-ரை.) களவாலாகிய செல்வம் வளர்வதுபோலததோன்றிக கெடுமை. (ந)

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

(க-ரை.) களவை இச்சிக்கும இச்சையானது துன்பத்தைத்தருமை. (ச)

அருள்கருதி யன்புடைய ராதல பொருள்கரு
திப், பொச்சாப்புப் பாரபபார கணில.

(க-ரை.) பிறர்பொருளை இச்சிப்பவரிடத்து அருளும் அன்பும் இல்லை. (௫)

அளவின்கணின்றொழுக லாற்றார்களவின்கட்
கன்றிய காத லவர்.

(க-ரை.) களவில இச்சையுடையவர்கள் இருமை வழியிலே நடவார். (௬)

களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.

(க-ரை.) களவுசெயவோம் என்னும் அறிவுடைமையானது பெருமையுடையோரிடத்து இல்லை.

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

(க-ரை.) அறிந்தவரது நெஞ்சில் வளரும் அறத்தைப்போல, களவுசெய்வோரிடத்து வஞ்சனை வளரும். (அ)

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

(க-ரை.) களவு அல்லாதவற்றை அறியாதவர்கள் பாவங்களைச்செய்து கெடுவர். (௯)

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

(க-ரை.) களவு செய்வோர்க்கு நரகமும், களவு செய்யாதார்க்குச் சுவர்க்கமும் உண்டாம். (௧௦)

## ௩0-ம். அதி.—வாய்மை.

அஃதாவது - மெய்யினது தன்மையாம்.

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந், தீமை யிலாத சொலல.

(க-ரை.) சத்தியம் என்று சொல்லப்படுவது யாதொருதீமையும் சொல்லாது நன்மை சொல்லுதல்.

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்.

(க-ரை.) பொய்ம்மொழிகள் குற்றமற்ற நன்மையைத்தருமாகில், அவைகளுமமெய்மமொழிகளுக்கு ஒப்பாம். (உ)

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின் றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

(க-ரை.) தன்னெஞ்சறிவதைப் பொய்சொல்லாதிருக்கக்கடவன் பொய்சொனனல் தனனெஞ்சே தன்னைச்சுடும். (௩)

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா ருள்ளத்து ளெல்லா முளன்.

(க-ரை.) மனதிற்கு ஏற்கப் பொய்யாது நடப்பானகில் அவன் எல்லாருள்ளத்துமம இருப்பான். (௪)

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு தானஞ்செய் வாரிற் றலை.

(க-ரை.) உணமைசொல்லுவானுகில அவன தவம தானம செய்பவரினும் தலையாவன. (௬)

பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும.

(க-ரை.) பொயசொல்லாமைக்கு ஒப்பாகியபு கழ்சசி இல்லை, அது எல்லாததருமமுமகொடுக்கும.

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறமபிற
செய்யாமை செய்யாமை நன்று

(க-ரை.) பொய்சொல்லாது நடககில் வேறுதரு மமசெயயாமையே நலலது. (௭)

புறநதூய்மை நீரா னமையு மகநதூய்மை
வாய்மையாற் காணப படும.

(க-ரை.) உடமபு நீரால சுநதமாகும, உள்ளம் சத்தியத்தால சுநதமாகும. (௮)

எலலா விளக்கும விளக்கலல சானறோாக்குப
பொய்யா விளக்கே விளக்கு

(க-ரை.) உலகவிளக்குகள் எல்லாம விளக்குகள் அல்ல, பெரியோாக்குப பொயசொலலாமையே விளக்காம. (௯)

யாமெய்யாக் கணடவற்று ளிலலை யெனைத்
தொன்றும, வாய்மையி னலல பிற

(க-ரை.) மெயபோலும பிறதருமஙகளை யாம் கணடதிலலை (௧௦)

## ௩௰௧-ம். அதி.—வெகுளாமை.

அஃதாவது - கோபஞ்செய்தற்குக் காரணமாகிய குற்றம் ஒருவனிடத்தே உண்டாகியவிடத்தும்கோபம் செய்யாமையாம்.

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்
லிடத்துங், காக்கினென் காவாக்கா லென்

(க-ரை.) கோபம்செல்லுமிடத்துக் காப்பவனே கோபத்தைக்காப்பவன் அக்கோபம் செல்லாவிடத்துக்கோபத்தைக் காத்தால் என? காவாக்கால் என்? (க)

செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.

(க-ரை.) வலியவாமேல் கோபம்செலுத்தினால் அது தனக்கே குற்றமாம, எளியவாமேல் கோபம செலுத்தினால் அது அதனினும குற்றமாம. (உ)

மறத்தல் வெகுளியை யாா்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும

(க-ரை.) கோபத்தை மறக்கக்கடவர், அக்கோபத்தால பாவங்கள் உண்டாம். (௩)

நகையு முவகையுங் கொலலுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற

(க-ரை.) முகமலாச்சியையும் உள்ளமகிழ்ச்சியையும கோபம கெடுக்கும் அக்கோபத்தைவிட பகை வேறு இல்லை. (௪)

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்
கால், றன்னையே கொல்லுஞ் சினம்

(க-ரை.) தனனைக்காக்க நினைத்தால் கோபத
தைக் காக்கக கடவன் காக்காவிடில் அக்கோபம,
தன்னையே கொலலும். (ரு)

சினமெனனுஞ் சோ்ந்தாரைக் கொலலி யின
மென்னு, மேமப் புணையைச் சுடும.

(க-ரை.) கோபததீயானது தனனையும் தன்னி
னத்தையும சுடும. (சு)

சினத்தைப பொருளென்று கொண்டவன்
கேடு, நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

(க-ரை.) கோபத்தைப்பொருளாகக்கொண்டவ
னுடைய அழிவானது தரையிலஅறைந்தகை தப்
பாதுபடுதலபோலாம. (எ)

இணரெரி தோய்வன்ன வின்னு செயினும
புணரின் வெகுளாமை நன்று.

(க-ரை.) ஒருவன் துன்பமசெய்யினும அவன்
மேல்கோபியாமை நல்லது. (அ)

உள்ளிய வெலலா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

(க-ரை.) கோபததை நினையானுகில் அவன்
நினைத்தததெல்லாம அடைவான். (கூ)

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

(க-ரை.) கோபம கொணடவர் செததவரோடு ஒபபாவா, கோபம்கொளளாதவா இறப்பவராயினும இறவாதவரோடு ஒப்பாவா. (கo)

## ந௨-ம். அதி.—இன்னுசெய்யாமை.

அஃதாவது - தனக்கு ஒருபயனைக் குறித்தாவது வைரமபறறியாவது சோாவினாலாவது ஓருயிாக்கும துன்பமதரும அவைகளைசசெய்யாமையாம.

சிறபபீனுஞ் செலவம பெறினும பிறர்க்கின்னு
செய்யாமை மாசற்ருர் கோள்.

(க-ரை.) பிறர்க்குத் தீமைசெய்யாமையே பெரியோரது கொள்கையாம். (க)

கறுத்தின்னு செய்தவக கணணு மறுத்தின்னு
செய்யாமை மாசற்ருர் கோள்.

(க-ரை.) ஒருவன் துனபங்களைச் செய்தாலும் அவனுக்குத தாம துனபங்களைச் செய்யாமையே பெரியோரது கொள்கையாம். (உ)

செய்யாமற் செற்ருர்க்கு மின்னுத செய்தபி
னுய்யா விழுமந் தரும.

(க-ரை.) தனக்குத் துன்பம செய்தவர்க்குத் தான் துன்பம்செய்தல கேட்டைத்தரும. (ங)

இன்னு செய்தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல.

(க-ரை.) துன்பம் செய்தவரைத் தண்டிப்பதலாவது அவருக்கு இன்பஞ்செய்தலாம். (௪)

அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை

(க-ரை.) மன்னுயிர்க்குவந்த துன்பத்தைத் தன்னுயிர்க்குவந்தாற்போலப் பாராவிடத்து அறிவினால் உண்டாவது என்ன? (௫)

இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்

(க-ரை.) துன்பமென்று அறிந்தவற்றைப் பிறனிடத்துச் செய்யாமைவேண்டும். (௬)

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்
தானா, மாணாசெய் யாமை தலை

(க-ரை.) யாருக்கும் துன்பஞ் செய்பவற்றைச் செய்யாமைவேண்டும். (௭)

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொ
லோ, மன்னுயிர்க் கின்னா செயல்.

(க-ரை.) தன்னுயிர்க்குத் துன்பந் தருபவற்றை மன்னுயிர்க்குச் செய்வது என்னகாரணம்? (௮)

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்

(க-ரை.) முன்பு ஒருவருக்குத் தீமைசெய்தால் பின்பு அத்தீமை தனக்கேவரும். (௯)

நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்
செய்யார், நோயின்மை வேண்டு பவர்.

(க-ரை.) துன்பம் எல்லாந்துன்பஞ்செய்தவர்மே
லாகும், துன்பமில்லாமையை விரும்புவோர் துன்
பஞ்செய்யார். (௩௦)

## ௩௩-ம். அதி.—கொல்லாமை.

அஃதாவது - ஐயறிவுடையவை முதல் ஓரறிவு
டையவைகடையாகிய உயிர்களைச் சோர்வினாலும்
கொல்லுதல் செய்யாமையாம்.

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

(க-ரை.) தருமச்செய்கை யாதெனிற் கொலை
செய்யாமையாம், கொலைசெய்தல் பாவச்செய்கை
எல்லாவற்றையுந்தரும். (௧)

பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

(க-ரை.) கிடைத்தவற்றைப்பங்கிட்டு உண்டு பல
வுயிர்களைக் காப்பாற்றல் எல்லாதருமத்திலும் தலை
யானதருமம். (௨)

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று

(க-ரை.) கொல்லாமை நல்லது பொய்சொல
லாமை அதிலும் நல்லது. (௩)

நலலா றெனபபடுவ தியாதெனின் யாதொன்
றுங், கொலலாமை சூழு நெறி

(க-ரை.) நல்லவழியென று சொல்லபபடுவதுயா
தென்றால் யாதோருயிரையுங்கொல்லாமையாம.

நிலையஞ்சி நீத்தாரு ளெலலாங் கொலையஞ்சிக்
கொலலாமை சூழ்வான றலை.

(க-ரை.) கொலைக்கஞ்சிக் கொல்லாமையை மற
வாதவனே எல்லாருள்ளும் தலையாவான. (ரு)

கொல்லாமைமேற்கொண டொழுகுவான்வா
ழ்நாண்மேற், செலலா துயிருண் ணுங் கூற்று.

(க-ரை.) கொலைசெய்யாதவனவாழ்நாளின்மேல்
இயமன் செல்லமாட்டான. (சு)

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும வினை.

(க-ரை.) தான் ஒருயிரை நீக்கும்தொழிலைச் செய்
யா திருக்கக்கடவன். (எ)

நன்றாகுமாக்கம் பெரிதெனினுஞ்சான்றோர்க்
குக், கொன்றாகு மாக்கங் கடை

(க-ரை.) பெரியோருக்குக் கொலைசெய்துவரும்
செல்வம்கடை. (அ)

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து

(க-ரை.) கொலைத்தொழில் செய்வோர் அத்தொ
ழில் செய்யாதவரது மனதில்புலைத்தொழிலாராய்க்
காணப்படுவா. (கூ)

உயிருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

(க-ரை.) வறுமையும் பிணியும் உடையவரை முற்பிறப்பில் கொலைசெய்தவரென்று பெரியோர் சொல்லுவர். (கo)

---

## ஞானம்.

இனி அவவிரதங்களினாலே கரணங்கள் பரிசுத்தமானவிடத்து உண்டாவதும், மோட்சத்தைத் தருவதும் ஆகிய அறிவு.

---

### ௩௪-ம். அதி.—நிலையாமை.

அஃதாவது - தோற்றமுடையவையெல்லாம் நிலைபெறாத தன்மையவாம்.

---

நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(க-ரை.) நிலையில்லாப்பொருளை நிலையுடைமையாக நினைக்கும் புத்தியில்லாமை அறிவோர்க்கு இழிவு. (க)

கூத்தாட் டவைக்குழாத் தற்றேபெருஞ்செல்
வம், போக்கு மதுவிளிந் தற்று.

(க-ரை.) செல்வம்கூத்தாடுங் கூட்டம்போல் சேரும் அக்கூட்டம்கெடுதல்போல் செல்வங்கெடும்.

அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்

(க ரை.) செல்வம் பெற்றால் தருமஞ்செய்யக் கடவர். (௩)

நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

(க ரை.) உயிரானது காலவளவுபோலத் தன்னைக் காட்டி அறுத்துச் செல்லும் வாள்போன்றது, இதை அறிவாரைப்பெற்றால் நலம். (௪)

நாச்செற்று விக்குள்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்

(க ரை.) நாவை அடக்கிச்சேர்த்தும்ம எழுமுன்னே தருமம் செய்யவேண்டும். (௫)

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

(க-ரை.) இவ்வுலகம் நேற்றிருந்தவன் இன்றில்லையென்னும் பெருமையை உடையது. (௬)

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல

(க-ரை.) ஒரு நாளளவும் வாழ அறியாதவர்கள் கோடிக்குமேலான எண்ணங்களை எண்ணுகிறார்கள்.

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்பொ டுயிரிடை நட்பு

(க-ரை.) உடலுக்கும் உயிருக்கும் இருக்கிற சம்பந்தமானது முட்டைதனித்தொழியப் பறவைபறந்தாற்போலும.                    (அ)

உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிபபது போலும பிறபபு.

(க-ரை.) மரணம்வருதல் நித்திரைசெய்தல்போலும், பிறப்புவருதல் நித்திரைசெய்து விழித்தல்போலும்.                    (கூ)

புக்கி லமைந்தின்று கொலலோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிாக்கு.

(க-ரை.) உடலுள்ளே ஒதுக்குக் குடியிருந்த உயிாக்கு என்றும இருக்க வீடு அமைந்தது இல்லை.

---

## நுரு-ம். அதி.—துறவு.

அஃதாவது - புறமாகிய செல்வத்திலும் அகமாகிய உடம்பிலும் உண்டாகிய பற்றை அவைகளது நிலேயாமையைப்பாாத்து விடுதலாம.

யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்.

(க-ரை.) ஐமபொறிவிடயமாகிய ஐம்புலன்களையும் ஒவவொன்றாக ஒழித்தவன அவைகளால் வரும் துன்பங்களை அடையான்.                    (க)

வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

(க-ரை.) துறந்தபின் இன்பம் பலவாகலின் இன்பம் வேண்டினால் துறக்கக்கடவன். (௨)

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்
வேண்டும், வேண்டிய வெல்லா மொருங்கு

(க-ரை.) ஐம்பொறியின் சம்பந்தமாகிய ஐம்புலன்களைக் கெடுத்தல் வேண்டும். (௩)

இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடை
மை, மயலாகு மற்றும் பெயர்த்து

(க-ரை.) தவஞ்செய்தோர்க்குப் பற்றற்றிருப்பது இயல்பாகும், பற்றுண்டாயின் மயக்கமாகும். (௪)

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்
பறுக்க, லுற்றார்க் குடம்பு மிகை

(க-ரை.) பிறவியை நீக்கமுயல்வோர்க்கு உடல் பாரமாம், மற்றவர்க்கு என்னபயனும? (௫)

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வா
னோர்க், குயர்ந்த வுலகம் புகும்.

(க-ரை.) யான் எனது எனனும் மயக்கம் அறுப்பவன் முத்தியுலகத்தில் செல்லுவான். (௬)

பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு

(க-ரை.) இருவகைப்பற்றையும்விடாதவர்களைத் துன்பங்கள் விடாவாம். (௭)

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(க-ரை.) முற்றத் துறந்தவர்கள் முத்திபெறுவர், துறவாதவர்கள் பிறப்பில் அழுந்துவர். (௮)

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

(க-ரை.) பற்றற்றபொழுதே பிறப்புஅறும் அறாத பொழுதே பிறப்பு இறப்பின்நிலையாமைகாணப்படும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(க-ரை.) பற்றற்ற பரமபொருளைப் பற்றும்பொருட்டு முத்திவழியைப் பற்றக்கடவர். (௧0)

## ௩௰௬-ம். அதி.—மெய்யுணர்தல்.

அஃதாவது - பிறப்புவீடுகளையும், அவற்றின் காரணங்களையும் * விபரீத † சந்தேகங்களால் அல்லாமல் உண்மையால் அறிதல். இதை வடநூலார் தத்துவஞானமென்பராம்.

பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு

---

* விபரீதஞானமாவது - ஒன்றை மற்றொன்றாக அறிதல். அது கயிற்றைப் பாம்பு என்று அறிதல் போல்வன.

† சந்தேகஞானமாவது ஒன்றை இதுவோ அதுவோ எனக் கொள்ளுதல். கயிறோ பாம்போ எனத் துணியாது நிற்றல்போல்வன.

(க-ரை.) பொருள் அல்லாதவைகளைப் பொருள் என்று எண்ணும் மயக்கத்தால் பிறப்பு உணடாம.

இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(க-ரை.) விபரீதஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானத்தைக் கொண்டவர்க்கு அம்மெய்ஞ்ஞானமே மோட்சத்தைக்கொடுக்கும். (உ)

ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

(க-ரை.) அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானத்தை அடைந்தவர்க்கு முத்திஉலகம் சமீபமாகும்.

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(க-ரை.) மெய்யை அறியாதவர்க்கு ஐம்புலன்களும் வசப்பட்டாலும் பிரயோசனம் இல்லை. (ச)

எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொ
ருண், மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(க ரை.) எந்தப்பொருள் எந்தத் தன்மையை உடைத்தாயினும் அந்தப் பொருளிடத்து நின்று உண்மைப்பொருளைக் காண்பதே அறிவாம். (ரு)

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார தலைப்ப
டுவர், மற்றீண்டு வாரா நெறி.

(க-ரை.) இப்பிறப்பில் உபதேசத்தைக் கேட்டு உண்மைப்பொருளை அறிந்தவர் பிறப்பை நீக்குவர்.

ஓர்த்துள்ள முள்ள துணிரி னொருதலையாப
பேர்த்துள்ள வேண்டா பிறபபு.

(க-ரை.) ஒருவன் மனமானது உபதேசப்பொரு ளைக்கொண்டு உண்மைப்பொருளை அறியுமாளுல் அவனுக்குப்பிறவி உண்டென்று நினைக்கவேணடியது இல்லை. (எ)

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்
னுஞ், செம்பொருள் காண்ப தறிவு.

(க-ரை.) பிறவிக்குக் காரணமாகிய அஞ்ஞானம் கெட உணமைப்பொருளைக் காண்பதே அறிவாம்.

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழி
த்துச், சார்தரா சாாதரு நோய்.

(க-ரை.) ஒருவன் மெய்ப்பொருளை அறிந்து இருவகைப் பற்றுக்களும்கெட நடப்பாளுகில அவனைத் துன்பங்கள் அணுகாவாம். (கூ)

காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்.

(க-ரை.) ஞானவான்களுக்கு முக்குற்றமும் நீங்கி அக்குற்றங்களால் வரும்துனபங்கள் இல்லை. (கo)

## ௩எ-ம். அதி.—அவாவறுத்தல்.

அஃதாவது-முன்னும் பின்னும் வினைத்தொடர்பு அறுத்தார்க்கு நடுநின்ற உடம்பும் அதுகொண்ட வினைப் பயனகளும் நினறமையால் அதுபற்றி

ரோ இடத் துத்துறக்கப்பட்ட புலன்களின்மேலே பழைய பழக்கவசத்திலே நினைவுசெல்லுமன்றோ? அந்நினைவும பிறவிக்கு வித்தாமாதலால் அதனை இடைவிடாத மெய்ப்பொருள் உணர்வால் அறுத்த லாம.

---

அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ்ஞான்
றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து.

(க-ரை.) எவ்வுயிர்களுக்கும் பிறவியைத் தருமவி தையாவது ஆசையாகும். (க)

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும.

(க-ரை.) ஒருவன் பிறவாமையையே இச்சிக்க வேண்டும். (உ)

வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்
லை, யாண்டு மஃதொப்ப தில.

(க-ரை.) இச்சியாமைக்கு ஒப்பானசெல்வம் இவ் வுலகத்தில் இல்லை, மோட்சத்திலும் அதற்கு ஒப் பானது இல்லை. (ங)

தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

(க-ரை.) ஒருவனுக்குமோட்சம் என்று சொல்லப் படுவது ஆசையில்லாமையாம், அவ்வாசை இல்லா மையானது மெய்மையை இச்சிக்கவரும. (ச)

அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

(க-ரை.) பிறவி அற்றவர் என்று சொல்லப்படுவோர் ஆசை அற்றவர், அவ்வாசை அறாதவர் பிறவி அற்றிலர். (௫)

அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

(க-ரை.) ஒருவனைக் கெடுக்கவல்லது ஆசையாம் அவ்வாசையை நீக்குவதே துறவறமாம். (௬)

அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்

(க-ரை.) ஒருவன் இச்சையை நீக்கினால் அவன் கெடாமைக்கு ஏது உண்டாம். (௭)

அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்
டேற், றவாஅது மேன்மேல் வரும.

(க-ரை.) ஆசை அற்றவர்களுக்குத் துன்பம் இல்லை அவ்வாசை உண்டாகில் துன்பம் உண்டாம். (௮)

இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(க-ரை.) ஆசை என்னும் துன்பத்தின் மிகுந்த துன்பம் ஒருவனுக்குக் கெடுமானால் இன்பம் வரும்.

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும

(க-ரை.) ஒருவன் ஆசையை விடுவானாகில் அவ னுக்கு அவ்விடுகை நிலைமையைத்தரும். (௪0)

## ௩அ-ம். அதி.—ஊழ்.

அஃதாவது-நல்வினைப்பயனாகிய இன்பமும் தீவி னைப்பயனாகிய துன்பமும் அவ்வினைகளைச் செய்த வனையேசென்று அடைதற்கு ஏதுவாகிய நியதியாம்.

ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொ
ருள், போகூழாற் றோன்று மடி.

(க-ரை.) ஒருவனுக்குப்பொருள் வரும் விதியால் முயற்சி உண்டாம், பொருள் அழியும் விதியால் சோம்பல் உண்டாம். (க)

பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

(க-ரை.) போகும் ஊழ் அறிவில்லாமையைத் தரும ஆகும் ஊழ் அறிவைத்தரும. (உ)

நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும.

(க-ரை.) ஒருவன் நுட்பமாகிய நூல்கள் பலவற் றைக்கற்றாலும் அவனுக்கு ஊழினால் ஆகிய அறிவே மிகும். (ந)

இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும வேறு

(க-ரை.) உலகில் ஊழின் இயல்பு இரண்டாம் அவை செல்வமுடைமை அறிவுடைமையாம. (ச)

நல்லவை யெல்லாஅந தீயவாந் தீயவு
நலலவாஞ் செலவஞ் செயற்கு.

(க-ரை.) செல்வம உணடாதற்கு விதிவசத்தால் நல்லவை எல்லாம் தீயவாம், தீயவை எல்லாம நல்ல வாம். (ரு)

பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும போகா தம.

(க-ரை.) ஊழினுலே தமக்குச் சொந்தமாகப் பொருள்கள் காப்பாற்றினுலும் நில்லாவாம, சொந்த மாகுமபொருள்கள் புறமபோக்கினுலுமபோகாவாம.

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந துய்தத லரிது.

(க-ரை.) கோடிபொருளைச் சம்பாதித்தவர்க்கும் கடவுள் அமைதத அமைப்பு அன்றி அநுபவிததல் அரிது. (எ)

துறப்பார்மற் றுப்புர விலலா ருறற்பால
வூட்டா கழியு மெனின்.

(க-ரை.) ஊழ்வினைகள் துன்பங்களை அடைவிக் காமல் நீங்குமானுல் வறுமையை அநுபவிக்காதவர் இல்வாழ்க்கையைத் துறப்பா. (அ)

நன்றுங்கா னல்லவாக் காண்பவ ரன்றுங்கா
லலலற் படுவ தெவன்.

(௯-ரை.) நன்மை உண்டாகும்போது நன்மையை அநுபவிப்பவர் துன்மை உண்டாகும்போது துன்பப்படுவது என்ன? (௯)

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(௰-ரை.) ஊழைவிட வலிமையுடையவை எவை? அதை விலக்கும்பொருட்டு வேறொன்றை நினைப்பினும் அவ்வூழே முன்வந்து நிற்கும். (௰)

அறத்துப்பால் முற்றிற்று.

# பொருட்பால்.

பொருளாவது - அறவழியினாலே சேர்க்கப்பட்ட பொன்மணி முதலானவையாம்.

## அரசியல்.

அரசாவது - உலகத்திற்கு உயிர் எனச்சிறந்த அரசனது தன்மையாம். அவ்வரசின் இயலை இருபத்தைந்து அதிகாரங்களினாலே சொல்லத்தொடங்கி முதலிலே இறைமாட்சி சொல்லுகிறார்.

### ௩௯-ம். அதி.—இறைமாட்சி.

அஃதாவது அரசனது நற்குணமும் நற்செய்கைகளுமாம்.

படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறு
முடையா னரசரு ளேறு

(க-ரை.) சேனை நாடு பொருள் அமைச்சு நட்பு அரண் இவ்வாறு அங்கங்களையும் உடையவன் அரசருள் ஆண்சிங்கம்போன்றவன். (க)

அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு

(க-ரை.) அரசனுக்கு இயல்பாவது வல்லமை ஈகை அறிவு மனவெழுச்சியாம். (உ)

தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவர்க்கு

(க-ரை.) விரைவு உடைமை, கல்வி உடைமை, வலி உடைமை இம்மூன்றும் அரசனைவிட்டு நீங்காவாம். (ங)

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

(க-ரை.) தன் அறத்தில் இருந்து பாவங்களைக் கடிந்து வலிமையினாலே தவறுதமானம் உடையவன் அரசன் ஆவான். (ச)

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

(க-ரை.) பொருள் வரவுதேடலும் பொருளைக் காத்தலும் அப்பொருளை அறத்தினவழிச் செலவு செய்தலுமான இவைகளில்வல்லவன அரசனாவான.

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனே
ன், மீக்கூறு மன்ன னிலம்.

(க-ரை.) அரசன காண்கைக்கு எளியவனுகி இன்சொல சொலபவன் ஆனுல அவன நிலத்தை உலகம உயாததிச்சொல்லும. (சு)

இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்
சொலாற், முன்கண டனைத்திவ் வுலகு.

(க-ரை.) இனியசொல்லுடன் கொடுந்துக் காக்கும் அரசனுக்கு இவவுலகம் தனபுகழோடு பொருந்தித் தான் நினைத்த அளவு உடையதாகும். (எ)

முறைசெய்து காப்பாறறு மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும.

(க-ரை.) மநுமுறை செலுததிக் குடிகளைக்காக்கும அரசன் அக்குடிகளுக்குத் தேவனுக எண்ணப்படுவான. (அ)

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை
வேந்தன், கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(க-ரை.) மந்திரி முதலானவர்கள் கடிந்து உத்தி சொல்லும் சொற்களைப் பொறுக்கும் அரசனகுடைநிழல் கீழ் உலகம் தங்கும். (கூ)

கொடையளி செங்கோல் குடியோம்ப னன்கு
முடையானும வேந்தாக் கொளி.

(க-ரை.) கொடுத்தலும் இன்சொல்சொல்லுதலும செஙகோல்செலுத்துதலும் குடிகளைக்காத்த

லும இங்ஙானகு செயல்களையும உடையவன அரச ருக்குள் விளக்கம் ஆவான்.                (௫0)

## ௪௰-ம். அதி.—கல்வி.

அஃதாவது-அவ்வரசன் தான்கற்றற்கு உரிய நூல் களைக் கற்றல அவையாவன-அறநூலும், நீதிநூலும், தேர், யானை, குதிரை, படைக்கலம் எனப்பட்ட இவற்றின் நூல்களும் மற்று முதலானவையாம்.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக,

(க-ரை.) ஒருவன் கற்கப்படும் நூல்களைக் குற்றம் அறக் கற்கக்கடவன், கற்றபின் கல்வி அறிவிற்குத் தக்கபடி நிற்கக்கடவன்.                (க)

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்வி
ரண்டுங், கண்ணென்ப வாழு முயிர்க்கு.

(க-ரை.) கணிதநூற்களும் இலக்கண நூற்களும் மனிதர்களுக்குக் கண்களாகும்.                (உ)

கண்ணுடைய ரென்பவா கற்றோர் முகத்திர
ண்டு, புண்ணுடையா கலலா தவர்.

(க-ரை.) கற்றோரே கண்கள் உடையவர் என்று சொல்லப்படுவோர், மற்றோரே கண்கள் இல்லாதவா என்று சொல்லப்படுவர்.                (௩)

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில

(க-ரை.) கற்றவர் தொழிலாவது கற்றவரைச் சேர்ந்து இனி எப்பொழுது காண்போம் என்று நினைத்துவருந்துதலாம். (௪)

உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார், கடையரே கல்லா தவர்.

(க-ரை.) கற்றோர் உயர்ந்தோரும் மற்றோர் இழிந்தோரும் ஆவார். (௫)

தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத் தூறு மறிவு

(க-ரை.) மணற்கேணி தோண்டிய அளவாக ஊறும் அதுபோல மனிதருக்கு அறிவும் கற்ற அளவு ஆகும். (௬)

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன் சாந்துணையுங் கல்லாத வாறு.

(க-ரை.) கற்றவர்க்கு எந்நாடும் தனது நாடாம் அப்படியிருக்க ஒருவன் மரணபரியந்தமும் கற்காமல இருப்பது என்ன? (௭)

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற் கெழுமையு மேமாப் புடைத்து.

(க-ரை.) ஒருவன் தான் கற்ற கல்வியானது தனக்கு எழுபிறப்பிலும் உதவுதல் உடைத்தாம். (௮)

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு காமுறுவர் கற்றறிந் தார்.

(க-ரை.) கற்றவர் தாங்கள் இன்பம் அடையும் கல்விக்கு உலகத்தார் இன்பம் அடைதல் கண்டு மற்றும் கற்பார். (௯)

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை

(க-ரை.) ஒருவனுக்கு அழிவில்லாத செல்வம் கல்வியாம், பொன்மணி முதலானவை செல்வம் அல்லவாம். (௧௦)

## ௪௧-ம். அதி.—கல்லாமை.

அஃதாவது கற்றலைச்செய்யாமையின் இழிவாம்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(க-ரை.) ஒருவன் கல்வியைக் கற்காமல் சபையில் ஒன்றைச் சொல்லல் வகுப்பிடம் இல்லாமல் சூதாடியதுபோலும். (௧)

கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று.

(க-ரை.) கல்லாதவன் சபையில் பேசவிரும்புதல் இரண்டு முலைகளும் இல்லாதவள் பெண்தன்மையை இச்சித்தல்போலும். (௨)

கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

(க-ரை.) கற்றூர் முன்பு யாதொன்றையும் சொல்லாதிருப்பாராகில் கலலாதவரும மிகவும நல்லவா ஆவார். (ரு)

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

(க-ரை.) கல்லாத அறிவு ஒருவேளை நன்றாய் இருப்பினும் கற்றோர்கொள்ளார். (சு)

கலலா வொருவன் றகைமை தலைபபெய்து
சொலலாடச் சோாவு படும.

(க-ரை.) கல்லாதவன் தன்னை மதிக்கும் மதிப்பானது கற்றவன் முன்பேசக்கெடும. (ஙு)

உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

(க ரை.) கல்லாதவா விளைவு இல்லாக்களர் நிலத்தை ஒப்பாவா. (சா)

நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மணமாண் புனைபாவை யற்று.

(க-ரை.) நூல் அறிவு இல்லாத எழுச்சியும் அழகும் சுண்ணாம்புச்சாந்தால் அலங்கரிக்கப்பட்ட பாவையின் எழுச்சியும் அழகும் போலுமாம். (எ)

நலலார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் படட திரு.

(க-ரை.) கல்லாதவர் இடத்து உண்டாகிய செல்வமானது கற்றவர் இடத்து உண்டாகிய வறுமையைப்பார்க்கிலும் துன்பம் செய்யும. (அ)

மேற்பிறந்தா ராயினுங் கலலாதார் கீழ்ப்பிறந்
தும், கற்று ரனைத்திலர் பாடு.

(க-ரை.) கல்லாதவர் மேலாகியகுலத்தில் பிறந்
தாராஞனும் கீழ்க்குலத்திற்பிறந்து கற்றவரை ஒப்
பாகார். (கூ)

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவா.

(க-ரை.) கற்றவர் மக்களையும் கல்லாதவர் மிரு
கங்களையும ஒப்பாவார். (கo)

---

## சுஉ-ம். அதி.—கேள்வி.

அஃதாவது - கேட்கத்தகும் நூலின் பொருள்க
ளைக்கற்றறிந்தவர் சொல்லக்கேட்குதல்.

---

செலவத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்
செல்வஞ், செல்வத்து ளெல்லாந் தலை.

(க-ரை.) ஒருவனுக்குச் சிறப்புடையசெல்வமா
வது கேள்விச்செல்வமாம், அச்செல்வம எல்லாச்
செல்வங்களிலும் தலைமையாம். (க)

செவிக்குண விலலாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

(க-ரை.) காதுக்குக் கேள்வி உணவு இல்லாதகா
லத்து வயிற்றுக்கு உணவு கொடுக்கவேண்டும். (உ)

செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பா நிலத்து.

(க-ரை.) கல்வி கேள்வியை உடையவர் பூமி
யில் இருப்பினும தேவரை ஒப்பாவார். (ட)

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

(க-ரை.) கல்லாதவன் ஆனாலும் கற்றவர்சொல்
லும் நூல்களைக் கேட்கக்கடவன், அக்கேளவி ஒரு
வனுக்குத் தளாச்சிவந்த இடத்துத் துணையாம்.(ச)

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையாாவாய்ச் சொல.

(க-ரை.) நல்லவாகள் வாயில் பிறக்குஞ்சொல்
ஒருவாக்கு ஆபத்து வந்தவிடததில் சேற்றுநிலத்தில்
ஊனறுகோலபோல உதவியாம். (ரு)

எனைததானு நல்லவை கேட்க வனைத்தானு
மானற பெருமை தரும.

(க-ரை.) ஒருவன் நல்லவைகளைக் கேட்கக்கட
வன அவை மிகுநத பெருமையைத்தரும். (சா)

பிழைத்துணாந்தும பேதைமை சொல்லா
ரிழைத்துணாந, தீணடிய கேள்வி யவர்.

(க-ரை.) கற்றவர்கள் அறிவீனமான சொற்க
ளைச் சொல்லார். (எ)

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப படாத செவி.

(க-ரை.) கேள்வியாலே தொளைக்கப்படாத செவிகள், ஓசையைக் கேட்குமானாலும் கேளாததன்மை உடையனவாம். (அ)

நுணங்கிய கேள்விய ரலலார் வணங்கிய
வாயின ராத லரிது.

(க-ரை.) நுணுக்கமான கல்வி கேள்வி இல்லாதவர்கள் வணக்கமுள்ள வாயினை உடையவர் ஆகுதல் அரிது. (௯)

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென்.

(க-ரை.) காதுகளால் அறியப்படுமே கல்வி மதுரத்தை அறியாத மனிதர்கள் இறந்தால் என்ன? வாழ்ந்தால் என்ன? (௧௦)

## சஉ-ம். அதி.—அறிவுடைமை.

அஃதாவது - கல்வி கேள்விகளினால் ஆகிய அறிவோடு உண்மை அறிவு உடையவன் ஆதலாம்.

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
முள்ளழிக்க லாகா வரண்.

(க-ரை.) அரசர்க்கு அறிவானது அவ்வரசரைக் காக்கும் படையாம், அவ்வறிவு பகைவர் அழிக்கக் கூடாத அரணும். (௧)

சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

(க-ரை.) அறிவானது மனம்போனவழியில் போகவிடாமல் நன்மையிடதது விடுவதே அறிவாம். (௨)

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்
பொருண், மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(க-ரை.) எந்தப்பொருளை எவர் வாயினால் கேட்பினும் அந்தப்பொருளின் உண்மைப்பொருளைக் காண்பதே அறிவாம். (௩)

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்
பிறர்வாய், நுணபொருள் காண்ப தறிவு.

(க-ரை.) தன்னால் சொல்லப்படும்பொருளை எளிதாகச்சொல்லிப்பிறர்சொல்லும்பொருளை அறிவதே அறிவாம. (௪)

உலகங தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

(க-ரை.) ஒருவன் உயர்ந்தோரைச் சிநேகிப்பது அறிவாம், நட்பின் இடத்து முன் முகமலர்ந்து பின்முகம்குவிதல் இல்லாமையும் அறிவாம். (௫)

எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

(க-ரை.) உலகமானது எவவகையினாலே நடப்பதாய இருக்கின்றதோ அவவகையிலே தான்நடப்பது அறிவாம். (௬)

அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்.

(க-ரை.) முன் வரக்கடவதை அறியவல்லார் அறிவு உடையவர் அறியமாட்டாதவா அறிவு இல லாதவர். (எ)

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

(க-ரை.) அஞ்சததகுவதற்கு அஞ்சாமை அறிவு இல்லாமையாம், அஞசததகுவதற்கு அஞ்சுதல் அறி வு உடைமையாம. (அ)

எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

(க-ரை.) வரும் துன்பங்களை முன்னமே அறி ந்து காத்துக்கொள்ளும் விவேகிகளுக்குத் துன்பம் இல்லை. (௯)

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

(க-ரை.) அறிவு உடையவர் இல்லாதவர் ஆயி னும் எல்லாம் உடையவர் அறிவு இல்லாதவர் எல் லாம் உடையவர் ஆயினும் ஒன்றும் இல்லாதவர்.

## ௪௪-ம். அதி.—குற்றங்கடிதல்.

அஃதாவது - காமம் குரோதம் உலோபம் மானம் உவகை மதம் எனப்பட்ட ஆறுகுற்றங்களையும் அர சன் தன்னிடத்தே தோன்றாமல் கடிதலாம.

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார
பெருக்கம பெருமித நீர்த்து.

(க-ரை.) மதமும் கோபமும் காமமும் இல்லாத அரசனது செல்வமானது மேலானதாகும். (க)

இவறலு மாணபிறந்த மானமு மாணு
வுவகையு மேத மிறைக்கு.

(க-ரை.) கொடாமையும் நன்மையினில் நீங்கிய மானமும் அளவிலாமகிழ்ச்சியும அரசனுக்குக் குற்றங்களாம். (உ)

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்து
ணையாக், கொள்வா பழிநாணு வார்.

(க-ரை.) பாவத்துக்குப் பயப்படுவோா தினை அளவு குற்றம்வரினும் பனை அளவாக எணணுவாா.

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம பகை.

(க-ரை.) தனக்கு முடிவைத்தரும் பகை குற்றமாம ஆதலால் அக்குற்றத்தை காக்கக்கடவன்.(ச)

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரி
முன்னர், வைத்தூறு போலக் கெடும.

(க-ரை.) குற்றம் வருமுன்னே காத்துக்கொள்ளாத அரசனது வாழ்வு அக்கினிமுன் நின்ற வைக்கோல் போலக்கெடும். (ரு)

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகுமிறைக்கு.

(க-ரை.) தன் குற்றத்தை முனகடிந்து பிறர்குற்றத்தைப் பின்கடிவானாகில் அவவரசனுக்குக் குற்றம் இல்லை. (௬)

செயற்பால செய்யா திவறியான் செலவ
முயற்பால தன்றிக் கெடும.

(க-ரை.) செய்யப்படுமெவைகளைச் செய்துகொள்ளாமல் உலோபம்செய்யும அரசனது செல்வம் கெடும். (௭)

பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொான் றன்று.

(க-ரை.) பொருளைப்பற்றும் உலோபத் தன்மையானது எல்லாக்குற்றத்திலும் மிகுந்ததாம். (௮)

வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

(க-ரை.) எக்காலத்தும் ஒருவன தன்னை மதியாதிருக்கக்கடவன், நன்மையைத்தராத தொழிலை இச்சியாதிருக்கக்கடவன். (௯)

காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல்.

(க-ரை.) தன்னால் இச்சிக்கப்பட்ட பொருள்களையும் தன்னுடைய இச்சையையும் பகைவர் அறியாமல் அநுபவிக்க வல்லவனை ஆனால் அப்பகைவர் எண்ணம் பழுதாம். (௧௦)

## சரு-ம். அதி.—பெரியாரைத்துணைக்கோடல்.

அஃதாவது - அவ்வறுவகைக் குற்றங்களையும் கடிந்த அரசன தன்னைததீயவழியில் விலக்கி நல்ல வழியிலேசெலுததும் பேரறிவுடையவரைத் தனக்குத துணையாகக் கொள்ளுதலாம்.

அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிநது தோந்து கொளல்.

(க-ரை.) அரசன் அறிவுடையோர் சிநேகத்தைக் கொள்ளக்கடவன். (க)

உற்றநோய் நீக்கி யுறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப பேணிக் கொளல்.

(க-ரை.) துனபங்களை நீக்கும் விதம் அறிந்து நீக்கி அத்துன்பஙகள் வாராமல் காக்கவல்லவரை அரசன சிநேகிக்கக்கடவன. (உ)

அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித தமராக் கொளல.

(க-ரை.) பெரியோரைச் சிநேகித்தல் அரசன் பெறும் பேறுகள் பலவினும பெரியதாம். (ங)

தமமிற் பெறியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(க-ரை.) தம்மைவிடப் பெரியோரைச் சிநேகித்துநடததல் அரசன் வல்லமை பலவினுள்ளும் தலைமையாம். (ச)

சூழ்வார் கண்ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

(க-ரை.) மந்திரிகளைக்கொண்டு பூமிபாரம் நடத்தலால் அம்மந்திரிகளை அரசன் துணையாகக்கொள்ள வேண்டும். (ரு)

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

(க-ரை.) பெரியோர் இனத்தை உடையவனாகத் தான் நடக்கவல்ல அரசனைப் பகைவர் செயிக்கக் கூடாது. (சா)

இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(க-ரை.) நன் மந்திரிகளைத் துணையாகக்கொண்டு அரசாளும் அரசரைக்கெடுக்கும் பகைவர் இல்லை.

இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

(க-ரை.) புத்திசொல்லும் மந்திரிகளைப் பெற்றி லாத அரசன் கெடுக்கும் பகைவரில்லாமல் கெடுவான். (அ)

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

(க-ரை.) முதல் இல்லாதவர்க்கு இலாபம் இல்லை அதுபோலமந்திரிகள் இல்லாத அரசனுக்குத் துணை இல்லை. (கூ)

பலலா பகை கொளலிற் பத்தடுத்த தீமைத
தே, நல்லார் தொடாகை விடல

(க-ரை.) அரசன் பெரியோா சிநேகத்தை விடு
தல் பலபேர் பகைகொள்ளுதலினும் பத்துப்பங்கு
தீமை உடையதாம. (கo)

## சாசூ-ம். அதி.—சிற்றினஞ்சேராமை.

அஃதாவது - சிறிய இனத்தைப் பொருந்தாமை
சிறிய இனமாவது நல்லதிலே நனமையும தீயதிலே
தீமையும இல்லை எனபோரும, விடரும், தூர்த்த
ரும முதலாயினவரது கூட்டமாம.

சிற்றின மஞ்சுமப பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும.

(க-ரை.) பெரியோர் இயல்பு சிறிய இனத்திற்கு
அஞ்சும் சிறியோர் இயல்பு சிறிய இனத்தைச்சுற்ற
மாகக்கொள்ளும். (க)

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

(க-ரை.) நிலத்தின இயல்பினாலே நீர் திரிந்தால்
போல அவரவர் சேர்ந்த இனத்தினாலே அறிவு
திரியும். (உ)

மனத்தானா மாந்தர்க் குணாச்சி யினத்தானா
மினனா னெனப்படுஞ் சொல.

(க-ரை.) மனத்தினுலே அறிவு உண்டாம அது போல ஒருவன சேர்ந்த இனத்தினுலே இன்னுன என்று எண்ணப்படும்.    (ந)

மனத்துளது போலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.

(க-ரை.) ஒருவனுக்கு அறிவானது அவன்சேர்ந்த இனத்தினுல் ஆகும.    (ச)

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும.

(க-ரை.) மனப்பரிசுத்தமும், செய்வினைப்பரிசுத்தமும் சேர்ந்த இனத்தால் ஆகும்.    (ரு)

மனந்தூயார்க் கெச்சநன் ருகு மினந்தூ
யார்க், கில்லைநன் ருகா வினை.

(க-ரை.) மனப்பரிசுத்தம் உள்ளவர்க்கு மக்கட்பேறுநன்ருகும் இனப்பரிசுத்தம் உள்ளவர்க்கு நன்மை இல்லாச் செயல் இல்லை.    (சு)

மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும்.

(க-ரை.) மனத்தின் நன்மை செல்வத்தைத்தரும் இனத்தின் நன்மை புகழைத்தரும்.    (எ)

மனநல நன்குடைய ராயினுஞ் சான்ருேர்க்
கினநல மேமாப் புடைத்து.

(க-ரை.) மனநன்மை உடையவராஞலும் பெரியோர்க்கு இனநன்மை உறுதி உடையதாம்.    (அ)

மனநலத்தி ைருகு மறுமை மற்றஃது
மினநலத்தி னேமாப புடைத்து.

(க-ரை.) ஒருவனுக்கு மனநனமையால் வரு பிறபபில இனபம் உணடாம, அதறகு இனநனமை யாலவலிமை உண்டாம. (௬)

நல்லினத்தி னூங்குந துணையிலலைதீயினததி னல்லற் படுபப.தூஉ மில.

(க-ரை.) ஒருவனுக்கு நல்ல இனததின மிருந்த துணை இலலை தீய இனததின மிருநதகேடுஇலலை.

## ௪௭-ம். அதி.—தெரிந்துசெயல்வகை.

அஃதாவது - அரசன் தான செய்யும தொழில் களை ஆராய்நது செயயும திறமாம.

அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்நது செயல்.

(க-ரை.) ஒருவன் அழிவதையும் ஆவதையும் இலாபத்தையும ஆராய்ந்து தொழில் செய்யக்கட வன. (௧)

தெரிநத வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்
வாாக், கருமபொருள் யாதொன்று மில்.

(க-ரை.) நல் இனத்தோடு ஆராய்ந்து செய்யும் அரசருக்குப் பெறுதற்கு அரியபொருள் ஒன்றும் இல்லை. (௨)

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

(க-ரை.) அறிவுடையோர இலாபத்தை நினைத்து முதல் இழக்கும் தொழிலைச் செய்யார். (ரு)

தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர்.

(க-ரை.) குற்றத்திற்கு அஞ்சும் பெரியோர துணியப்படாத தொழிலைச்செய்யார. (சு)

வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப படுப்பதோ ராறு

(க-ரை.) அரசன் யோசியாமல் பகைவாமேல் செல்லல் அப்பகைவரை நிலைபெறச்செய்தலாம.

செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும.

(க-ரை.) அரசன் செய்யத்தகாதவற்றைச் செய்தலாலும் செய்யததக்கவற்றைச் செய்யாமையாலும் கெடுவான. (சா)

எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெணணுவ மென்ப திழுக்கு.

(க-ரை.) இராசன் செய்தொழிலை முடிக்கும் உபாயத்தை எண்ணிச் செயயக்கடவன் தொடஙகியபின் எண்ணுதல் குற்றம். (எ)

ஆற்றின் வருந்தா வருத்தம் பலாநின்று
போற்றினும் பொத்துப் படும்.

(ந-ரை.) முடியும் உபாயத்தால் வருந்தாமுயறசி யானது பலாகாத்தாலும் குற்றம்படும். (அ)

நன்ருற்ற லுள்ளூந தவறுண் டவரவர்
பணபறிந் தாற்ருக் கடை.

(க-ரை.) அவரவர் குணங்களை அறிந்து இசையச் செய்யாவிடில நன்மைசெய்தலுள்ளும் குற்றம் உண டாம். (கூ)

எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந தம்
மொடு, கொள்ளாத கொள்ளா துலகு.

(க-ரை.) அரசர் பொருந்தாத உபாயங்களைச் செய்வாராஞல் உலகம் ஏறறுக்கொள்ளாது. (௧0)

## ௫அ-ம். அதி.—வலியறிதல்.

அஃதாவது - அவவுபாயங்களுள் தண்டம்செய் யக்குறித்த அரசனுனவன நால்வகைவலிமைகளை யும் அளந்து அறிதலாம்.

வினைவலியுந் தன்வலியு மாற்ருன் வலியுந்
துணைவலியுந தூக்கிச் செயல.

(க-ரை.) தொழில்வலிமையும் தன்வலிமையும் பகைவனவலிமையும துணைவலிமையும் ஆராய்ந்து தனவலிமிகுமாகில் அரசன அத்தொழிலைச் செய் யக்கடவன. (க)

ஒலவ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வாாக்குச் செல்லாத தில.

(க-ரை.) செய்யக்கூடும் தொழிலையும் அறிய வேண்டும் வலிமையும் அறிந்துசெய்யும் அரசர்க்கு முடியாதபொருள் இல்லை. (உ)

உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

(க-ரை.) தமது வலிமையைத் தெரிந்துகொள்ளாது வலியவரோடு போர்செய்து இடையில் புறங்கொடுத்த அரசர்பலர். (௩)

அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

(க-ரை.) தன்வலியின் அளவை அறியாது தன்னைப்புகழ்ந்த அரசன் கெடுவான். (௪)

பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

(க-ரை.) மயில் இறகு ஏற்றப்பட்ட வண்டியும் அச்சுமுறியும் அவ்விறகை அதிகமாக ஏற்றினால்.

நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும்.

(க-ரை.) நுனிக்கொம்பில் ஏறினவர் அவ்வளவைக் கடந்து ஏறுவராகில் அவருக்கு முடிவுவரும்.

ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

(க-ரை.) தனக்கு உள்ள அளவு அறிந்து கொடுக்கக்கடவன் அக்கொடை பொருளைக்காப்பாற்றும் வழியாம. (எ)

ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

(க-ரை.) அரசனுக்குப்பொருள்செலவு இல்லாவி டில் அப்பொருள் வரவுசிறிதாகிலும் கெடுதிஇல்லை.

அளவறிந்து வாழாதான் வாழ்க்கையுளபோல
வில்லாகித் தோன்றாக் கெடும்.

(க-ரை.) தனக்கு உள்ள பொருள் அளவை அறிந்து வாழாதவன் வாழ்க்கை உள்ளவைபோலத் தோன்றி அழியும். (௯)

உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

(க-ரை.) தனக்கு உள்ளவற்றை ஆராயாத உதவியாலே செல்வத்து அளவு கெடும். (௧௦)

## ௪௯-ம். அதி.—காலமறிதல்.

அஃதாவது - வலிமையினாலே மிகுதி உடையவனாய்ப் பகைவன்மேல் போர்க்குச்செல்லும் அரசன அச்செல்லுதலுக்கு ஏற்றகாலத்தினை அறிதல்.

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்
வெல்லும, வேந்தாக்கு வேண்டும் பொழுது.

(க-ரை.) காகம் கோட்டானைப்பகலில்வெல்லும் அதுபோல் அரசர் பகைவரை வெல்லக் காலம் வேண்டும். (௧)

பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

(க-ரை.) காலம் அறிந்து தொழிலை நடத்தல் செல்வத்தைக் கட்டும் கயிறும். (உ)

அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

(க-ரை.) காலம் அறிந்துசெய்தால் அரியதொழில்கள் உளவோ? (ங)

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

(க-ரை.) அரசன் காலம அறிந்து தொழில்செய்தால் உலகம் எல்லாம் ஆளநினைத்தாலும் கைவசப்படும். (ச)

காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(க-ரை.) பூமி முற்றும் ஆளநினைக்கும் அரசர் பகைவரை வெல்லக் காலம்பார்த்திருப்பார். (ரு)

ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(க-ரை.) ஆடுபின்வாங்கல் பாய்தற்பொருட்டு, வலிமை உள்ள அரசன் பின்வாங்குதல் வெல்லும் பொருட்டாம். (சு)

பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்
பார்த், துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

(க-ரை.) அறிவுடைய அரசா கோபததைப புறங்காட்டாா காலமவருமம அளவும் அக்கோபத தை உள்வைத்திருப்பாா. (எ)

செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை
காணிற் கிழக்காந் தலை.

(க-ரை.) அரசா பகைவரைக்கண்டால் அவாக் குமுடிவுகாலம் வரும் அளவும் பணியக்கடவா. (அ)

எய்தற் கரிய தியைநதக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல.

(க-ரை.) அரசர் பகையைவெல்லக் காலம்வாய்த் தால் அப்பொழுதே அத்தொழிலைசசெய்யக்கடவர்

கொக்கொக்க கூம்புமப பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

(க-ரை.) அரசன் பகையைவெல்லக் காலம் வாய்க்காத இடத்துக் கொக்கு அடங்கல் போல் இருக்கக்கடவன். (கO)

---

## ருO-ம். அதி.—இடனறிதல்.

அஃதாவது - வலியும் காலமும் அறிந்து பகை மேல் செல்லுவோன் தான் வெல்லுதற்கு ஏற்ற நிலத்தினை அறிதலாம்.

---

தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது.

(க-ரை.) அரசர் பகைவரைவெல்ல இடமகண்டால் அல்லது எதொழிலையும் செய்யாது இருக்கக்கடவர். (௧)

முரணசோந்த மொய்ம்பி னவர்க்கு மரண் சேர்ந்தா, மாக்கம் பலவுந் தரும.

(க-ரை.) வலிய அரசருக்கும் அரணைச்சேர்ந்தா லுண்டாகும் பெருக்கமானது பலபயன்களையும் தரும்.

ஆற்றுரு மாற்றி யடுப விடனறிந்து போற்றார்கட் போற்றிச் செயின்.

(க-ரை.) வல்லமையில்லாத வேந்தரும் இடம் அறிந்து போர் செய்வராகில் வெற்றிபெறுவர். (௩)

எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து துன்னியார் துன்னிச் செயின்.

(க-ரை.) அரசர் இடம் அறிந்து போர்செய்வாராகில் பகைவர் எண்ணம் முடியாது. (௪)

நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி னீங்கி னதனைப பிற.

(க-ரை.) முதலை நீரில் இருந்தால் எல்லா உயிரையும் வெல்லும் அது அந்நீரைவிட்டால் மற்ற உயிர்களாலே தோல்வி அடையும். (௫)

கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு நாவாயு மோடா நிலதது.

(க-ரை.) நிலத்திலோடும் தேர்கள் கடலில் ஓடாவாம் கடலில் ஓடும் மரக்கலங்கள் நிலத்திலே ஓடாவாம. (௬)

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்
சாமை, யெண்ணி யிடத்தாற் செயின்.

(க-ரை.) குறைவில்லாது எண்ணி இடமறிந்து போர்செய்தால் தைரியம இன்றி வேறுதுணைகள் வேண்டாவாம. (எ)

சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடை
யா, னூக்க மழிந்து விடும.

(க-ரை.) நிறை சேனையை உடைய அரசன் குறைசேனையை உடைய அரசன இடத்தைச சேர்ந்து அழிக்க நினைக்கில் அவனுல்பெருமை இழந்து விடுவான். (அ)

சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது.

(க-ரை.) அரண்வலியும பலமும் இல்லார் ஆனுலும் பகைவர் இருப்பிடமசென்று வெலலல் அரிது.

காலாழ் களரி னரியடுங் கணணஞ்சா
வேலாண் முகத்த களிறு

(க-ரை.) நரிகள் யானைகளைச் சேற்று நிலததில் வெல்லும். (கO)

---

## ருக-ம். அதி.—தெரிந்துதெளிதல்.

அஃதாவது - மந்திரி முதலானவர்களைப் பிறப்பு குணம் அறிவு எனப்படுகின்றவைகளையும், செய்

கையையும், காட்சி கருத்து ஆகமம் என்கிற பிரமா ணஙகளினுலே ஆராயநது தெளிதலாம்.

அறம்பொரு ளினப முயிரச்ச நான்கின்
றிறநதெரிநது தேறப படும.

(க-ரை.) ஒருவன் அறம பொருள இன்பம் உயி ரச்சம என்கினற நான்கின் திறததால தோந்து கொள்ளப்படுவான.                    (க)

குடிபபிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான கடடே தெளிவு.

(க-ரை.) நல்லகுடியில் பிறநது குற்றத்தில் இருந் து நீஙகிநிறகும நாணம உடையவனே அரசன் தெ ளிந்துகொள்வான்.                    (உ)

அரியகற் றுசற்றூர் கண்ணுந தெரியுங்கா
லினமை யரிதே வெளிறு.

(க-ரை.) அரிய நூல்களைக்கற்றுக் குற்றமற்றவா இடததும் அறியாமை இல்லாதிருக்கை அரிது.

குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல.

(க-ரை.)அரசன் ஒருவன்குணங்களையும் குற்றங் களையும் ஆராய்ந்து மிகுதியைக் கொள்ளக்கடவன்.

பெருமைக்கு மேனேச் சிறுமைக்கு தத்தங்
கருமமே கட்டளைக் கல.

(க-ரை.) மனிதர்பெருமையும் சிறுமையும் அறி யும் உரைக்கல்லாவது அவரவர் தொழில்களாம்.(ரு)

அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

(க-ரை.) அரசன் சுற்றம் அற்றவரைத் தெளிதல் ஒழியக்கடவன்; அவர் உலகத்தோடு ஒட்டாதவர் ஆதலால் பழிக்கு அஞ்சார். (சு)

காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

(க-ரை.) அறியவேண்டியவைகளை அறியாதவர்களை அரசன் தெரிந்துகொள்ளுதல் அவனுக்கறிவின்மை எல்லாந்தரும். (எ)

தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

(க-ரை.) தனக்குச் சம்பந்தம் இல்லாதவனைத் தெரிந்துகொண்ட அரசனுக்கு அத்தெளிவு துன்பம் தரும். (அ)

தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
றேறுக தேறும் பொருள்

(க-ரை.) அரசன் யாவரையும் ஆராயாமல்கொள்ளாதிருக்கக்கடவன்; ஆராய்ந்தபின் கொள்ளக்கடவன். (கூ)

தேரான் றெளிவுந் தெளிந்தான்கண் ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

(க-ரை.) அரசன் ஒருவனை ஆராய்ந்திலனாகித் தெளிதலும், ஆராயப்பட்டவனை இடத்தில் ஐயங்கொள்ளுதலும், அவனுக்குத் துன்பந்தரும். (க0)

## ருஉ ம். அதி.—தெரிந்துவினையாடல்.

அஃதாவது - தெளியப்பட்டவரை அவர்செய்யவல்லதொழில்களை அறிந்து அவைகளிலே ஆளுந்திறமாம.

---

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

(க-ரை) நன்மை தீமைகள் ஆராய்ந்து ஆகும வைகளைசெய்பவன அரசனால ஆளப்படுவான. (க)

வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான செய்க வினை.

(க-ரை.) பொருள்வரும்வழியை விருத்திசெய்து பொருளைவளர்த்து இடையூறுகளை ஆராய்பவன அரசனுக்குத்தொழில் செய்யக்கடவன. (உ)

அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு

(க-ரை.) அன்பு அறிவு தெளிவு ஆசையில்லாமை ஆகிய இந்நான்கும் உடையவனிடத்தே அரசனுக்குத்தெளிவு உண்டாம. (ங)

எனைவகையாற் றேறியக் கண்ணும வினைவகையான், வேறாகு மாந்தர் பலர்.

(க-ரை.) எவ்வகையால் அறிந்த இடத்தும தொழிலவகையால் வேறுபடுமனிதர்பலர். (ச)

அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினை
தான், சிறந்தானென் றேவற்பாற் றன்று.

(க-ரை.) தொழில்செய்யும உபாயங்களை அறிந்து முடிப்பவனுக்கு அல்லாமல் மற்றவனுக்குத்தொழில் கொடுக்கலாகாது. (௫)

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல.

(க-ரை.) அரசன்தொழில் செய்பவனை அறிந்து பின் தொழிலை அறிந்து அவனைத்தொழிலில வைந்து ஆளக்கடவன. (௬)

இதனை யிதனு லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல.

(க-ரை.) அரசன் இத்தொழிலை இச்சாதனத்தால் இவன முடிக்கவல்லவன் எனறு அறிந்து அத்தொழிலை அவனிடத்து விடக்கடவன். (௭)

வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல.

(க-ரை.) அரசன் ஒருவனைத்தொழிற்கு உரியவனாய் இருக்கையை அறிந்து அவனை அததொழிற்கு உரியவனாகச்செய்யக்கடவன. (௮)

வினைக்கண் வினையுடையான் கேண்மைவே
றாக, நினைப்பானை நீங்குந திரு.

(க-ரை.) தனது தொழிலிலே முயற்சி உடையவனை வேறாகநினைக்கும் அரசனைச் சீதேவிவிட்டு நீங்குவாள். (௯)

நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு

(க-ரை.) தொழில்செய்பவன் கோணாதிருக்க உலகமகோணாது ஆகையால், அரசன அவனை நாள்தோறும் ஆராயக்கடவன. (க0)

---

## ருங-ம். அதி.—சுற்றந்தழால்.

அஃதாவது-அரசன் தனது சுற்றத்தாரைத் தன்னைவிட்டு நீங்காதிருக்கும்படி தழுவுதலாம்.

---

பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

(க-ரை.) ஒருவன் செல்வப்பற்று அற்ற இடத்தும் பழமைகொண்டாடுதல் சுற்றத்தாரிடத்தே உண்டாம். (க)

விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.

(க-ரை.) ஒருவனுக்கு அன்புள்ள சுற்றம் கிடைத்தால் அது பலசெல்வம் கொடுக்கும். (உ)

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

(க-ரை.) சுற்றத்தாரோடு கலவாதவன் வாழ்வானது கரை இல்லாக்குளம் நீர்நிறைந்தாற்போலும்.

சுற்றத்தாற் சுற்றப படவொழுகல செல்வந்
தான், பெற்றத்தாற் பெறற பயன்.

(க-ரை.) செலவம பெற்றதினல் வரும பயனு
வது சுற்றததைக்காததலாம. (ச)

கொடுததலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற சுற்றபபடும

(க-ரை.) கொடுததலும இனியசொல் சொல்லு
தலும் ஒருவன செய்தால் அவனசுறறததால சூழப்
பட்டுவொழ்வான். (ரு)

பெருங்கொடையான் பேணன வெகுளி யவ
னின், மருஙகுடையாா மாநிலத தில.

(க-ரை.) மிகுநதகொடையும கோபமிலலாமை
யும் உடையவனுகில் அவனபோல் சுறறம உடை
யவன் இல்லை. (சு)

காக்கை கரவா கரைநதுண்ணு மாக்கமு
மன்னநீ ராாககே யுள.

(க-ரை.) காகம் இரைகிடைததால் இனத்தை
அழைதது உண்ணுதல்போல அசசெய்கை நல்ல
இனததாாக்கு உளவாம். (எ)

பொதுநோக்கான்வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வாா பலா.

(க-ரை.) அரசன அவரவாக்குத் தகுதி அறிந்து
நடப்பானுகில் அவனைவிடாமல் வாழும சுற்றததாா
பலா. (அ)

தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும்

(க-ரை.) முன் சுற்றத்தாராகிப் பின்பிரிந்தவர் மற்றுஞ் சுற்றத்தாராகுதல் காரணம் இல்லை. (௯)

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

(க-ரை.) ஒருவன் காரணம் இல்லாமல் பிரிந்து போய்ப் பின்பு ஒருகாரணத்தால் வந்தவனை அரசன் ஆராய்ந்து கொள்ளக்கடவன். (௧௦)

## ௫௪-ம். அதி.—பொச்சாவாமை.

அஃதாவது - அழகும் செல்வமும் ஆற்றலும் முதலானவைகளால் மகிழ்ந்து தனனைக்காத்துக் கொள்ளுதலிலும், பகையழித்தல் முதலாகிய காரியங்களிலும் மறதி செய்யாமையாம்.

இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

(க-ரை.) மிகுமகிழ்ச்சியால் வரும் மறதியானது அளவுகடந்த கோபத்தைப்பார்க்கிலும் அரசனுக்குக்கெடுதியைத்தரும். (௧)

பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

(க-ரை.) தரித்திரம் அறிவைக்கெடுக்கும் அது போல மறதி புகழைக்கெடுக்கும். (௨)

பொச்சாப்பார்க் கிலலைப் புகழ்மை யதுவுல
கத், தெப்பானூ லோர்க்குந் துணிவு

(க-ரை.) புகழ்ச்சி மறதியுடையோர்க்கு இல்லை இது எல்லா நூலார்க்கும துணிவுதான். (ங)

அச்ச முடையார்க் கரணிலலை யாங்கில்லைப்
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(க-ரை.) பயம் உடையவர்க்கு நால்வகை அரணங்கள் இருந்தும் பயன் இலலை அதுபோல் மறதி உடையவாகருச் செல்வங்கள் இருந்தும் பயன இல்லை. (ச)

முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும.

(க-ரை.) துன்பம் வருமுன காக்காமல் மறந்து இருநதவன தன் குற்றத்தைக்குறிததுப் பின்விசனப்படுவான். (ரு)

இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்கா
மை, வாயி னதுவொப்ப தில.

(க-ரை.) யாவரிடததும் மறதி இல்லாமை வாய்க்குமானல அதற்கு ஒப்பு ஒன்றும் இல்லை. (சு)

அரியவென் றாகாத விலலைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

(க-ரை.) மறவாத மனததால் ஆலோசித்துச் செய்தால் அரசனுக்கு அரியவை ஒன்றும் இல்லை.

புகழ்நதவை போற்றிச் செயல்வேணடுஞ்
செய்யா, திகழ்ந்தார்க் கெழுமையு மில.

மேலானவற்றை அரசர் எண்ணிச்செயயக்கடவா
செய்யாது மறநதவாககு எழுபிறப்பிலும நனமை
இல்லை. (அ)

இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம
மகிழ்ச்சியின் மைநதுறும போழ்து.

(க-ரை.) அரசர் செல்வததிலே மகிழ்ச்சியடை
யுமபோது முற்காலத்திலே மகிழ்ச்சியிலே மறதி
அடைந்தவர்களை நினைக்கக்கடவா. (௯)

உள்ளிய தெய்த லெளிதுமன மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.

(க-ரை.) அரசன் நினைத்தபொருளை நினைக்கக்
கூடுமானால அப்பொருளை அடைதல் எளிதாகும.

## ௫௫-ம். அதி.—செங்கோன்மை.

அஃதாவது - அரசனாலே செய்யப்படும் முறையி
னது தனமையாம.

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்
டுந், தேர்ந்துசெய் வஃதே முறை.

(க-ரை.) அரசனகுறறத்தை ஆராயந்து எல்லா
இடததும நடுவுநிலைமைபொருந்தி அரசு ஆள்வதே
செங்கோலாம். (க)

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

(க-ரை.) உயிரனைத்தும் மழையை நோக்கிவா ழும குடிகளனைத்தும அரசன செஙகோலைநோக்கி வாழும. (உ)

அந்தணா நூறகு மறத்திற்கு மாதியாய
நின்றது மனனவன கோல

(க-ரை.) வேதத்திறகும தருமத்திற்கும காரண மாகநின்றது அரசன செஙகோலாம. (ங)

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு

(க-ரை.) உலகத்தா குடிகளைத்தழுவி ஆளும் அரசனது அடியைப்பொருந்தி நிற்பா. (ச)

இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும விளையுளுந தொக்கு

(க-ரை.) நீதிமனனன நாட்டிலே மழையும் விளைவும நிறைந்திருப்பனவாம. (ரு)

வேலன்று வென்றி தருவது மனனவன
கோலதூஉங் கோடா தெனின.

(க-ரை.) அரசனுக்கு வேல வெற்றியைத்தராது செஙகோல வெற்றியைத்தரும. (சு)

இறைகாக்கும வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச செயின.

(க-ரை.) அரசன் பூமியைககாப்பான் செஙகோல் அவனைக்காக்கும. (எ)

எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன், றண்பதத்தாற் றானே கெடும்.

(க-ரை.) எளியசமையம் உடையனாகி ஆராய்ந்து முறைசெய்யாத மன்னன் தானே கெடுவான். (அ)

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல் வடுவன்று வேந்தன் றொழில்.

(க-ரை.) குடிகளைக்காத்துக் குற்றம் கடிதல் அரசனது தொழிலாம். (௯)

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட் டதனொடு நேர்.

(க-ரை.) அரசன் கொடியவரைத் தண்டித்து நல்லவரைக்காத்தல உழவன்பயிர்க்குக் களையெடுத்தல்போலாம். (க0)

## ருசு-ம். அதி.—கொடுங்கோன்மை.

அஃதாவது - அரசுமுறையின் கோணுதலினது தன்மையாம்.

கொலைமேற்கொண் டாரிற்கொடிதே யலைமேற் கொண், டல்லவை செய்தொழுகும்வேந்து.

(க-ரை.) அநியாயஞ்செய்யும் அரசன் கொலை செய்பவரினும் கொடியன். (க)

வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங் கோலொடு நின்றா னிரவு.

(க-ரை.) கொடுங்கோலையுடைய அரசன் குடி. களைவருத்திப பொருளவேண்டுதல வழிப்போக்- கனைககள்வன வருத்திப்பொருள்கொடு என்றல் போ லும.  (உ)

நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னொடொறு நாடு கெடும.

(க-ரை.) குற்றங்களை ஆராய்ந்து நீதிசெலுத்தாத மன்னன தனதுநாட்டை இழப்பான.  (ங)

கூழுங்குடியு மொருங்கிழக்குங் கோல்கோ
டிச், சூழாது செய்யு மரசு.

(க-ரை.) மநுநீதிதவறி அரசாளும் அரசன் பொ ருளையும் குடிகளையும இழப்பான்.  (ச)

அலலற்பட் டாற்ரு தழுதகண் ணீரன்றே
செலவத்தைத் தேய்க்கும படை.

(க-ரை.) குடிகள் அழுதகண்ணீர் அல்லவோ கொடுஙகோல் வேந்தன செல்வததை அறுக்கும் வாள்?  (ரு)

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃ
தின்றேன், மன்னுவா மன்னாக் கொளி.

(க-ரை.) அரசர்க்குச் செங்கோன்மையே புக ழாம அஃதில்லாவிடில் அப்புகழ் உண்டாகாவாம்.

துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

(க-ரை.) மழை இல்லாமை துன்பம் தரும் அது போல அரசன் அருள் இல்லாமை குடிகளுக்குத் துன்பம் தரும். (௭)

இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்

(க-ரை.) அரசன் கொடுங்கோலின் கீழ் வாழ்ந் தால் வறுமையிலும் கொடிய துன்பம் தரும். (௮)

முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்

(க-ரை.) அரசன் மநுமுறைதப்பி அரசு ஆண் டால் அவனது நாட்டிலே மழைபெய்யாது. (௯)

ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்
பர், காவலன் காவா னெனின்

(க-ரை.) அரசன் உயிர்களைக் காவாவிடில் அவ னது நாட்டில் பசுக்கள் பால் சுருங்கும் வேதியர் வேதம் மறப்பர். (௧௦)

## ௫௭ம். அதி.—வெருவந்தசெய்யாமை.

அஃதாவது - குடிகள் அஞ்சுவதும் பகுதி என்று சொல்லப்படுகிற மந்திரிமுதலாகிய அங்கங்கள் அஞ் சுவதும் தான் அஞ்சுவதும் ஆகிய தொழில்களைச் செய்யாமையாம்.

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து.

(க-ரை.) நடுவாய்நின்று ஒருவன் குற்றத்தை ஆராய்ந்து தக்கபடி தண்டிப்பவனே அரசன. (க)

கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவா.

(க-ரை.) செல்வம் வேண்டுவோா வலியதண்டனை செய்பவாபோலத் தொடங்கி மெலியதண்டனை செய்யக்கடவா. (உ)

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொலலைக் கெடும.

(க-ரை.) குடிகள் அஞ்சத்தக்கவற்றைச் செய்யும கொடுங்கோல் அரசன விரைவிலகெடுவான்.

இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல்
வேந்த, னுறைகடுகி யொலலைக் கெடும.

(க-ரை.) கொடியன் என்று சொல்லப்பட்டகொடுங்கோல் அரசன் ஆயுள்குறைந்து செல்வம் இழப்பான். (ச)

அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்
செலவம், பேஎய்கண டன்ன துடைத்து.

(க-ரை.) அரிய சமையத்தையும் கடியமுகத்தையும் உடைய அரசனது செல்வமானது பேய்கண்ட செல்வம் போலாம். (ரு)

கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்
செல்வ, நீடின்றி யாங்கே கெடும்.

(க-ரை.) அரசன் வன்சொல்லுடையனும் இரக்கம் இலலாதவனுமானல் அவன செல்வம் கெடும்.

கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம.

(க-ரை.) வனசொலலும் அதிக தண்டனையும் அரசன் பலனகளை அழிககும அரங்களாம். (எ)

இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்
றிச, சீறிற் சிறுகுந் திரு.

(க-ரை.) காரியங்களை மந்திரிகளுக்கு ஒப்பித்து அவரோடு கலந்துசெய்யாத அரசன அம்மந்திரிகளைக் கோபிககில் அவன செல்வம கெடும். (அ)

செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும.

(க-ரை) போர்க்காலத்தில் காப்பாக அரண் கட்டிக்கொள்ளாத அரசன் விரைவில்கெடுவான. (கூ)

கல்லாப பிணிக்குங் கடுங்கோ லதுவலல
திலலை நிலக்குப பொறை.

(க-ரை.) கொடுங்கோல் அரசன் கல்வி கல்லாதவர்களை மந்திரிகளாக ஆக்கிக்கொளவான் அதுவே பூமிக்குப்பாரமாம. (௰)

## ௫அ-ம். அதி.—கண்ணேட்டம்.

அஃதாவது-தன்னேடு பழகினவரைக்கண்டால் அவரால சொல்லப்பட்ட மொழியை மறுக்கமாட்டாமையாம்.

கணணோட்ட மென்னுங் கழிபெருங காரிகை
யுணமையா னுண்டிவ் வுலகு.

(க-ரை.) அரசனுக்குத தாக்ஷணியம என்னும் அழகு உண்டாயிருக்கைகயால் இவவுலகம உண்டாயிருக்கின்றது. (க)

கணணோட்டத துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப பொறை.

(க-ரை.) உலகம தாக்ஷணியததிலே நடப்பதாம் அஃதிலலாதவா பூமிக்குப பாரமாவா. (உ)

பணணென்னும பாடற் கியைபின்றேற் கண
ணெனனுங், கணணோட்ட மிலலாத கண.

(க-ரை.) பாடல் இசை இல்லாவிடில பயன் இலலை அதுபோலக் கணணிறகுத தாக்ஷணியம் இல்லாவிடில பயன் இலலை. (ங)

உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மிலலாத கண

(க-ரை.) முகத்தினிடததில் கண்ணோட்டம் இல்லாத கண்கள் இருந்து எனனபயனைத தரும?

கணணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்
றேற், புணணென் றுணரப படும.

(க-ரை.) கண்ணிறகு ஆபரணம தாக்ஷணியமாம் அஃதில்லாவிடில அக்கண புண். (ரு)

மண்ணோ டியைநத மரத்தனையா கணணோ
டியைநதுகண ணோடா தவா.

(க-ரை.) தாக்ஷணியம் இல்லாதவர் மண்ணோடு பொருந்திய மரத்திற்கு ஒப்பாவார். (௬)

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணு
டையார், கண்ணோட்ட மின்மையு மில

(க-ரை.) கண்ணோட்டம் இல்லாதவர் குருடர் கண்ணோட்டம் உள்ளவர் கண்ணுள்ளார். (௭)

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

(க-ரை.) கண்ணோட்டம் உடைய அரசருக்கு இவ்வுலகம் உரிமை உடையது. (௮)

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோ
டிப், பொறுத்தாற்றும் பண்பே தலை.

(க-ரை.) தம்மை வருத்துவோர் இடத்தும் கண்ணோட்டம் உடைய அரசரே தலையாவார். (௯)

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

(க-ரை.) தாக்ஷணியம் வேண்டுவோர் சிநேகர் நஞ்சு இடக்கண்டும் உண்டு சிநேகிப்பார். (௧௦)

## ௫௯-ம். அதி.—ஒற்றடல்.

அஃதாவது - பகைவர் அயலோர் நட்பினர் என்னும் மூவர் திறத்தார் இடத்தும் நிகழ்ந்தவை அறிதற்கு ஒற்றரை ஆளுதலாம்.

ஒற்று முறைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்

(க-ரை.) அரசனானவன் ஒற்றனையும் நீதிநூலை
யும தனது இரண்டுகண்களாகத் தெளியக்கடவன்.

எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்
றும், வல்லறிதல் வேந்தன் றொழில்.

(க-ரை.) யாவரிடத்தும் நடப்பவைகளை ஒற்ற
னால் அறிதல் அரசனது தொழிலாம. (உ)

ஒற்றினா லொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில.

(க-ரை.) ஒற்றனைக்கொண்டு பகைவர் காரியங்
களை அறியாத அரசன வெற்றி அடையான. (ந)

வினைசெய்வார் தஞ்சுற்றம வேண்டாதா
ரென்றாங், கனைவரையு மாராய்வ தொற்று.

(க-ரை.) தொழிலாளரையும் உறவினரையும்
பகைவரையும் ஆராய்பவனே ஒற்றனாவான். (ச)

கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வலலதே யொற்று.

(க-ரை.) ஐயம இல்லாவடிவோடு பொருந்தி அஞ்
சாதிருந்து பகைவர் என்செய்யினும் உள்ளதைச்
சொல்லாதவனே ஒற்றன். (ரு)

துறந்தார படிவத்த ராகி யிரந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

(க-ரை.) துறவிகள் விரதர்கள் வடிவாகி எங்குமபோய் ஆராய்ந்து அறிந்து பகைவர் துன்பம் செய்யினும தன்னைக்காட்டாதவன் ஒற்றனவான்.

மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
யையப்பா டில்லதே யொற்று.

(க-ரை.) இரகசியங்களைக் கேட்கவல்லனுகிப் பகைவர் சந்தேகப்படாதவனே ஒற்றனுவான். (எ)

ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினு லொற்றிக் கொளல்.

(க-ரை.) ஓரொற்றன அறிந்து வந்தபொருளை மற்ரொரு ஒற்றனால் அறிந்து வரச்செய்து அரசன் கொள்ளக்கடவன். (அ)

ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

(க-ரை.) ஓரொற்றன மற்ரோர் ஒற்றனை அறியாதிருக்கும்படி அரசன் ஆளக்கடவன. (கூ)

சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

(க-ரை.)அரசன ஒற்றனுக்குப் பிறர் அறியச் சிறப்புச் செய்யாதிருக்கககடவன் செய்தால் தனது இரகசியங்களை வெளிப்படுத்தினவன ஆவான். (௧௦)

---

## கூ0-ம். அதி.—ஊக்கமுடைமை.

அஃதாவது - மனமானது தொழில்செய்தலிலே எழுச்சியை உடைத்தாதலாம்.

உடைய ரெனப்படுவ தூக்க மஃ்திலலா
ருடைய துடையரோ மற்று.

(க-ரை.) உடையவர் எனறு சொல்லததக்கது மனவெழுசசியாம அவவெழுசசி இலலாதவா யா தும இலலாதவா. (க)

உள்ள முடைமை யுடைமை பொருளுடை
மை, நிலலாது நீஙகி விடும.

(க-ரை.) மனவெழுசசி நிலையுள்ள உடைமை யாம பொருளுடைமை நிலை இலலாததாம. (உ)

ஆக்க மிழநதேமென றலலாவா ரூக்க
மொருவநதங் கைத்துடை யாா

(க-ரை.) மனவெழுசசி உடையவா பொருளிழந் தும் வருநதாா. (ங)

ஆக்க மதர்வினுப் செலலு மசைவிலா
வூக்க முடையா னுழை

(க-ரை.) மனவெழுசசி உடையவன் இடததுச் செலவமவரும. (ச)

வெள்ளத் தனைய மலாநீட்ட மாநதாதம
முள்ளத் தனைய துயாவு

(க-ரை.) நீாப்பூததாள்கள் நிறை நீரளவாம் அது போல மனிதாகள் உயாவுமமனவெழுசசி அளவாம்.

உள்ளுவ தெல்லா முயாவுள்ளன மற்றது
தள்ளினுந தள்ளாமை நீாத்து.

(க-ரை.) அரசர் யாவை நினைக்கக்கடவர் அவ்வுயர்ச்சி கூடாவிடினும் அந்நினைப்பு நீங்காக்குணம் உடையதாம். (௬)

சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு

(க-ரை.) யானை கணையால் புண்பட்டவிடத்தும் தளராமல் பெருமையை நிறுத்தும் அதுபோல மனவெழுச்சி உடையார் வருத்தம் வந்த இடத்தும் தளரார். (௭)

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு

(க-ரை.) மனவெழுச்சி இல்லாதவர் மதிப்பு அடையார். (௮)

பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

(க-ரை.) யானை பெரிதும் கொம்புடையதும் ஆனாலும் புலியினது அடிக்கு அஞ்சும். (௯)

உரமொருவற் குள்ள வெறுக்கை யஃதில்லார்
மரமக்க ளாதலே வேறு.

(க-ரை.) ஒருவனுக்கு அறிவாவது மனவெழுச்சியாம் அஃதில்லாதவர் மரங்களுக்கு ஒப்பாவார்.

## ௬க-ம். அதி.—மடியின்மை.

அஃதாவது - நினைக்கப்பட்டவைகளைச் செய்யும்போது சோம்புதல் அல்லாமையாம்.

குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்.

(க-ரை.) ஒருவன் குடியென்னும் விளக்கானது அவன சோமபலால்கெடும். (க)

மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவா.

(க-ரை.) தாமபிறந்த குடியை நற்குடியாகவேண் டுவோர் சோம்பலை விடக்கடவா. (உ)

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

(க-ரை.) சோம்பல் உடையவன் குடியானது கெடும். (ந)

குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

(க-ரை.) முயற்சி இல்லாதவர்க்குக் குடியும் கெட்டுக் குற்றஙகளும்பெருகும. (ச)

நெடுநீர் மறவி மடிதுயி லென்குங்
கெடுநீரா காமக் கலன்.

(க-ரை.) சோம்பலும், தாமதமும், மறதியும், நித் திரையும், கெடுவோா ஏறும் மரக்கலங்களாம். (ரு)

படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியு
டையார், மாண்பய னெய்த லரிது.

(க-ரை.) உலகு ஒருங்குடைய அரசர் செல்வம் வலியவந்தாலும் சோம்பலுடையவர் பயன் அடை தல் இல்லை. (சு)

இடிபுரிந் தெள்ளுஞ் சொற்கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

(க-ரை.) சோம்பலுடையவர் பிறர் இகழும்சொல்லைக்கேட்பர். (எ)

மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் ஒன்
னார்க், கடிமை புகுத்தி விடும்.

(க-ரை.) சோம்பல அரசன் இடத்துத் தங்குமானால் இது அரசன தனனைப்பகைவருக்கு அடிமையாக்கும். (அ)

குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

(க-ரை.) ஒருவன் சோம்பலை ஒழிக்க அவன்குடியிலும ஆணமையிலும் வநத குற்றஙகள் அழியும.

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.

(க-ரை.) சோம்பல் இல்லாத அரசன் உலகம் எல்லாம் அடைவான். (கய)

---

## சுஉ-ம். அதி.—ஆள்வினையுடைமை.

அஃதாவது - இடைவிடாத மெய்ம்முயற்சியை உடையனுதலாம.

---

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

(க-ரை.) தொழிலைக்குறித்து அருமையென்றுதள ராதிருக்கவேண்டும், தளராமுயற்சி பெருமைதரும்.

வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்கு
றை, தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

(க-ரை.) தொழிலின் குறையைச்செய்யாது விட் டவரை உலகம்விட்டது ஆகையால் தொழிலில செய்கையற்று இருக்கையை விடக்கடவன. (௨)

தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்
கிற்றே, வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

(க-ரை.) உபகாரமேன்மை முயற்சியினிடத்து நிலைபெற்றது. (௩)

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பே
டிகை, வாளாண்மை போலக் கெடும்.

(க-ரை.) முயற்சி இல்லாதவன் உபகாரத்தன் மை பேடிகை வாளபோலாம். (௪)

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கே
ளிர், துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

(க-ரை.) தனக்கு இன்பம் விரும்பாதவனுகி முயற்சியைவிரும்புவோன் உறவினர் துன்பத்தைத் தாங்கும் தூண். (௫)

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

(க-ரை.) முயற்சி செலவத்தை வளர்க்கும் அம் முயற்சி இல்லாமை தரித்திரத்தைக் கொடுக்கும்.

மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

(க-ரை.) மூதேவி சோமபல் உடையவன் இடத்தில் இருப்பாள ஸ்ரீதேவி சோமபல் இல்லாதவன இடததில இருப்பாள். (எ)

பொறியினமை யாக்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி

(க-ரை.) யாவாக்கும் விதி இல்லாமை பழி ஆகாது முயற்சி இல்லாமை பழி ஆகும். (அ)

தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும.

(க-ரை.) ஊழில்லாவிடினும் சரீரமுயற்சிக்கித் தக்க பலனைத்தரும். (கூ)

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவா.

(க-ரை.) இடைவிடாது முயற்சிசெய்வோா விதியையும விலக்குவாா. (க0)

---

## சுரு-ம். அதி.—இடுக்கணழியாமை.

அஃதாவது - தொழிலிலே முயல்பவன் ஊழினாலாவது பொருளில்லாமையினாலாவது மெய்வருததத்தாலாவது தனக்குத்துன்பம வந்த இடத்து அதற்கு மனம் கலங்காமையாம.

---

இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூா வ தஃதொபப தில.

(க-ரை.) ஒருவன துனபம் வருமபோது மகிழக்
கடவன அதது துனபததை நெருக்கக்கடவன. (௧)

வெள்ளத் தனைய விடுமபை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும.

(க-ரை.) அறிவுள்ளவன் உள்ளத்திலே ஒன்றை
நினைக்கத் துனபமெலலாம கெடும். (௨)

இடுமபைக் கிடும்பை படுபப ரிடுமபைக்
கிடுமபை படாஅ தவர்.

(க-ரை.) துன்பத்திறகுத் துனபப்படாதவர் துன்
பததிற்குத் துன்பத்தைக் கொடுப்பர். (௩)

மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடாபபா டுடைத்து.

(க-ரை.) தொழில்செய்ய வல்லவனை அடைந்த
துன்பமானது தானே துன்பப்படும். (௪)

அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும.

(க-ரை.) தைரியம் விடாதவனை அடைந்த துன்
பமானது துன்பப்படும். (௫)

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றே
மென், றோம்புத றேற்றா தவர்.

(க-ரை.) செல்வத்தில் உலோபம் செய்யாதவர்
வறுமையில் விசனப்படார். (௬)

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்
தைக், கையாறுக் கொள்ளாதா மேல்.

(க-ரை.) அறிவுடையவா துன்பத்தைத் துன்பமாகக்கொள்ளார். (எ)

இன்பம் விழையா னிடும்பை யியலபென்பான்
றுன்ப முறுத லிலன்.

(க-ரை.) இனபததை இச்சியாதவனுகித் துன்பத்தை இயல்பெனறு நினைப்பவன் துனபம் அடையான். (அ)

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்
துட், டுன்ப முறுத லிலன்.

(க-ரை.) இனபம்வந்தபொழுது இன்பத்தை இச்சியாதவன் துனபத்தில் விசனப்படான். (கூ)

இன்னுமை யின்ப மெனக்கொளி னுகுந்தன்
னொன்னா விழையுஞ் சிறப்பு.

(க-ரை.) துன்பததை இன்பமாகக் கொள்ளுவானுகில் அவன பகைவராலே மதிக்கப்படும் உயாச்சியை அடைவான. (கo)

---

## அங்க வியல்.

இனிமுறையானே அரசியலை நடத்துதலிலே ஒன்றற்கொன்று துணையாகிய அங்கங்களது இயல்பை முப்பத்திரண்டு அதிகாரத்தாலே சொல்லத

தொடங்கி அவயவங்கங்கள் ஆறனுள்ளும் ஆக்கினை சக்கரததைச செலுததுதலிலே அவவரசனுக்குச் சமானமாகிய அமைசசனது இயல்பு பதது அதிகா ரத்தினாலே சொலலததொடஙகி முதலிலே அமைச சுச சொல்லுகின்றா.

## சுசுமம். அதி.—அமைச்சு.

அஃதாவது அமைச்சனது தனமை அததன்மை அவன் குணஙகளும் செயகைகளுமாம.

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாணட தமைச்சு.

(க-ரை.) கருவியும காலமும் செய்கையும் தொ ழிலும் இவற்றை எண்ண வலலவன் மநதிரி. (க)

வன்கண குடிகாத்தல கற்றறித லாள்வினை
யோ, டைநதுடன மாணட தமைச்சு.

(க-ரை.) அசைவு இலலாமையும் குடிகளைக் காததலையும கற்றறிதலையும் முயறசியையும உடை யவன் மநதிரி. (உ)

பிரிதத லும பேணிக் கொள லும் பிரிந்தாப
பொருத்த லும் வலல தமைச்சு.

(க-ரை.) பிரித்தலும் காத்தலும் பிரிந்தவரைப் பொருந்தச்செய்தலும வல்லமை உடையவன் மந திரி. (ங)

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொலலலும வல்ல தமைச்சு

(க-ரை.) ஆராய்தலும் ஆராய்ந்து செய்தலும் ஒருதலையாகச்சொல்லலும வலலவன மந்திரி. (ச)

அறனறிந தான்றமைந்த சொல்லானெஞ்
ஞானறுந, திறனறிந்தான றேர்ச்சித் துணை.

(க-ரை.) தருமங்களை அறிநது தொழில்செய்யும் திறஙகளைத தெரிநதவன மநதிரி. (ரு)

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம
யாவுள முனனிற் பவை.

(க-ரை.) புததி நுட்பத்தை உடைய மந்திரிகளுக் குமுன் நிறகும் ஆலோசனைகள் எவையுள? (சு)

செயற்கை யறிநதக் கடைத்து முலகத்
தியற்கை யறிநது செயல.

(க-ரை.) தொழில்செய்யும் திறங்களை அறிந்தா லும உலகநடக்கையை அறிந்து செய்யக்கடவன்.

அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருநதான் கூறல கடன.

(க-ரை.) சொன்னவரது அறிவை அழித்துத் தான் அறியானுகினும அரசனுக்கு உறுதியானவை களைச் சொலலுதல மநதிரியின கடமையாம். (அ)

பழுதெண்ணு மநதிரியிற் பக்கத்துட் டெவ
வோ, ரெழுபது கோடி யுறும.

(க-ரை.) அரசனுக்குத் தீங்குசெய்யும்மந்திரி ஒரு வனை எழுபதுகோடி பகைவரிலும் கொடியன். (கூ)

முறைபபடச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவா.

(க-ரை.) செய்தொழிலிலே திறம இல்லாத மந்திரிகள் முன்பு ஒருகாரியததை ஆலோசிததும் பினபு அதை முடிவிலலாமலே செய்வாாகள். (கo)

## சாரு-ம். அதி.—சொல்வன்மை.

அஃதாவது-தான் நினைத்த தொழில் முடியும் வழியால் வார்ததைசொல்ல வல்லவனுகுதலாம.

நாநல மென்னு நலனுடை-மை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

(க-ரை.) மந்திரிகளுக்கு நாநலம்போல வேறு நலம இல்லை. (க)

ஆக்கமுங் கேடு மதனுல் வருதலாற்
காத்தோமபல் சொலலின்கட் சோாவு.

(க-ரை.) செல்வமும் கேடும சொல்லால்வருத லால் மநதிரிகள் சொல்லினிடதது சோாவுவாராமல் காக்கக்கடவர். (உ)

கேட்டாாப் பிணிக்குந் தகையவாய்க் கேளா
ருமு, வேட்ப மொழிவதாஞ் சொல.

(க-ரை.) கேட்டாரும் கேளாதவரும் விரும்பும் படிக்குச் சொல்வதே சொல்லாம். (ந)

திறனறிந்து சொலலுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில.

(க-ரை.) மந்திரிகள் தம்முடையவும் கேட்போ ருடையவும் திறமைகளை அறிந்து சொல்லை சொல் லக்கடவர். (௪)

சொலலுக சொல்லைப் பிறிதோர்சொ லச்
சொல்லை, வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

(க-ரை.) பிறா சொலலுஞ்சொல்லை வெல்லுஞ் சொல் இல்லாமையைக்கண்டு சொல்லக்கடவர்.

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறாசொற் பயன்
கோடன், மாட்சியின் மாசற்றார் கோள்.

(க-ரை.) பிறர் இச்சிக்கும்படி சொல்லிப் பிறர் சொற்பயனைக்கொள்ளுதல் மந்திரிகள் கொள்கை யாம். (௬)

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெலலல யார்க்கு மரிது.

(க-ரை.) சொல்லில் வல்லவனும் சோர்வு இல் லாதவனும் அஞ்சாதவனும் ஆகிய ஒருவனை வெல் லல் அரிது. (எ)

விரைந்து தொழில் கேட்கு ஞாலநிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

(க-ரை.) சொல்லப்படும் காரியங்களை இனிதா கச் சொல்லுதலில் வல்லமந்திரிகளைப்பெற்றால் உல கம் ஏற்றுக்கொள்ளும். (அ)

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்ரு தவா.

(க-ரை.) குற்றமற்றவார்த்தைகளைப்பேச அறியா
தவர்கள பலவார்தைகளைப்பேச விரும்புவாாகள்.

இணரூழ்த்து நாரு மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தாா.

(க-ரை.) கற்றநூல்களை விரித்துச்சொல்லாதவா்
கள் வாசனை இல்லாத மலருக்கு ஒப்பாவாா. (கO)

---

## சாசா-ம். அதி.—வினைத்தூய்மை.

அஃதாவது - செயப்படும் தொழில்கள் பொருளை
மாத்திரமல்லாமல் அறமும் புகழுமதந்து நல்லவை
ஆதலாம்.

---

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெலலாந தரும்.

(க-ரை.) ஒருவனுக்கு துணை நன்மை செல்வம்
ஒன்றைத்தரும் தொழிலின் நன்மை வேண்டியவற்
றைத்தரும். (க)

என்று மொருவுதல் வேணடும் புகமொடு
நன்றி பயவா வினை.

(க-ரை.) அரசனுக்குப் புகழையும் தருமத்தை
யும் தாராத்தொழில்களை மந்திரிகள் விடவேண்டும்.

ஓஒதல வேண்டு மொளிமாழ்குஞ் செய்
வினே, யாஅது மென்னு மவா.

(க-ரை.) மேலாக ஆவோமென் று எண்ணுவோர்
கெடுதற்குக் காரணமானதொழிலே விடக்கடவா.

இடுக்கட் படினு மிளிவநத செய்யாா
நடுக்கறற காட்சி யவர்.

(க-ரை.) அசைவு இலலாத அறிவினே உடைய
வர் துனபம வரினும இழி தொழிலேச செய்யாா.

எற்றென் றிறங்குவ செய்யற்க செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நனறு.

(க-ரை.) தான் வருந்தும் தொழில்களேச்செய்யா
திருக்கக்கடவன் அவற்றைச்செய்வானுகிலும் பின்
செய்யாமை நல்லது. (ரு)

ஈன்ருள் பசிகாணபா னுயினுஞ் செய்யற்க
சான்ருே பழிக்கும் வினே.

(க-ரை.) தாய்பசியைக்கண் டானுயினும் அதைக்
குறித்துப் பழிக்கும் தொழிலேச் செயயாதிருக்கக்
கடவன். (சா)

பழிமலைந தெய்திய வாக்கத்திற் சான்ருேர்
கழிநல் குரவே தலே.

(க-ரை.) பழியால அடைந்த செல்வத்திலும்
பெரியோா அநுபவிக்கும வறுமையே மேலாம. (எ)

கடிந்த கடிந்தொரார் செய்தாாக் கவைதா
முடிநதாலும பீழை தரும.

(க-ரை.) பெரியோர் தள்ளப்பட்ட தொழிலைக் கொள்ளப்பட்ட மந்திரிகளுக்கு அத்தொழில் முன் முடியினும் பின் துன்பந்தரும். (அ)

அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பி
னும, பிற்பயக்கு நற்பா லவை.

(க-ரை.) பிறன் அழக்கொண்டபொருள் யாவும் தான் அழப்போகும் நல்வழியால் வந்தபொருள்கள் முன் இழந்தாலுயினும் பின்பயன்கொடுக்கும். (கூ)

சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசு
மட், கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

(க-ரை.) மந்திரி அரசனுக்கு வஞ்சிப்பால் பொருளைதேடிக்காத்தல் பசியமணபாததிரத துளளே நீரைவார்த்துக் காத்தல போலாம். (கO)

---

## கூஎ ம். அதி.—வினைத்திட்பம்.

அஃதாவது-பரிசுததமாகிய தொழிலை முடிப்பவனுக்கு வேண்டுவதாகிய மனவலிமையாம்.

---

வினைத்திட்பமென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம பிற.

(க-ரை.) தொழில்வலிமை யென்று சொல்லப் படுவது ஒருவன மனவலிமையாம் மற்றவலிமை வலிமை அல்லவாம். (க)

ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

(க-ரை.) மந்திரிகள் துணிவானது பழுதுபடும் தொழிலைச்செய்யாமையும அத்தொழில பழுதாகில் தளராமையுமாம். (உ)

கடைக்கொட்கச் செய்தக்கதாண்மை யிடைக்
கொட்கி, னெற்றா விழுமந் தரும.

(க-ரை.) தொழிலைமறைதது முடிவிலசெய்வதே வலிமையாம அது நடுவில் வெளிபபடுமாகில் துன பமாம. ( )

சொலலுதல யாாககு மெளிய வரியவாஞ்
சொலலிய வணணஞ் செயல.

(க-ரை.) தொழிலசெய்வோம என்றல் யார்க்கும எளிதாம் அதைசசொலலியபடி செய்தல் அரிதாம்.

வீறெய்தி மாணடார் வினைத்திட்பம வேந்
தன்க, ணூறெய்தி யுள்ளபபடும்.

(க-ரை.) மநதிரிகள் தொழில வலிமையானது அரசன இடத்துப்பொருநதுதல் யாவராலும மதிக் கப்படும. (ரு)

எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண
ணியார், திண்ணிய ராகப் பெறின்.

(க-ரை.) தொழில் வலிமை உடையவராகில் நினைக்கப்பட்டபொருளை நினைததபடி பெறுவார.

உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெ
ருந்தேர்க், கச்சாணி யன்னா ருடைத்து.

(க-ரை.) உலகம நோக்கு அச்சாணிபோலத் தொழிலில் வலிமையுள்ளோரை உடையது அத ஞல் வடிவுகண்டு ஒருவரை இகழலாகாது. (எ)

கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல

(க-ரை.) மனமதெளிந்து செய்யத்துணிந்த தொழில இடைதது ஆலசியம இலலாமல் அததொழிலைச் செயயக்கடவா. (அ)

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம பயக்கும வினை

(க-ரை.) துன்பமவரினும துணிவுடன் இன்பம் தரும் தொழிலைசசெய்யக்கடவா. (கூ)

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும வினைத
திட்பம, வேணடாரை வேணடா துலகு.

(க-ரை.) உயாந்தோா தொழில் வலிமையை விருமபாத மநதிரிகளை மதியாா. (கo)

---

## சாஅ-ம். அதி.—வினை செயல்வகை.

அஃதாவது - வலிமையுடைய மந்திரியானவன் தொழிலைச் செய்யும திறமாம்.

---

சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது.

(க-ரை.) ஆலோசனைக்கு எல்லையாவது துணிவு பெறுதல் அததுணிவு பின்னல் ஆலசியப்படுதல் குறறம. (க)

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

(க-ரை.) ஆலசியமாகச் செய்யும் தொழில்களை ஆலசியமாகச் செய்யக்கடவன் விரைவாகச் செய்யும் தொழில்களை விரைவாகச் செய்யக்கடவன்.

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்
லாக்காற், செல்லும்வாய் நோக்கிச் செயல்

(க-ரை.) குற்றம் கூடுமிடத்தெல்லாம் தண்டித்தல் நல்லது அது கூடா இடத்து மூன்று உபாயங்களால் செய்யக்கடவன். (ந.)

வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்
காற், றீயெச்சம் போலத் தெறும்.

(க-ரை.) தொழில் பகை இவை இரண்டின் குறைவுகள் அக்கினியினது குறைவுபோல்வளர்ந்து கெடுக்கும். (ச)

பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.

(க-ரை.) பொருளும் சாதனமும் காலமும் தொழிலும் இடமும் இவ்வைந்தும் நினைத்துத் தொழில் செய்யக்கடவன். (ரு)

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(க-ரை.) முயற்சியையும் இடையூற்றையும் பயனையும் ஆராய்ந்து தொழில்செய்யக்கடவன். (சு)

செய்வினை செய்வான் செயன்முறை யவ்
வினை யுள்ளறிவா னுள்ளங் கொளல்.

(க-ரை.) தொழிலைச் செய்யத்தொடங்கினவன் செய்யும் முறையாவது அந்தொழிலின் உளப்பாட்டை அறிதல். (எ)

வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(க-ரை.) தொழிலாலே தொழிலை முடித்துக் கொள்ளக்கடவன் இது யானையை யானையால் கட்டியதைப் போலும். (அ)

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்.

(க-ரை.) பகைவரைச் சிநேகமாக்கிக்கொள்ளுதல் சிநேகருக்கு நல்லவைகளைச் செய்தலினும் நல்லது. (கூ)

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெ
றிற், கொள்வர் பெரியாரப் பணிந்து.

(க-ரை.) அருமை இடம் சிறியாராகிய மந்திரிகள் பகைவர் எதிர்த்த இடத்துப் பணிந்துகொள்வார்.

## சாகூம். அதி.—தூது.

அஃதாவது-பொருந்தல் பிரித்தல்களுக்கு வேற்றரசர் இடத்தே தூதுசெல்வோரது தன்மையாம்.

அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்த
வாம்பண்புடைமை தூதுரைப்பான் பண்பு

(க-ரை.) அன்பும் நற்குடியில் பிறந்தலும் அரசர் விரும்பும் குணமும் உடையனாதல் தூதன் இலக்கணம். (க)

அன்பறிவா ராய்ந்த சொல்வன்மை
தூதுரைப்பார்க், கின்றி யமையாத மூன்று

(க-ரை.) அன்பு அறிவு சொல்வன்மை இவை தூது சொல்வோர்க்கு குணங்களாம். (உ)

நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

(க-ரை.) நூலறிவுக்கு இலக்கணமாவதுமந்திரிகள் இடத்து வல்லவன் ஆகுதல். (ங)

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றின்
செறிவுடையான் செல்க வினைக்கு

(க-ரை.) அறிவு உருவு கல்வி இவற்றை உடையவனே தூது செல்லக்கடவன். (ச)

தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச்
சொல்லி, நன்றி பயப்பதாந் தூது.

(க-ரை.) தொகுத்துச் சொல்லியும் கடுஞ்சொல்லை நீக்கி மகிழச்சொல்லியும் அரசனுக்கு நன்மை செய்பவனே தூதன். (ரு)

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் கா
லத்தாற், றக்க தறிவதாந் தூது.

(க ரை.) நீதி நூலைக்கற்றுப் பகை அரசா மனம கொளச்சொல்லி அஞசாதவனுய் காலததிறகு ஏறக உபாயம அறிபவனே தூதன. (கூ)

கடனறிநது காலங் கருதி யிடனறிந
தெணணி யுரைபபான றலை

(க-ரை.) முறைதெரிநது சமையம்பாாததுத தக்க இடம் அறிநது எண்ணிச் சொலபவனே தூதரில தலைமை உடையவன. (எ)

தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்
றின், வாயமை வழியுரைபபான பணபு.

(க-ரை.) சுததமும் துணையும துணிவும சத்திய மும இந்நான்கும தூதன இலக்கணமாம. (அ)

விடுமாற்றம வேநதர்க் குரைபபான் வடுமாற்
றம, வாய்சோரா வன்க ணவன்

(க-ரை.) தன் அரசன் வாாததையை வேற்ற சர்க்குச் சொலலுதற்கு உரியவனே தூதரில வலிய வன். (கூ)

இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந தூது.

(க-ரை.) தனக்கு முடிவுவரினும அஞ்சாது வேற் றரசனுக்குத தன அரசன் சொல்லைச்சொல்பவனே தூதன. (கo)

## எo-ம். அதி.—மன்னரைச்சேர்ந்தொழுகல்.

அஃதாவது - மந்திரி அரசரைப்பொருந்தி நடக் கும விதமாம.

அகலா தணுகாது தீக்காய் வார்போலக
விகலவேநதர்ச் சேர்ந்தொழுகு வார

(க-ரை.) மந்திரிகள் மாறுபாடுடைய வேந்தர் இடத்து அகலாமலும் அணுகாமலும் இருக்கக்கடவர்.

மன்னா விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந தரும.

(கரை.) தமது அரசரால் விரும்பப்பட்டவற்றை விருமபா திருததல் மநதிரிகளுக்கு அவரால் செல்வம உணடாம். (உ)

போற்றி னரியவை போற்றல கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது.

(க-ரை.) மந்திரிகள் தங்களிடத்துக் குற்றம்வாராமல் காக்கக்கடவர் தம் அரசா சநதேகிததபின அவரைததெளிவிததல் அரிது. (ந)

செவிச் சொல்லுஞ் சேர்நத நகையு மவித்
தொழுக, லான்ற பெரியா ரகத்து.

(க-ரை.) மந்திரி அரசன் இடத்து இருக்கையில் ஒருவன் செவியில் சொல்லுதலையும் ஒருவனைக் கண்டு நகைத்தலையும் நீக்கி நடக்கக்கடவன. (ச)

எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்
பொருளை, விட்டக்காற் கேட்க மறை.

(க-ரை.) அரசன் இரகசியம் பேசுகையில் கேளாமலும் அதைவினவாமலும் இருந்து அவன்சொல்வதை மந்திரிகள் கேட்கக்கடவா. (ரு)

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல.

(க-கை.) குறிப்பு அறிந்து சமையம்பார்த்து வெறுப்பிலலாத வறறையும வேணடுவன வறறையும சொல்லக்கடவா. (சு)

வேட்பன சொலலி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொலலா விடல.

(க-ரை.) அரசன விருமபிய வற்றைச சொல்லிப் பயனில்லாத வற்றை அவனகேட்டாலும் மநதிரி சொலலாது விடக்கடவன. (எ)

இளைய ரினமுறைய ரென்றிகழாா நின்ற
வொளியோ டொழுகப படும.

(க-ரை.) மந்திரிகள அரசரை இளையவா எமது சாதியாா எனறு இகழாமல் மதிக்கககடவா். (அ)

கொளபபட்டே மென்றெணணிக் கொள்
ளாத செய்யாா, துளக்கற்ற காடசி யவா.

(க-ரை.) அறிவுடையவா அரசனாலே மதிக்கப் பட்டோம எனறு நினைதது அவா விரும்பாதவற்றைச் செய்யாா. (கூ)

பழைய மெனக்கருதிப பண்பலல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும.

(க-ரை.) அரசனுக்குப் பழைமையோம் என்று நினைத்து இயலபு அல்லாதவற்றைச் செய்யும் உரிமையானது மந்திரிகளுககுக் கேட்டைத்தரும.

## எரு-ம. அதி.—குறிப்பறிதல்.

அஃதாவது-அரசா நினைத்ததை அவர் சொல்லா மல அறிதலாம.

கூறுமை நோக்கிக் குறிபபறிவா னெஞ்
ஞான்று, மாறுநீர் வையக் கணி

(க-ரை.) அரசன் குறிபபை அறிகிற மந்திரி உல கத்தாாக்கு ஆபரணம ஆவான. (க)

ஐயப படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வததோ டொபபக் கொளல.

(க-ரை.) மனததின இடதது நடபபதை அறிபவ னைத தெயவத்தோடு சமானமாகக கொளளக்கட வன. (உ)

குறிபபிற் குறிப்புணா வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்தும கொளல.

(க ரை.) குறிப்பால் குறிபபு அறிபவரை வேண் டுவன கொடுததுக் கொளளக்கடவா. (ந)

குறித்தது கூறுமைக் கொள்வாரோ டேனை
யுறுபபோ ரனையரால வேறு

(க-ரை.) மனதில் நினைத்ததைச் சொல்லாமல் அறியவலலவரோடு அறியமாட்டாதவரை வடிவால் வகுப்பினும் அவா அறிவால் வேறுவா. (ச)

குறிபபிற் குறிபபுணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயததவோ கண.

(க-ரை.) குறிப்பால்பிறாகுறிப்பை அறியாவிடில் கண்கள என்னபயனைத்தரும? (ரு)

அடுத்தது காட்டும் பளிஙகுபோ னெஞ்சங
கடுத்தது காட்டு முகம.

(க-ரை.) அடுத்தபொருளைக்காட்டும் கண்ணுடி போல ஒருவனமனத்தினகுணதகைமுகமகாடடும.

முகத்தின் முதுக்குறைநத துண்டோ வுவப்
பினுங, காயினுங் தானமுந துறும.

(க-ரை.) உயிரானது விருமபினுலும் வெறுத் தாலும் தான அறிந்து முன்னேநிற்கும முகமபோல அறிவுமிகுந்தது வேறு இல்லை. (எ)

முகநோக்கி நிற்க வமையு மகனேக்கி
யுற்ற துணாவாாப பெறின்

(க-ரை.) மனதைக் குறிப்பால் அறிந்து உற்றதை அறிவாரைபபெற்ருல அவாமுகமபாாத்து நிற் கப்போதும. (அ)

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங்
கண்ணின, வகைமை யுணர்வாாப் பெறின்.

(க-ரை.) கண்ணின் தன்மையை அறியவல்ல மந்திரிகளை அரசாபெற்ருல் அவாக்குப்பகையையும் நட்பையும் கண்காட்டும. (கூ)

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்
காற், கணணலல தில்லை பிற.

(க-ரை.) அரசர்கருத்தை அளக்கும்கோலாவது அவாகள் கண்களே அல்லாமல் வேறில்லை. (க0)

## எஉ-ம். அதி.—அவையறிதல்.

அஃதாவது - அரசனோடிருந்த சபை இயல்பை அறிதலாம்.

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்
லின், றொகையறிந்த தூய்மை யவா.

(க-ரை.) சொல்லின தொகையை அறிந்தவர் சபை அறிந்து சொலலக்கடவா. (க)

இடைதெரிந்து நன்குணாந்து சொல்லுக
சொலலி, னடைதெரிந்த நன்மை யவா.

(க-ரை.) சொல்லின நடை அறிந்தவா சமையம் அறிந்து சொல்லக்கடவா. (உ)

அவையறியார் சொலலன்மேற் கொள்பவா
சொலலின், வகையறியா வலலதூஉ மில.

(க-ரை.) சபை அளவை அறியா ஆகிப் பேச மேற்கொளபவா சொலலின்வகை அறியா. (ரு)

ஒளியாாமுன் னெள்ளிய ராதல வெளியாா
முன், வான்சுதை வண்ணங் கொளல.

(க-ரை.) அறிவாளிகள் சபைமுனனே அறிவா ளிகள் ஆகக்கடவா. அறிவிலலாா சபைமுன்னே அறிவில்லாா ஆகக்கடவா. (ச)

நன்றென் றவற்றுள்ளு நன்றே முதுவருண
முந்து கிளவாச் செறிவு.

(க-ரை.) அறிவுடையோர சபையில அவர முன்னர முந்துறைச்சொல்லாத அடக்கமானது நன்மையெல்லாவற்றுள்ளும் நல்லது. (ரு)

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்ன ரிழுக்கு

(க-ரை.) கற்றவர சபையில் கற்றவன் இழுக்குப்படுதல நல்லவழியில நின்றவன தீவழியில விழுந்தாற்போலும். (சு)

கற்றறிந்தார கல்வி விளக்கும் கசடறச்
சொற்றெரிதல வல்லா ரகத்து

(க-ரை.) குற்றம அறக் கற்றவர சபையில கற்றவர கல்வி விளங்கும. (எ)

உணர்வ துடையார்முற் சொல்லல வளர்வ
தன், பாத்தியு ணீர்சொரிந் தற்று

(க-ரை.) கற்றவர சபையில கற்றவர ஒன்றைசசொல்லல பாத்தியில் நீர்விட்டாற்போலும. (அ)

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்
லவையு, ணன்கு செலச்சொல்லு வார.

(க-ரை.) நல்லோர சபையிலே நற்பொருளைச்சொல்பவர் புல்லர்சபையிலே மறந்தும சொல்லாதிருக்கக்கடவர. (கூ)

அங்கணத் துளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல.

(க-ரை.) தம இனத்தார அல்லார சபையில் ஒன்றும சொல்லாது இருக்கக்கடவன சொல்லுதல் சேற்றுள்வீழ்ந்த அமிர்தம் ஒக்கும். (கய)

## எ௩-ம். அதி. அவையஞ்சாமை.

அஃதாவது-சொல்லுதற்கு உரியசபையை அறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமையாம்.

---

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்
லின், றொகையறிந்த தூய்மை யவர்.

(க-ரை.) சொல்லினது தொகையை அறிந்தவர் சபையினது வகையை அறிந்து பிழைபடச்சொல்லார். (௧)

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

(க-ரை.) கற்றவர் சபையில் கற்றவற்றைச் சொல்லவல்லவர் கற்றவர் எல்லாருள்ளும் கற்றவர் என்று சொல்லப்படுவார். (௨)

பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர்.

(க-ரை.) பகையின் இடத்து அஞ்சாது இறக்கவல்லவர் பலர் சபையின் இடத்து அஞ்சாது பேசவல்லவர் சிலர். (௩)

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

(க-ரை.) கற்றவர்முன் கற்றவற்றைச் சொல்லித் தாம் கற்றவைகளினும் மேலானவற்றைக் கற்றவரிடத்துத் தெரிந்துகொள்ளக்கடவர். (௪)

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற பொருட்டு.

(க-ரை.) வேற்றரசாசபையில் அஞ்சாது எதிர் மொழி கொடுத்தற் பொருட்டுச் சொல இலக்கண வழியால் அளவை நூல் அறிந்து மந்திரிகள் கற்கக் கடவாகள். (ரு)

வாளொடென் வன்கண்ண ரலலாாக்கு
நூலொடென, னுணணவை யஞசு பவாக்கு.

(க-ரை.) சௌரியம இல்லாதவாக்கு வாளாயுதத் துடன எனனசமபந்தம உணடு? அதுபோலக் கற்ற வர் சபைக்கு அஞ்சுவோர்க்கு நூலோடு என்ன சம் பந்தம் உணடு? (சா)

பகையகத்துப பேடிகை யொள்வா ளவைய
கத், தஞ்சு மவன்கற்ற நூல.

(க-ரை.) சபைக்கு அஞ்சுவோன கற்றநூல் பேடி கையில் இருக்கும் வாளை ஒப்பாகும். (எ)

பல்லவை கற்றும் பயமிலரே நலலவையு
ணன்கு செலச்சொலலா தார்.

(க-ரை.) நல்லவர் சபையிலே நல்லபொருளைச் சொல்லாதவர் பலநூல்களைக் கற்றாராயினும் பயன் இல்லாதவராவர். (அ)

கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார்.

(க-ரை.) கற்றிருந்தும் கற்றவர்சபைக்கு அஞ்சு பவர் கல்லாதவரிலும் கடையராவர். (கூ)

உளரெனினு மில்லாரொ டொப்பர் களனஞ்சிக், கற்ற செலச்சொல்லா தார்.

(க-ரை.) சபைக்கு அஞ்சிக் கற்றவற்றைச் சொல்லாதவர் உயிரோடிருந்தும் இறந்தவரோடு ஒப்பா.

## எசு-ம். அதி.—நாடு.

அஃதாவது - இவ்வித வளப்பங்களை உடையது நாடாம.

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

(க-ரை.) உழவரும அறிவோரும் செல்வரும் கூடி வாழ்வதே நாடாம். (க)

பெருமபொருளாற் பெட்டக்க தாகி யருங்
கேட்டா, லாற்ற விளைவது நாடு.

(க-ரை.) அளவு இல்லாப் பொருள் உடைமையால் பிறரால் இச்சிக்கத்தக்கது ஆகி அழிவு இன்மை பொருந்தி மிகவிளைவதே நாடாகும். (உ)

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி
யிறைவற், கிறையொருங்கு நேர்வது நாடு.

(க-ரை.) பிறநாட்டுப்பாரம் தன்மேல் வரும்போது அவற்றைத்தாங்கித் தன் அரசனுக்கு இறைப்பொருள் முற்றும் தருவதே நாடாம். (ங)

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

(க-ரை.) பசியும பிணியும் பகையும் சேராமல் இருபபது நாடாகும. (ச)

பலகுழுவும பாழ்செய்யு முட்பகையும வேந
தலைகருந, கொலகுறுமபு மிலலது நாடு.

(க-ரை.) பலகூட்டமும் பகையும கொலைதொழிற் குறும்பரும இல்லாததே நாடாகும. (ரு)

கேடறியாக் கெட்ட விடததும வளங்குன்று
நாடெனப நாட்டிற் றலை.

(க-ரை.) கேடில்லாததும வளங்குன்றுததுமான நாட்டை எல்லாநாட்டிலும் முதனமையான நாடு என்பர். (சு)

இருபுனலும வாய்நத மலையும் வருபுனலும
வலலரணு நாட்டிற் குறுபபு

(க-ரை.) நீரும் மலையும மலையில் வருநீரும் நகரும் நாட்டிற்கு உறுபபாம். (எ)

பிணியின்மை செலவம் விளையின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைநது.

(க-ரை.) நோய் இல்லாமையும் செல்வமும் பயிர் விளைவும் இன்பமும் காவலும் இவைவைந்தும் நாட்டிற்கு அழகாகும். (அ)

நாடென்ப நாடா வளத்தன நாடலல
நாட வளந்தரு நாடு.

(க-ரை.) தேடாத செல்வத்தை உடையதை நாடு என்று சொல்லுவர் தேடிவருந்த செல்வத்தைத் தருநாடுகள் நாடுகளல்ல. (கூ)

ஆங்கமை வெய்தியக் கணணும் பயமின்றே
வேந்தமை விலலாத நாடு.

(க-ரை.) இராசனுடன் பொருந்தாத நாடானது எலலாநிறைவு உள்ளதாயினும்பிரயோசனம இலலை.

## எரு-ம். அதி.—அரண்.

அஃதாவது-இனனினன தனமையை உடையது அரணும்.

ஆற்று பவாக்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவாக்கும பொருள்.

(க-ரை.) கோட்டையானது போர்செய்வோாக்கும தனனை அடைந்தோாக்கும சிறந்தபொருளாகும். (க)

மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண.

(க-ரை.) நீரையும வெளிநிலத்தையும் மலையையும் காட்டையும் உடையது கோட்டையாம். (உ)

உயர்வகலந் திணமை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல.

(க-ரை.) உயர்வு அகலம் வலிமை அருமை இந் நான்கின் மிகுதியையுடைய மதிலைக்கோட்டை என்று சொல்லுவர். (ந)

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

(க-ரை.) காக்கும் இடம் சிறிதாய்ப் பரந்த இடம் உடையதாய்ப் பகைவர் வலிமையைக் கெடுப்பதே கோட்டையாம். (ச)

கொளற்கரிதாய்க் கொண்ட கூழ்த் தாகியகத்
தாரு நிலைக்கெளிதா நீர தரண.

(க-ரை.) பகைவர் கொள்ளுதற்கு அரிதாய்ப் பலவகை உணவை உடையதாய் உள்ளிட்டோர் போர்நிலைக்கு எளியதாகியகுணம் உடையதே கோட்டை. (ரு)

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.

(க-ரை.) எல்லாப்பொருளும் உள்ளதாய் வீரரை உடையது கோட்டை. (சா)

முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும
பற்றற் கரிய தரண்.

(க-ரை.) சூழ்ந்தும் சூழாமலும் போர்செய்தும் கீழறைபெற்றும் பிறரால் கொள்ளுதற்கு அரியது கோட்டையாம். (எ)

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

(க-ரை.) தன்னைப்பற்றிச் சூழ்ந்தவரை தன் இடத்து இருந்தவர்பற்றி வெல்வதே கோட்டையாம்.

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

(க-ரை.) போர் இடத்துப் பகைவர்கெடத் தொ ழில இடதநுப் பெருமை உடையது கோட்டை.

எனைமாட்சித் தாகியக் கணணும வினைமாட்சி யிலலாாக ணிலல தரண

(க-ரை.) கோட்டை எவவளவு பெருமை உடை யதா இருந்தும் தொழில் பெருமை இல்லாதவர் இடத்துப் பயன் இல்லை. (கo)

---

## எசு-ம். அதி.—பொருள்செயல்வகை.

அஃதாவது-இவவித வகையை அடையச் செய் வது பொருளாம்.

---

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும பொருளல்ல தில்லை பொருள்.

(க-ரை.) மதிக்கப்படாதவரையும் மதிக்கப்படச் செய்யும் பொருள் அல்லாமல் ஒருவாக்கு வேறு பொருள் இல்லை. (க)

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(க-ரை.) வறியவரை யாவரும் இகழ்வர் செல்வ ரை யாவரும் புகழ்வர். (உ)

பொருளென்னும் பொய்யா விளக்க மிருள றுக்கு, மெண்ணிய தேயத்துச் சென்று.

(க-ரை.) பொருள் என்னும் விளக்கானது பகை என்னும் இருளைக் கெடுக்கும். (ந)

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்
தீதின்றி வந்த பொருள்.

(க-ரை.) குற்றம் இல்லாமல் வந்தபொருளா
னது தருமத்தையும இன்பத்தையும தரும. (ச)

அருளொடு மன்பொடும வாராப் பொருளாக்
கம், புலலா புரள விடல.

(க-ரை.) அருளோடும் அனபோடும வாராதபொ
ருளை அரசா நீக்கக்கடவா. (ரு)

உறுபொருளு முல்கு பொருளுந்தன் ஒன்
னாத். தெறுபொருளும வேந்தன் பொருள்.

(க-ரை.) உடையவா இல்லாப் பொருளும் சுங்
கப்பொருளும் பகைவரைவென்று திறைகொண்ட
பொருளும அரசன் பொருளகளாம. (சு)

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்
னுஞ், செலவச் செவிலியா லுண்டு.

(க-ரை.) அன்பால் ஈன்றிடப்பட்ட அருளென்
னும் குழந்தையானது பொருள் எனனும் செவிலித்
தாயால வளரும். (எ)

குன்றேறி யானைபபோா கணடற்றூற் றன்
கைத்தொன், றுணடாகச் செய்வான் வினை.

(க-ரை.) தன்பொருள் இருக்க ஒருதொழிலைச்
செயபவன் செய்கையானது மலைமேல் ஏறி யானை
கள் போரைக்கண்டதை ஒக்கும். (அ)

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

(க-ரை.) திரவியத்தைச்சம்பாதிக்கக்கடவர் அத்திரவியம் பகைவர் செருக்கைக் கெடுக்கும் ஆயுதமாம். (௯)

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருள், ஏனை யிரண்டு மொருங்கு.

(க-ரை.) நல்வழியால் வரும்பொருளை மிகவும் உண்டாக்கினவர்க்குத் தருமமும் இன்பமும் எளியனவாம். (௧0)

## எஎம். அதி.—படைமாட்சி.

அஃதாவது-சேனையினது தன்மையாம்.

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

(க-ரை.) போரில் அஞ்சாது நின்று வெல்லும் படையானது அரசன் செல்வம் யாவற்றிலும் தலைமையானது. (க)

உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத், தொல்படைக் கலலா லரிது.

(க-ரை.) அஞ்சாது நின்று தாங்கும் சௌரியமானது அரசன் பழையசேனைக்கு அல்லது மற்றவர்க்கு இல்லை. (உ)

ஒலித்தக்கா லென்னு முவரி யெலிபபகை
நாக முயிரப்பக் கெடும்.

(க-ரை.) எலிகள் கூடிச் சத்தித்தால் பாம்புக்கு என்ன துன்பம்வரும? பாம்பு மூச்சு விட்ட அளவில் எலிகள் அழியும். (௩)

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

(க-ரை.) போரில் கெடுதல் இல்லாமல் பழைமையாக வநத செளரியம் உடையதே அரசனுக்குப் படையாம். (௪)

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை.

(க-ரை.) இயமன் கோபித்து மேலிட்டு வரினும் எதிர்நின்று தாங்கும் வலிமை உடையதே படையாம். (௫)

மறமான மாணட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம படைக்கு.

(க-ரை.) செளரியமும், மானமும் நல்வழிச் செய்கையும், நமபிக்கையும ஆகிய இநநானகு குணமும் சேனைக்கு அரண் ஆகும். (௬)

தார் தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

(க-ரை.) தன்மேல் வந்தபோரை விலக்கும் வகுப்பை அறிந்து பகைவர் தூசிப்படையைத் தடுத்துச் செல்வதே படையாம். (௭)

அடற்றகையு மாற்றலு மிலவெனினுந் தானே
படைத்தகையாற் பாடு பெறும.

(க-ரை.) சேனையானது சௌரியமும் வலிமை
யும இல்லை ஆயினும் பொலிவினலே பெருமையை
அடையும். (அ)

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மிலலாயின வெல்லும படை.

(க-ரை.) சிறிதாகலும் வெறுப்பும வறுமையும்
இல்லாவிடின் சேனையானது பகையைவெல்லும்.

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளிலவழி யில.

(க-ரை.) சேனையானது வீரரை மிக உடைத்தா
யினும் படைத்தலைவர் இல்லா இடத்துப் போரில்
நில்லாது. (க0)

---

## எஅ-ம். அதி.—படைச்செருக்கு.

அஃதாவது-சேனையினது மறமிகுதியாம்.

---

என்னைமுன் னிலலன்மின் றெவ்விர் பல
ரென்னை, முன்னின்று கன்னின் றவர்.

(க-ரை.) பகைவரே! என்தலைவர்முன் நின்று
வெல்லாது இறந்தவர் பலர் ஆதலினல் நீங்கள் உயி
ரோடு இருக்கவிரும்பினல் அவர் முன் நில்லாதீர்
கள். (க)

கான முயலெய்த வமபினில யானை
பிழைத்தவே லேநத லினிது.

(க-ரை.) முயலை எய்த அமபை ஏந்துதலைப்பார்க் கிலும் யானையை எய்து தப்பிய அமபை ஏந்துதல் நலலது. (உ)

பேராணமை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு

(க-ரை.) பகைவரைவெலலும மறமானது மிகுந் த ஆணமையாகும அப்பகைவாக்குத் தாழ்வுவநத காலத்து உதவுதல கூாமையாகும். (ங)

கைவேல களிற்றொடு போககி வருபவன்
மெய்வேல பறியா நகும

(க-ரை.)கைவேலை யானைமேல் எறிந்துவருபவன் தன்மெய்வேலைப்பிடுஙகி மகிழ்வான. (ச)

விழித்தகண் வேலகொண் டெறிய வழித்தி
மைப்பி, னோட்டன்றோ வன்கணவாக்கு.

(க-ரை.)கோபிததுப்பார்த்த கண் வேல்கொண்டு எறிய இமைக்குமாயின் தோற்பு அல்லவா? (ரு)

விழுபபுண் படாதநா ளெலலாம் வழுக்கினுள்
வைக்குநதன் னாளை யெடுத்து.

(க-ரை.) சுத்தவீரனானவன் போாசெய்யப்படா த நாளை வீண்நாளென்று எண்ணுவான். (சு)

சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(க-ரை.) புகழைவிரும்பி உயிரைவிரும்பாதவா வீரக்கழலைக்கட்டுதல அவாககு ஆபரணமாம். (எ)

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீா குன்ற லிலா.

(க-ரை.) தமமுயிாக்கு அஞசாது போர்செய்யும் வீரா த்மமரசன கோபிககினும வீரம குறையாா.

இழைத்த திகவாமைச் சாவா ரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவா.

(க-ரை.)சபதப்படி போரில சாகும்வீரரை இகழ் பவா யாா? (கூ)

புரந்தாாகண் ணீர்மலகச் சாகிற்பிற் சாக்கா
டிரநதுகோட் டக்க துடைத்து.

(க-ரை.) வீராகள் அரசா கண்கள் நீா ததும்பப் போரில் இறந்தால அவவிறத்தல்கொள்ளததக்கது.

---

எகூ-ம். அதி.—நட்பு.

அஃதாவது-இன்னவிதமாய் நடப்பது நட்பாம்.

---

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

(க-ரை.) நட்பைப்போல சம்பாதித்தற்கு அரிய பொருள் எவை இருக்கின்றன? (க)

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

(க-ரை.) அறிவுடையோர் நட்பு இளம்பிறை போல வளரும் அறிவில்லார் நட்பு நிறைசந்திரன் போல் குறையும. (உ)

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும் பணபுடை யாளா தொடர்பு.

(க-ரை.) நற்குணம் உடையவா நட்பானது படிக்குந்தோறும நூல் பயனகொடுத்தல் போலாம.(ங)

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண் மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(க-ரை.) நகைக்குமபொருட்டு அல்ல சிநேகம் செய்தல் புத்திசொல்லும் பொருட்டே. (ச)

புணாச்சி பழகுதல வேண்டா வுணர்ச்சிதா னட்பாங் கிழமை தரும

(க ரை.) இருவர்க்கும் ஒத்த அறிவே சிநேகம் தரும. (ரு)

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத் தகநக நட்பது நட்பு.

(க-ரை.) முகமமலர்ந்து சிநேகிப்பது சிநேகம் அல்ல அகமமலாந்து சிநேகிப்பதே சிநேகம். (சு)

அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க ணல்ல லுழப்பதா நட்பு.

(க-ரை.) நட்பாவது தீயவழியை நீக்கி நல்லவழியை நடத்தித் துன்பத்தை அனுபவிப்பதாம். (எ)

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

(க-ரை.) ஆடைகுலைந்தவன் கைபோலத் துன்பத்தை நீக்குவதே நட்பாம்.                    (அ)

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்
பினறி, யொல்லுமவா யூன்று நிலை.

(க-ரை.) நட்பிற்கு அரசிருக்கை யாதென்றால் எந்நாளும் தாஙகும திணைமையாம்.                    (கூ)

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும புல்லென்னு நட்பு

(க-ரை.) இவா எஙகளுக்கு இவ்வளவு அன்பினர் நாஙகள இவாக்கு இவ்வளவு அன்பினர் என்று சிறப்பிக்கில் சிநேகம் சிறிதாம.                    (க0)

## அ0-ம். அதி.—நட்பாராய்தல்.

அஃதாவது - முன்சொல்லப்பட்ட இலக்கணம் உடையவரை ஆராய்ந்து அறிந்து சிநேகிக்க வேண்டுதலாம்.

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(க-ரை.) சிநேகிப்பவர்க்குச் சிநேகித்தபின் சிநேகத்தை விடுதல் இல்லை ஆராயாமல் சிநேகித்தல் போல் கேட்டைத்தருவது ஒன்றில்லை.                    (க)

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை
கடைமுறை, தான்சாந் துயரந் தரும்.

(க-ரை.) ஆராய்ந்து கொள்ளாதவன் சிநேகம் சாவதற்கு ஏதுவான துன்பம தரும். (உ)

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனுமறிந் தியாக்க நட்பு.

(க-ரை.) குணத்தையும குடிப்பிறப்பையும் குற்றத்தையும அறிந்து நட்புச் செய்யக்கடவன. (ங)

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளலவேணடு நட்பு

(க-ரை.) உயாகுலத்தில் பிறந்து பழிக்கு அஞ்சுபவனைப் பொருள் கொடுத்தும சிநேகம கொள்ளக் கடவன். (ச)

அழச்சொலலி யல்ல திடித்து வழக்கறிய
வலலார நட்பாய்ந்து கொளல.

(க-ரை.) ஒருவன் பாவங்களைச்செய்ய நினைத்தால் அழும்படி சொல்லி விலக்கியும் பாவங்களைச் செய்தால் செய்யாதிருக்க நெருக்கியும் உலகநடை செய்விக்க வல்லவரைச் சிநேகிக்கக்கடவர். (ரு)

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

(க-ரை.) கேட்டின் இடத்தும் சிநேகரால் பெறப்படும் நல்லறிவு உண்டாம. (சு)

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

(க-ரை.) ஒருவனுக்கு இலாபமென்று சொல்லப் படுவது அறிவு இல்லார சிநேகத்தை விடுதல். (எ)

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு

(க-ரை.) மனம தளரும் தொழிலைச்செய்ய நினை யாது இருக்கக்கடவா துனபத்தில் கைவிடுவோர் நட்பைக் கொள்ளாது இருக்கக்கடவர். (அ)

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்
காலை, யுள்ளினு முள்ளஞ் சுடும.

(க-ரை.) கெடுங்காலத்து கைவிடுவோா நட்பா னது இயமன கொலலும் காலதது நினைக்கினும் உள்ளத்தைசசுடும. (கூ)

மருவுக மாசற்றார் கேண்மை யொன்றீத்து
மொருவுக வொப்பிலார நட்பு.

(க-ரை.) குற்றமற்றவர் சிநேகத்தைக் கொள்ளக் கடவன் ஒப்பில்லார் சிநேகத்தைப் பொருள்கொடுத் தாகிலும் விடக்கடவன். (கo)

## அக-ம். அதி.—பழமை.

அஃதாவது-நட்பினரது பழைமையாம் தன்மை பற்றி அவர்செய்த பிழைகளைப் பொறுத்தலாம்.

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

(க-ரை.) பழைமை என்றுசொல்லப்படுவது யாது எனில் பழைமையோா செய்தவற்றைச் சிதையாமல் கொள்ளும் நட்பாம். (க)

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குபபாதல சான்றோா கடன்.

(க-ரை.) சிநேகத்திற்கு அவயவமாவன் சிநேகர் உரிமையால் செய்தவையாம். (உ)

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

(க-ரை.) நட்பினா செய்தவைகளுக்குத் தாம் செய்யாவிடத்து நட்பு எனன பயன்செய்யும? (ந)

விழைதகையான் வேணடி யிருப்பா கெழுத
கையாற், கேளாது நட்டாா செயின்

(க-ரை.) நட்பாளர் உரிமையால் கேளாதுசெய்தால் அறிவுடையோா அதனை விரும்புவர். (ச)

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்
றுணர்க, நோதக்க நடடாா செயின்.

(க-ரை.) வெறுக்கத்தக்கவைகளைச் சிநேகர்செய்தால் அது மிகுந்த உரிமையாம். (ரு)

எலலைக்க ணின்றாா துறவாா தொலைவிடத்
துந், தொலலைக்க ணின்றாா தொடர்பு.

(க-ரை.) நட்பிலே நின்றவர் பழைமையோர் சிநேகத்தைவிடார். (சு)

அழிவந்த செய்யினு மன்பறாா ரன்பின்
வழிவநத கேண்மை யவர்.

(க-ரை.) பழைமையான நட்பினை உடையவர் பிறர் அழிவானவற்றைச்செய்தாலும் அன்பைவிட்டு அகலார். (எ)

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல
லார்க்கு, நாளிழுக்க நட்டார் செயின்.

(க-ரை.) நட்பாளர் பிழையைக் கேளாதவர்க்கு நட்பாளர் பிழையைச்செய்தால் அது பயன்பட்ட நாளாம். (அ)

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர விழையு முலகு.

(க-ரை.) பழைய சிநேகா நட்பை விடாதவரை உலகம் இச்சிக்கும். (௯)

விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைபிரியா தார்.

(க-ரை.) பழைய சிநேகரிடத்துச் சிநேகம் நீங்காதவர் பகைவராலும் இச்சிக்கப்படுவர். (௧0)

---

## அ௨-ம். அதி.—தீநட்பு.

அஃதாவது-தீக்குணத்தாரோடு உண்டாகிய நட்பாம்.

---

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

(க-ரை.) நற்குணம் இல்லாதவரது நட்பானது பெருகுதலினும் சிறுகுதல் இனிதாம். (க)

உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

(க-ரை.) செல்வம் வந்த இடத்துச்சிநேகித்து அது இல்லாத இடத்துக் கைவிடுவோர்களது சிநேகம் பெற்றால் என்ன? அற்றால் என்ன? (உ)

உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.

(க-ரை.) நட்பினபயனை எண்ணுவாரும் வேசையரும கள்ளரும் தம்மில் ஒப்பாவா. (ந)

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னா
தமரிற் றனிமை தலை.

(க-ரை.) போர்க்களத்தில விட்டுப்போவோர் நட்பிலும் தனிமையாக இருத்தல் நல்லது. (ச)

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று.

(க-ரை.) சிறியவர்களுடைய தீ நட்பானது ஒருவனுக்கு உண்டாதலினும இல்லாதிருக்கைநல்லது.

பேதை பெருங்கழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும.

(க-ரை.) அறிவு இல்லாதவரது நட்பைப்பார்க்கிலும் அறிவு உடையவரது பகை நல்லது. (சா)

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும.

(க-ரை.) நகைக்கு ஏதுவாகிய நட்பைவிட பகைக்கு ஏதுவாகிய நட்பு நல்லதாம். (எ)

ஒல்லுங் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல.

(க-ரை.) தம்மாலே முடியும் தொழிலை முடியாதாகச் செய்பவருடன் கொண்ட நட்பை விடக்கடவர். (அ)

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொலவேறு பட்டார் தொடர்பு.

(க-ரை.) தொழிலவேறு சொலவேறு பட்டவரது சிநேகமானது கனவிலும் துன்பம் தரும. (கூ)

எனைத்துங் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ, மன்றிற் பழிப்பார் தொடர்பு

(க-ரை.) வீட்டிலே தனித்து இருக்கையில் சிநேகித்துச் சபையில் பழிப்பவர் நட்புக்கொள்ளாது இருக்கக்கடவா. (கo)

அஉ-ம். அதி.—கூடாநட்பு.

அஃதாவது-பகைமையால் உள்ளே கூடாதிருந்தே சமையம் கிடைக்கும் அளவும் புறத்திலே கூடி நடப்பவர் நட்பு.

சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

(க-ரை.) வாய்க்கும் இடம் கூடாதிருந்தவரது நட்பானது அந்த இடத்தைக்கண்டால் எறிதற்குப் பட்டடையாம். (க)

இனம்போன் றினமலலார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும.

(க-ரை.) உறவினாபோன்று உறவினர் ஆகாதவர் நட்பானது பெண்கள் இதயமபோல வேறுபடும்.

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது.

(க-ரை.) பலநூலைக்கற்ற இடத்தும் மனநலத்தர் ஆகுதல் பகைவர்க்கு இல்லை. (ங)

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

(க-ரை.) முகம்மலாந்து நகைத்து அகம்மலராத வஞ்சகருக்குப் பயப்படவேண்டும். (ச)

மனத்தி னமையா தவரை யெனத்தொன்
றுஞ், சொலவினாற் றேறற்பாற் றன்று.

(க-ரை.) மனம் ஒவவாதவரை யாதொரு சொல்லாலும் தெளிதல் கூடாது. (ரு)

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்
டார்சொ, லொல்லை யுணரப் படும்.

(க-ரை.) நட்பாளர்போல நல்லசொற்களைச்சொன்னாலும் பகைவர் சொற்கள் நலம் தாராமையை அறியப்படும். (சா)

சொல்வணக்க மொனனூர்கட் கொள்ளற்க
வில்வணக்கந், தீங்கு குறித்தமை யான்.

(க-ரை.) விலவினது வணக்கம தீங்கைத்தருத
லால் பகைவரிடத்துச் சொல்வணக்கம் கொள்ளா
மல் இருக்ககடவர். (எ)

தொழுதகை யுள்ளுமப டை யொடுங்கு
மொனனூ, ரழுதகண ணீரு மனைத்து.

(க-ரை.) பகைவர் குமபிட்ட கையில் ஆயுதம
மறைந்திருக்கும அப்பகைவா அழுதகண்ணீரும
அப்படியே. (அ)

மிகச்செய்து தமமெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட சாப்புலலற் பாற்று

(க-ரை.) இராசநீதியானது புறத்து நட்பை மிகச்
செய்து இகழ்பவரை நட்பில் மகிழும்படி செய்து
பொருந்தும் தனமையை உடையது. (கூ)

பகைநட்பாங் காலம வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல.

(க-ரை.) பகை நட்பாகும் காலத்தில் முகநட்
பாய்ச்சிநேகித்து அகநட்பு விடலவேண்டும. (கo)

## அசு-ம். அதி.—பேதைமை.

அஃதாவது-யாதொன்றும் அறியாமை.

பேதைமை யென்பதொன் றியாதெனி னேத
தங்கொண, டூதியம போக விடல.

(க-ரை.) அறியாமை என்பது யாது என்றால் குற்றங்களைக் கைக்கொண்டு இலாபத்தை விடுதல்.

பேதைமையு ளெல்லாம பேதைமை காதன்
மை, கையலல தன்கட் செயல்.

(க-ரை.) அறிவில்லாமை எலலாவற்றுள்ளும் அறிவில்லாமையாவது ஆகாத செய்கையைச் செய்தலாம். (உ)

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்
றும், பேணாமை பேதை தொழில.

(க-ரை.) நாணாமையும் நாடாமையும் ஆசை இன்மையும் யாதொன்றையும் பேணாமையும் அறிவீனனுடைய தொழில்களாம். (ந)

ஓதி யுணாந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்
காப், பேதையிற் பேதையா ரில்.

(க-ரை.) கற்றறிந்தும் பிறர்க்குக் கறபித்தும் தான் அடங்காத அறிவீனனைப்போல் அறிவீனன் இல்லை. (ச)

ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமை
யுந, தான்புக் கழுந்து மளறு.

(க-ரை.) அறிவீனன் வரும் பிறவிகளில் புகுந்து நரகத்தை ஏற்றுக்கொள்வான். (ரு)

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறி
யாப், பேதை வினைமேற் கொளின்.

(க-ரை.) மூடன் ஒருதொழிலை மேற்கொள்வா னாயின் அதுதொழில் குறறமபடுமே அன்றியும அவன் தளைபூணுவான.  (சு)

ஏதிலா ரார்த் தமரபசிபபர் பேதை
பெருஞ்செலவ முற்றக் கடை.

(க-ரை.) அறிவீனன் செல்வம அடைந்த இட தது அயலார் அநுபவிக்கச சுறறத்தார பசித்திருப் பார.  (எ)

மைய லொருவன் களித்தற்றுற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின.

(க-ரை.) அறிவில்லான பொருளைப் பெற்றுலு கில் வெறியை உடைய ஒருவன் மது உண்டு மகிழ்ந் து இருந்தாற்போலும்.  (அ)

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்
கட், பீழை தருவதொன் றில.

(க-ரை.) அறிவில்லாா நட்பு பிரிவின் இடத்துத் துன்பம் இல்லை அது மிகவும் இனிதே.  (கூ)

கழாஅக்கால பள்ளியுள் வைத்தற்றுற் சான்
றோர், குழாஅத்துப் பேதை புகல.

(க-ரை.) பெரியோர் சபையில் அறிவில்லான் புகுதல் கழுவாதகாலைச் சயனத்தில் வைத்தல் போ லும்.  (௧0)

## அரு ம். அதி.—புல்லறிவாண்மை.

அஃதாவது - தான சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவனாகமதித்து உயர்ந்தோராலே சொல்லப்படும் உறுதிச்சொல்லைக் கொள்ளாமையாம்.

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை, யின்மையா வையா துலகு.

(க-ரை.) இல்லாமை உள்ளே இல்லாமையாவது அறிவிலலாமை பொருள இல்லாமையை உலகத்தார இல்லாமையாக எணணார. (க)

அறிவிலா னெஞ்சுவந தீதல பிறிதியாது மிலலை பெறுவான் றவம.

(க-ரை.) அறிவில்லாத ஒருவனுக்கு ஒன்றைக் கொடுததல் பெற்றுக்கொள்பவனது தவமாம். (உ)

அறிவிலார தாநதம்மைப் பீழிக்கும பீழை செறுவார்க்குஞ் செய்த லரிது.

(க-ரை.) அறிவில்லார தங்களை வருத்தும் வருத்தமானது வருத்தப்படுத்தும் பகைவர்க்குஞ் செய்தல் அரிது. (ங)

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை, யுடையமயா மென்னுஞ் செருக்கு.

(க-ரை.) அறிவில்லாமை என்று சொல்லப்படுவது யாது எனில் நல்லறிவுடையோம் என்னும் மயக்கமாம். (ச)

கல்லாத மேற்கொண் டொழுகல கசடற
வல்லதூஉ மையந் தரும்.

(க-ரை.) கல்லாத நூல்களைக் கற்றேமென்று சொல்லுதல் கற்ற நூல்களையும் சந்தேகப்படுத்தும்.

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற் ,
குற்றமறையா வழி.

(க-ரை.) அறிவில்லார் குற்றங்களைக் கடியாரா யின அதுவே அறிவில்லாமை. (சு)

அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

(க-ரை.) இரகசியப்பொருளைப் போக்கும் அறி வில்லான தனக்குத்தானே வருத்தத்தைச்செய் வான். (எ)

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போ ஓ மளவுமோர் நோய்.

(க-ரை.) அறிவில்லான் பிறர் ஏவவும் தனக்கு உறுதிகளைச்செய்யான் தானாகவும் தெளியான். (அ)

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணா
தான், கண்டானாந் தான்கண்ட வாறு.

(க-ரை.) ஒன்றும் அறியாதவனைக் காட்டுவோன் தான் அறிவில்லாதவன் ஆவான். (கூ)

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான்
வையத், தலகையா வைக்கப் படும்.

(க-ரை.) பெரியோர் உண்டென்பதை இல்லை என்பவன் பேயென்று எண்ணப்படுவான். (கO)

## அகூ-ம். அதி.—இகல்.

அஃதாவது - இருவர் தம்முள்ளே போர்செய்து வலிமை தொலைதற்கு ஏதுவாகிய மாறுபாடாம்.

இகலென்ப வெல்லா வுயிர்க்கும பகலென்
னும், பண்பின்மை பாரிக்கு நோய்.

(க-ரை.) எல்லா உயிர்க்கும் தீயகுணத்தை வளர்க்கும் குற்றமாவது மாறுபாடாம். (க)

பகல்கருதிப் பற்ரு செயினு மிகல்கருதி
யின்னுசெய் யாமை தலை.

(க-ரை.) ஒருவன் வெறுப்பானவற்றைச் செய்தான் ஆயினும் துன்பம் தரும் அவைகளைச்செய்யாமை தலைமை. (உ)

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவில்
லாத், தாவில் விளக்கந் தரும்.

(க-ரை.) ஒருவன் மாறுபாட்டை நீக்குவான் ஆயின் அது புகழைத்தரும்.* (ங)

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(க-ரை.) ஒருவனுக்கு மாறுபாடாகிய துன்பம் நீங்குமாயின் அது மிகுந்த இன்பத்தைத்தரும்.(ச)

இகலெதிர் சாய்க்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

(க-ரை.) மாறுபாட்டை நீக்கும் வல்லவரை வெல்ல நினைப்பவர் யார். (௫)

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(க-ரை.) மாறுபடுதலே இனிது என்பவன் வாழ்க்கையானது வழுவுதலும் கெடுதலும் உண்டாம்.(சு)

மிகன்மேவு மெய்ப்பொருள் காணா ரிகன்
மேவு, மின்னா வறிவி னவா.

(க-ரை.) மாறுபாட்டால் துன்பம் செய்யும் அறிவினை உடையவர் நீதி நூற்பொருளை அறியார். (எ)

இகலிற் கெதிசாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

(க-ரை.) மாறுபாட்டில் எதிர்சாய்தலே செல்வம் அதை மேற்கொள்ளில் கேடாம். (அ)

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு

(க-ரை.) ஒருவன் செல்வம் வரும்போது மாறுபாட்டைக்காணான் கேடுவரும்போது அதனை நினைப்பான். (கூ)

இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு.

(க-ரை.) மாறுபாட்டால் துன்பம் எல்லாம் உண்டாம் நட்பால் செல்வம் உண்டாம். (கo)

---

## அஎ-ம். அதி.—பகைமாட்சி.

அஃதாவது-அரசர்க்கு எவ்வழியாலும் பகையில்லாமை கூடாமையால், மேலே பொதுவகையால் விலக்கப்பட்டதாம்.

---

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

(க-ரை.) வலியவர்க்கு எதிர்தலை நீங்கக்கடவர் மெலியவர்க்குப் பகையாதலை விரும்பக்கடவர். (க)

அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

(க-ரை.) அன்பும் துணையும் வலிமையும் இல்லாதவன் பகைவனது வலிமையை எப்படி நீக்குவான். (உ)

அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்சமெளியன் பகைக்கு.

(க-ரை.) அஞ்சுபவனும் அறியாதவனும் நட்பில்லாதவனும் உலோபனும் ஆனவன் பகைவர்க்கு எளியன் ஆவான். (ந)

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

(க-ரை.) கோபத்தையும் நிறை இல்லாமையும் உடையவன் பகைவர்க்கு எளியன் ஆவான். (௪)

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான், பண்பிலன் பற்றார்க் கினிது.

(க-ரை.) நீதிநூல் கல்லாதவன் விதித்தனசெய்யாதவன் பழிநோக்காதவன் குணமில்லாதவன் பகைவர்க்கு எளியன் ஆவான். (௫)

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான் பேணாமை பேணப் படும்.

(க-ரை.) கோபத்தையும் காமத்தையும் உடையவன் பகைவர்க்கு எளியன். (௬)

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து, மாணாத செய்வான் பகை.

(க-ரை.) ஏலாதவற்றைச் செய்பவன் பகைமையைப் பொருள்கொடுத்தும் கொள்ளல் வேண்டும்.

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க் கினனிலனா மேமாப் புடைத்து.

(க-ரை.) குணம் இல்லாதவனாய்ப் பலகுற்றம் உடையவனாகில் துணையில்லாதவனாவான் அவன் பகைவர்க்கு எளியன். (௮)

செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா வஞ்சும் பகைவர்ப் பெறின்.

(க-ரை.) நீதியை அறியாத பகைவரைப் பெற்றால் வெல்பவர்க் கின்பமாம். (௯)

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்
ஞான்று, மொல்லானை யொல்லா தொளி.

(க-ரை.) கல்லாதவனுடன் பகைத்தால் வரும் பொருளை அடையாதவனைப் புகழடையாது. (க0)

## அஅ-ம். அதி.—பகைத்திறந்தெரிதல்.

அஃதாவது - மாட்சிமைப்படாத பகையை ஆக்கு தற்குற்றமும் முன்னுய்நின்ற பகையுள் நட்பாக்குந் தன்மையதும், அயலாக்குந்தன்மையதும், அவை களிலேசெய்வதும், மற்றதைக்களையுந் தன்மையதும் அதனிடத்தே செய்வனவும், களையும்பருவமும், களையாமற்போனால் படும் இழுக்கமும், என்று இவ விதங்களை ஆராய்தலாம்.

பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று.

(க-ரை.) ஒருவன் பகையாகிய தீமைக்குணங்களை விளையாட்டிலும் விரும்பாது இருக்கக்கடவன்.

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

(க-ரை.) வீரர்பகையைக் கொண்டாலும் மந்திரிகள் பகையைக் கொள்ளாது இருக்கக்கடவன். சொல்லேருழவர் மந்திரிகள். (உ)

ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

(க-ரை.) தனித்து இருந்து பலர் பகையைக்கொள்பவன் பித்தரினும் மறிவில்லான். (௩)

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை
யாளன், றகைமைக்கட் டங்கிற் றுலகு.

(க-ரை.) பகையை நட்பாகக்கொண்டு நடக்கும் அரசன் பெருமைக்குள்ளே உலகம தங்கியது. (௪)

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொ
ருவ, னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

(க-ரை.) தனக்கு உதவும் துணை இல்லை. வருத்தும் பகை இரண்டு. இவவிரண்டில் பொருந்திய ஒன்றைக்கொள்ளக்கடவன். (௫)

தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

(க-ரை.) பகைவன் தெளிந்தான் ஆயினும் தெளிந்திலன் ஆயினும் தாழ்விடத்துக் கூடானாகியும் நீங்கானாகியும் இருக்கக்கடவன். (௬)

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

(க-ரை.) நொந்ததை அறியார்க்குத் தன் நோவைச் சொல்லாது இருக்கக்கடவன். (௭)

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

(க-ரை.) தொழில்வகை அறிந்து தன்னைக்காக்கப் பகைவர் செருக்கும் கெடும்.

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(க-ரை.) முள்ளாகிய மரத்தை இளமையில் களையக்கடவர் அது முதிர்ந்தால் களைபவர் கையைக் களையும். (கூ)

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

(க-ரை.) பகைப்பவர் செருக்கைக் கெடுக்காதவர் இறப்பர். (கO)

---

## அகூ-ம். அதி.—உட்பகை.

அஃதாவது-புறப்பகைக்கு இடமாக்கிக் கொடுத்து அது வெல்லுமளவும் உள்ளாய்நிற்கும் பகையாம்.

---

நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின்.

(க-ரை.) ஒருவனுக்கு நிழலும் நீரும் நோய்செய்யும். அதுபோலத் தம் இனத்தார் இயல்புகளும் துன்பம் செய்யும். (க)

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

(க-ரை.) வெட்டுவோம் என்னும் பகைவர்க்கு அஞ்சாது இருக்கக்கடவர். உறவினர்போல் இருக்கும் பகைவர்க்கு அஞ்சக்கடவர்.

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலேவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

(க-ரை.) உட்பகைக்கு அஞ்சித் தன்னேக்காக்கக் கடவர். காவாவிடிற் பகைவர் கெடுப்பர். (ங)

மனமாணு வுட்பகை தோன்றி னினமாணு
வேதம் பலவுந் தரும்.

(க-ரை.) அரசனுக்கு உட்பகை உண்டாயின் பல குற்றமும் தரும். (ச)

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்
முறையா, னேதம் பலவுந் தரும்.

(க-ரை,) உறவின்முறை உட்பகை அரசனுக்குத் தோன்றில் அது பல குற்றத்தையும் தரும். (ரு)

ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்
ஞான்றும், பொன்றாமை யொன்ற லரிது.

(க-ரை.) தனக்கு உள்ளாயினுர் இடத்துப் பகை உண்டாயின் அரசனுக்கு இறத்தலேத்தரும். (சு)

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

(க-ரை.) உள்ளே பகைபொருந்திய குடியின் உள்ளார் செப்பின் மூடிபோல் கூடினுர் ஆயினும் மன ஒற்றுமையில் கூடார். (எ)

அரம்பொருத பொன்போலத் தேயு முரம்
பொரு, துட்பகை யுற்ற குடி.

(க-ரை.) உட்பகை பொருந்திய குடியானது அரத்தினுலே தேய்க்கப்பட்ட இரும்புபோலக்கெடும்.

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

(க-ரை.) உட்பகை எள்ளின் பிளப்பிற்கு ஒப்பான சிறிது ஆயினும் கேடு உண்டாம். (கூ)

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

(க-ரை.) மன ஒற்றுமை இல்லாருடன் கூடிவாழும் வாழ்க்கை ஆனது ஒரு குடிசையுள்ளே பாம்புடன் கூடிவாழ்தல் போலாம. (க0)

## கூ0-ம். அதி.—பெரியாரைப்பிழையாமை.

அஃதாவது - பெரியராயினோரை அவமதித்து நடவாமையாம்.

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

(க-ரை.) வல்லவருடைய வல்லமைகளை இகழாமையே காவல் எல்லாவற்றுள்ளும் தலை. (க)

பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால்
பேரா விடும்பை தரும்.

(க-ரை.) பெரியோரை அவமதித்து நடந்தால் அந்நடக்கை தீங்கைத்தரும். (உ)

கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்
வேண்டி, னாற்று பவர்க ணிழுக்கு.

(க-ரை.) தான் கெட விரும்பினல் வேற்றரசரை வெல்லும் வேந்தரிடத்துப் பிழைசெய்யக்கடவன்.

கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்று வார்க், காற்றா தா ரின்னா செயல்.

(க-ரை.) வல்லமை உடையவர்க்கு வல்லமை இல்லாதார் துன்பம் செய்தல் இயமனைக்கையால் அழைத்தல் போலாம். (ச)

யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின், வேந்து செறப்பட் டவர்.

(க-ரை.) வல்ல அரசனல் கோபிக்கப்பட்ட அரசர் எவ்விடத்துச்சென்றும உயிர்வாழார். (ரு)

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார் பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(க-ரை.) தீயினல் சுடப்படினும் ஒருவழியில் பிழைப்பு உண்டாம். பெரியோர்க்குப் பிழைசெய்து நடப்பவர் பிழையார். (கா)

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந், தகைமாண்ட தக்கார் செறின்.

(க-ரை.) பெரியோர் கோபிப்பாராகில் அரசன் அரசாட்சியும் அவன்பொருளும் என்ன பயன்படும்.

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(க-ரை.) பெரியோர் கெடும்படி நினைப்பாராகில் செல்வர் குடியொடு கெடுவர்.

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

(க-ரை.) தவத்தில் பெரியோர் கோபிக்கில் இந்திரனும் கெடுவான். (கூ)

இறந்தமைந்த சார்புடையா ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

(க-ரை.) தவமுடையோர் கோபிக்கில் சார்புடையவரும் பிழையார். (கo)

---

## கூக-ம். அதி.—பெண்வழிச்சேறல்.

அஃதாவது - தன்வழி நடத்தற்கு உரியவளாகிய மனையவள்வழியே தான நடத்தலால் வரும் இழிவு.

---

மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினை
விழைவார், வேண்டாப் பொருளு மது.

(க-ரை.) மனையவள் வழியிலே நடப்பவர் தருமத்தை அடையார். (க)

பேணாது பெண்விழைவா னாக்கம் பெரிய
தோர், நாணாக நாணுத் தரும்.

(த-ரை.) மனையவள் பெண் தன்மையை விரும்புவோன்செல்வம் வெட்கத்தைக் கொடுக்கும். (உ)

இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று, நல்லாரு ணாணுத் தரும்.

(க-ரை.) மனையவளுக்கு அஞ்சும் அச்சமானது நாணம் தரும். (௩)

மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(க-ரை.) மனையாளுக்கு அஞ்சுவோனது தொழில் பெருமை அடையாது. (௪)

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நலல செயல்.

(க-ரை.) மனைவிக்கு அஞ்சுவோன் நல்லோர்க்கு உதவிசெய்ய அஞ்சுவான். (௫)

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

(க-ரை.) மனையாளுக்குப் பயப்படுவோர் பெருமை அடையார். (௬)

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி
னாணுடைப், பெண்ணே பெருமை யுடைத்து.

(க-ரை.) பெண்ணினது ஏவல் செய்து நடக்கும் தன்மையிலும் அப்பெண்ணே பெருமை உடையது.

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுத
லாட், பெட்டாங் கொழுகு பவர்.

(க-ரை.) மனைவி மனப்படி நடப்பவர் சிநேகருக்கு உதவார் தருமம் செய்யார். (௮)

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.

(க-ரை.) மனைவிக்கு ஏவல் செய்பவர் இடத்துத் தருமச்செய்கை பொருளசெய்கை இன்பச்செய்கை மூன்றும் இல்லை. (கூ)

சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும, பெணசேர்ந்தாம பேதமை யில.

(க-ரை.) நல்லமனமும், நல்லசெல்வமும் உடையவர்க்கு மனைவியால்வரும அறியாமை இலலை.(கo)

கூஉ-ம். அதி.—வரைவின்மகளிர்.

அஃதாவது-தந்நலம் விலைகொடுப்பவர் யாவர்க்கும் விற்பதாம்.

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்
தொடியா, ரின்சொ லிழுக்குத் தரும்.

(க-ரை.) அன்பால் விரும்பாது பொருளால் விரும்பும் வேசையர்களின் சொல் துன்பம் தரும். (க)

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மக
ளிர், நயன்றூக்கி நள்ளா விடல்.

(க-ரை.) பொருட்பயனைக்குறித்து நயம்பேசும் வேசையர் நடக்கையறிந்து அவரை விடக்கடவர்.

பொருட்பெண்டிர் பொய்மை முயக்க மிருட்
டறையி, லேதில் பிணந்தழீஇ யற்று.

(க-ரை.) வேசையர்கள் பொய்யான புணர்ச்சி யானது இருள் வீட்டில் அயலான் பிணத்தைத் தழுவுதல் போலும்.

பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்
பொரு, ளாயு மறிவி னவா.

(க-ரை.) அருளை ஆராயும் அறிவுடையார் வே
யரைச் சேரார்.

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்
தின், மாண்ட வறிவி னவா.

(க-ரை.) புத்தி நலமுடைய பெரியோர் பரத்தை
யரைச் சேரார். (ரு)

தந்நலம பாரிபபார தோயார் தகைசெருக்கிப்
புன்னலம பாரிபபார் தோள்.

(க-ரை.) தமது புகழை விளக்கும் பெரியோர்
வேசையர் தோளைச் சேரார். (சு)

நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்
சிற், பேணிப் புணாபவர் தோள்.

(க-ரை.) நல்ல மனம் இல்லாதவர் வேசையர்
தோள்களைச் சேர்வார். (எ)

ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

(க-ரை.) அறிவில்லார்க்கு வேசையர் புணர்ச்சி
யை நூலோர் சுணங்கு என்பார். (அ)

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரை
யிலாப், பூரியர்க ளாழு மளறு.

(க-ரை.) வேசையர் தோள்கள் கீழ்மக்கள் அழு
ந்தும் நரகமாம்.

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

(க ரை.) வேசையரும் கள்ளும் சூதும் இலக்குமி யால் விடப்பட்டவர்க்கு நட்பாம். (௰)

## ௯௩-ம். அதி.—கள்ளுண்ணாமை.

அஃதாவது-இனி ஒழுக்கமும் உணர்வும் அழித்த லில் பரத்தையரோடு ஒப்பதாகிய கள்ளினை உண் ணாமையது சிறப்பாம்.

உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்
றுங், கட்காதல் கொண்டொழுகு வார்.

(க-ரை.) எந்நாளும் கள்ளில் இச்சைவைக்கும் அரசர் அஞ்சார் புகழையும் இழப்பார். (க)

உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார்.

(க-ரை.) அறிவுடையோர் கள்ளை உண்ணாதிருக் கக்கடவர். மதிக்கத்தகாதவர் உண்ணக்கடவர். (உ)

ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

(க-ரை.) தாய்முன்னம் கள்ளுண்டு களித்தல் துன்பமாம் பெரியோர்முன் கள்ளுண்டு களித்தல் என்னபயனும்.

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்
ளென்னும், பேணாப் பெருங்குற்றத்

(க-ரை.) கள்ளை உண்பவர்களுக்கு நாணம் இல்லை.

கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்
து, மெய்யறி யாமை கொளல்.

(க-ரை.) கள்ளைக் குடித்து மெய் மறதியைக் கொள்ளுதல் அறிவில்லாமையை உடையது. (டு)

துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்
ஞான்றும், நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(க-ரை.) கள்ளைக் குடித்தவர் நஞ்சைக் குடித்தவர்க்கு ஒப்பாவர். (சு)

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்
றுங், கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

(க-ரை.) கள்ளைக் குடித்து அறிவு மயங்குவோர் சிரிக்கப்படுவர். (எ)

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

(க-ரை.) கள்ளைக்குடிக்கில் உட்பொருள் வெளிப்படும் ஆசையால் ஆசாரம் சோருதலைக் கைவிடக்கடவர்.

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

(க-ரை.) கள்ளைக்குடித்தவனைத் தெளிவித்தல் எதுபோல் எனில், நீருள்ளே மூழ்கினவனை விளக்கினால் தேடுதல் ஒக்கும்.

கள்ளுண்ணுப் போழ்திற் களித்தானைக் கா
ணுங்கா, லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

(க-ரை.) கள்ளை உண்பவன் தான் குடியாதபோ
து குடித்தவனைக்கண்டு தன்சோர்வை நினையான்
போலும். —— (௧0)

கூ௪-ம். அதி.—சூது.

அஃதாவது-இனி அக்கள்ளுண்டல்போல் அறம்
பொருள் இன்பங்களுக்குத் தடையாகிய சூதாடலை
யும் சொல்லுதலாம்.

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்ற
தூஉந், தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

(க-ரை.) வெல்ல வல்லவனாயினும சூதைவிரும்
பாமல் இருக்கக்கடவன். வெனறபொருளுந் தூண்
டில் இரும்பை மீன்விழுங்கியது போலும். (க)

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்
டாங்கொ, னன்றெய்தி வாழ்வதோ ராறு.

(க-ரை.) ஒருபொருளைப் பெற்று நூறுபொருளை
இழக்கும் சூதாடுவோர்க்கு நன்மை பெற்றுவாழும்
வழி உண்டாமோ. (௨)

உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

(க-ரை.) அரசன் சூதாடுவான் ஆயின் அவன்
பொருளும் அப்பொருள் வரும் வழியும் பகைவர்
இடத்துப் போய்விடும்.

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

(க-ரை.) துன்பங்களை உண்டாக்கிப் புகழையும் கெடுக்கும் சூதைப்போல வறுமையைக் கொடுப்பது ஒன்றும் இல்லை. (ச)

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.

(க-ரை.) சூதையும் சூதாடும் இடத்தையும் சூதாடுதொழிலையும் கைவிடாத அரசர் பொருள் இருந்தும் இல்லாதவரே. (ரு)

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்.

(க-ரை.) சூது என்னும் மூதேவியால் விழுங்கப் பட்டவர் இம்மையில் வறுமையும் மறுமையில் நரகமும் அநுபவிப்பர். (சு)

பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

(க-ரை.) அரசன் சூதாடில் அவ்வாட்டம் அவன் செல்வத்தையும் குணத்தையும் அழிக்கும். (எ)

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ
யருள்கெடுத், தல்ல லுழப்பிக்குஞ் சூது.

(க-ரை.) சூதாட்டமானது பொருளைக்கெடுத்துப் பொய்யை மேற்கொள்ளச்செய்து இரக்கத்தைக்கெடுத்துத் துன்பத்தை விளைவிக்கும்.

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

(க-ரை.) அரசன் சூதாட்டத்தை விரும்புவான் ஆகில் கீர்த்தியும் கல்வியும் செல்வமும் ஊணும் உடையும் அவனைச் சேராவாம். (கூ)

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற்
றுன்ப, முழத்தொறூஉங் காதற் றுயிர்.

(க-ரை.) இருமைப் பயன்களை இழக்குந்தோறும் சூதினை இச்சிக்கும் சூதன்போல உயிரானது துன்பங்களை அநுபவிக்குந் தோறும் அதன்மேல் ஆசையை உடையது. (க0)

---

## * கூ௫-ம். அதி.—மருந்து.

அஃதாவது - பழவினையாலும் காரணங்களாலும் வரும் வாதமுதலிய பிணிகளைத்தீர்க்கும் மருந்தின் திறத்தைச் சொல்லுதலாம்.

---

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

(க-ரை.) உணவும் தொழிலும் மிகுந்தாலும் குறைந்தாலும் பிணிமூன்றும் துன்பம் செய்யும். (க)

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்
தியது, தற்றது போற்றி யுணின்.

(க-ரை.) உண்ணப்பட்டது சீரணித்ததை அறிந்து உண்பான் ஆயின் அவனுக்கு மருந்து வேண்டாவாம். (உ)

அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

(க-ரை.) உடலைக்கொண்டவன் அவன் உடலிருக்கும்படி சீரணித்த அளவு அறிந்து உண்ணக்கடவன். (௩)

அற்றதறிந்து கடைப் பிடித்து மாறல்ல
துய்க்க துவரப பசித்து.

(க-ரை.) சீரணித்த அளவு அறிந்து மாறில்லாத உணவுகளை உண்ணக்கடவன். (௪)

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

(க-ரை.) நல்ல உணவை உண்டால் பிணிகளால் துன்பம் இல்லை. (௫)

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்.

(க-ரை.) குறைவாக உண்பவன் இடத்து இன்பம்போல் நிறைவாக உண்பவன் இடத்து நோய் இருக்கும். (௬)

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

(க-ரை.) சீரணித்தது அறியாதவனும் மிக உண்பானுமில் நோய் அவனிடத்து உண்டாம். (௭)

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(க-ரை.) வைத்தியன் வியாதியையும் அதன் காரணத்தையும் அது நீங்கும் உபாயத்தையும் ஆராய்ந்து மருத்துவம் செய்யக்கடவன். (அ)

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

(க-ரை.) மருத்துவன் பிணியாளி அளவையும் பிணியளவையும் காலத்தின் அளவையும் அறிந்து பொருந்தச் செய்யக்கடவன். (கூ)

உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வா
னென், றப்பானாற் கூற்றே மருந்து.

(க-ரை.) பிணிக்கு மருந்தாவது நோயாளி வைத்தியன் மருந்து செய்பவன் இந்நான்குமாம். (க0)

அங்கவியல் முற்றிற்று.

---

## ஒ ழி பி ய ல்.

இனி அவவரசியன் முதலானவைகளிலே அடங்கா தொழிந்தவைகளின் இயல்பைப் பதின்மூன்று அதிகாரத்திலே சொல்லத்தொடங்கி முதலிலே குடிமை சொல்லுகின்றார்.

## ௯௬-ம். அதி.—குடிமை.

அஃதாவது - உயர்ந்த குடியினிடத்துப் பிறந்தவரது தன்மையாம்.

இற்பிறந்தார் கண்ணலல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

(க-ரை.) செமமையும் நாணமும் நல்லகுடியில் பிறந்தவர்க்கு அல்லது மற்றவர்க்கு இல்லை. (க)

ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

(க-ரை.) உயர்குடியில் பிறந்தவர் நல்லநடக்கை சத்தியம் வெட்கம் இம்மூன்றிலும் தவறார். (உ)

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

(க-ரை.) நல்ல குடியில் பிறந்தவர்க்கு முகமலர்ச்சி கொடுத்தல் இன்சொல் இகழாமை இந்நான்கும் உரித்தாம். (௩)

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

(க-ரை.) உயர்குடியில் பிறந்தவர் கோடிபொருளைப்பெற்றாலும் குன்றும் தொழிலைச்செய்யார்கள். (௪)

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

(க-ரை.) நல்லகுடியில் பிறந்தவர் கொடுக்கும் பொருள் சுருங்கிய இடத்தும் குணம் உடைமையில் குறையார். (ரு)

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

(க-ரை.) நல்ல குடிப்பிறப்பில். வாழ்பவர் வஞ்சனைபொருந்தி அமைவு இல்லாத தொழில்களைச்செய்யார். (சு)

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின், மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

(க-ரை.) உயர்குடியில் பிறந்தவர் இடத்து உண்டாகும் குற்றம் சிறிதாயினும் சந்திரனில் களங்கம் போல் ஓங்கி விளங்கும். (எ)

நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

(க-ரை.) நலமுடையவன் இடத்து அன்பில்லாமை உண்டாயின் அவனைக்குலமுடையன் அல்லன் என்று ஐயப்பாட்டில் வைக்கப்படும். (அ)

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(க-ரை.) நிலத்து இயல்பை முளைகாட்டும் குலத்து இயல்பை வாய்மொழி காட்டும். (கூ)

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்
வேண்டின், வேண்டுக யார்க்கும் பணிவு.

(க-ரை.) நலத்தை விரும்பினால் நாணத்தைக் கொள்ளக்கடவன குலத்தை விரும்பினால் வணக்கத்தைக் கொள்ளக்கடவன. (௧0)

## கூஎ-ம். அதி.—மானம்.

அஃதாவது-எந்நாளும் தன்னிலையிலே தாழாமையும் ஊழால் தாழ்வு வந்தகாலத்து உயிர் வாழாமையுமாம்.

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல.

(க-ரை.) மிகவும் சிறப்பு உடையவை ஆயினும் தங்குடிதாழவரும் செயல்களை விடக்கடவன. (௧)

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

(க-ரை.) மானத்தை விரும்புவோர் தங்குடிக்கு ஒவ்வாத தொழில்களைச் செய்யார். (உ)

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

(க-ரை.) நல்ல குடியில் பிறந்தவர்க்குச் செல்வத்தில் வணக்கமும் வறுமையில் வணங்காமையும் வேண்டும். (ங)

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

(க-ரை.) நல்லகுடியில் பிறந்தவர் நிலைகெட்ட விடத்துத தலையில் இருந்து நீங்கிய மயிர்க்கு ஒப்பாவர். (ச)

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

(க-ரை.) மலையை நிகர்த்த குடிப்பிறப்பாளரும் தாழ்தற்கு ஏதுவான செயல்களைச் செய்தலால் தாழ்வார்கள். (ரு)

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்
மற், றிகழ்வாரபின சென்று நிலை.

(க-ரை.) இகழ்பவர் பின்செல்லுவோர் நிலை புகழை உண்டாக்காது தேவா உலகத்துச் செலுத்தாது.

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்
நிலையே, கெட்டா னெனப்படுத னன்று.

(க-ரை.) ஒருவன் இகழ்பவர் பின்சென்றுவாழ்தலினும், முன்னிலையில் இருந்து இறந்தான் என்று சொல்லப்படுதலே நல்லது. (எ)

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்
தகைமை, பீடழிய வந்த விடத்து.

(க-ரை.) மானம் அழியவந்தபோது உடலைக்காப்பாற்றும் வாழ்வானது இறவாமைக்குமருந்து ஆமோ.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
ருயிர்நீப்பர் மானம் வரின்.

(க-ரை.) கவரிமானுக்கு ஒப்பானவர் மானம் கெடவரும் நிலையில் உயிரைவிட்டுவிடுவர். (கூ)

இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

(க-ரை.) அவமானம் வந்தபோது உயிர்பெற்று வாழாத மானம் உடையவர்புகழ் வடிவை உலகத்தார் துதிப்பர். (கO)

## கூஅ-ம். அதி.—பெருமை.

அஃதாவது - செய்தற்கரிய செய்தல் செருக்கு இல்லாமை பிறர்குற்றம்சொல்லாமையாம்.

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியோ
ருவற், கஃதிறந்து வாழ்து மெனல்.

(க-ரை.) ஒருவனுக்கு ஒளியாவது மன எழுச்சியாம் இளியாவது மனவெழுச்சி இல்லாமையாம்.

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்
பொவ்வா, செய்தொழில் வேற்றுமை யான்.

(க-ரை.) மக்களுக்குப் பிறப்பு இயல்பொத்திருக்கும். தொழில் வேற்றுமையால் சிறப்பு இயல்பு ஒவ்வாவாம். (உ)

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்
தும், கீழல்லார் கீழல் லவர்.

(க-ரை.) சிறியவர் மேல் இருந்தாலும் பெரியவர் ஆகார். பெரியவர் கீழ் இருந்தாலும் சிறியவர் ஆகார்.

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

(க-ரை.) பெருமைக்குணமும் கற்புள்ள மாதரைப்போலத் தன்னைக் காத்துக்கொண்டவனுக்கு உண்டு. (ச)

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல.

(க-ரை.) பெருமை உடையோர் அருமை உடைய செயல்களைச் செய்வார். (ரு)

சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

(க-ரை.) பெரியோரை வழிபட்டுக் கொள்வோம் என்னும் கருத்துச் சிறியோர மனத்திடத்து இல்லை.

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

(க-ரை.) சிறப்பும் சிறியவர் இடத்து உண்டாயின் செருக்கிலே மிகுந்த தொழிலை உடையதாம். (எ)

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

(க-ரை.) பெருமை உடையவர் சிறப்பு உண்டாகியகாலத்தும் அடங்கி நடப்பார். சிறுமை உடையவர் சிறப்பு இல்லாக்காலத்தும் தம்மைச் சிறப்பித்து நடப்பார். (அ)

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

(க-ரை.) பெருமைக்குணமாவது செருக்கு இல்லாது இருத்தல். சிறுமைக்குணமாவது செருக்கு உடைத்தா இருத்தல். (௯)

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(க-ரை.) பெரியோர் பிறர் அவமானத்தை மறைப்பர். சிறியோர் பிறர் குற்றத்தைச் சொல்லுவர். (௧௦)

## ௯௯-ம். அதி.—சான்றாண்மை.

அஃதாவது-பல குணங்களாலும் நிறைந்து அவைகளை ஆளும் தன்மை.

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

(க-ரை.) பெரியோர்களுக்கு நற்குணங்களை மேற்கொள்ளுதல் கடமையா இருக்கும். (௧)

குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

(க-ரை.) சான்றோர்க்குக் குணநன்மையே பெரியநன்மையாம். மற்றநன்மை நன்மையல்லவாம். (௨)

அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்
மையோ டைந்துசால் பூன்றிய தூண்.

(க-ரை.) அன்பு நாணம் உபகாரம் தாக்ஷிணியம் சத்தியம் இவ்வைந்தும் சால்பு என்னும் பாரத்தைத் தாங்கும் தூண்களாம்.

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை.
சொல்லா நலத்தது சால்பு.

(க-ரை.) நோன்பாவது யாதொன்றையும் கொ ல்லாமையாம். சால்பாவது பிறர் குற்றத்தைச் சொ ல்லாமையாம். (௪)

ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

(க-ரை.) காரியமுடிப்பவர் வல்லமையாவது பணி தல் அது சத்துருக்களை வெல்லும் படையாம். (௫)

சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

(க-ரை.) சால்புக்கு உரைகல் ஏதுவெனில் இழி ந்தவர் இடத்தும் தோல்வி கொள்ளுதலாம். (௬)

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

(க-ரை.) துன்பம் செய்தவர்களுக்கு இன்பம்செ ய்யாவிடில் சான்றாண்மை என்னபயனைத்தரும்.

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்
னுந், திண்மை யுண்டாகப் பெறின்.

(க-ரை.) சால்பின் வலிமை உண்டாகப்பெற்றால் வறுமை இகழ்வு ஆகாது. (அ)

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்
மைக், காழி யெனப்படு வார்.

(க-ரை.) சான்றோர் காலம் வேறுபடினும் தாங்கள் வேறுபடார். (௯)

சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்
தான், றாங்காது மன்னோ பொறை.

(க-ரை.) சான்றோர் சான்றாண்மை குன்றுவாராகில் பூமிபாரம் தாங்காது. (௧0)

## ௧00-ம். அதி.—பண்புடைமை.

அஃதாவது-பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லார் இயல்புகளும் அறிந்து நடத்துதலாம்.

எண்பதத்தா லெய்த லெளிதென்பயார்மாட்
டும், பணபுடைமை யென்னும் வழக்கு.

(க-ரை.) யாவர் இடத்தும் எளிய சமயத்தராக இருக்கில் பண்புடைமை என்னும் நல்வழி அடைதல் எளிதாம். (க)

அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்வி
ரண்டும், பண்புடைமை யென்னும் வழக்கு.

(க-ரை.) ஒருவனுக்கு அன்புடைமையும் நல்ல குடியில் பிறத்தலுமே நல்லவழியாம். (உ)

உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்
தக்க, பண்பொத்த லொப்பதா மொப்பு.

(க-ரை.) அவயுவத்தால் ஒப்பாதல் ஒப்புல்ல குணத்தால் ஒப்பாதலே ஒப்பாம்.

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

(க-ரை.) நீதியையும் தருமத்தையும் விரும்பிய பயனுடையவர்குணத்தை உலகத்தார் புகழ்வர். (௪)

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(க-ரை.) விளையாட்டிலும் இகழ்தலானது துன்பம் தரும். நலலவர் இடத்துப் பகையிலும் நற்குணம் உண்டாம். (௫)

பண்புடையார் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

(க-ரை.) பெரியவரிடத்து நற்குணம் உண்டாதலால் உலகியல் எந்நாளும் உண்டாகின்றது. அது இல்லாவிடில் உலகியல் கெடும். (௬)

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்
வர், மக்கட்பண் பில்லா தவர்.

(க-ரை.) நன்மக்களுக்கு உரியகுணம் இல்லாதவர் கூரியபுத்தி உடையவர் ஆயினும் மரத்தை ஒத்தவராவர். (௭)

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

(க-ரை.) நட்பைக்கொள்ளாராகிப் பகையைக் கொள்வார்க்கும் குணம் உடையவரா நடவாமையே இழுக்காம்.

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

(க-ரை.) நட்புச்செய்து மகிழாதார்க்குப் பூமியானது இருள் உடையதாகும். (௯)

பண்பிலான் பெற்ற பெருஞ்செலவ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

(க-ரை.) குணம் இல்லாதவன் முன் நல்வினையால் அடைந்த செல்வமானது பயன்படாது கெடுதல், பசுவின்பால் பாத்திரக் குற்றத்தால் கெடுதல் போலும். (௧0)

## ௧0௧-ம். அதி.—நன்றியில்செல்வம்.

அஃதாவது - சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுதல் இல்லாத செல்வத்தின இயல்பாம்.

வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃ்
துண்ணான், செத்தான் செயக்கிடந்த தில்.

(க-ரை.) பெரும் பொருளைத் தேடிவைத்தவனாகி அப்பொருளை அநுபவியாதவன் இருந்தாலும் இறந்தவனுக்கு ஒப்பாவன். (௧)

பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு.

(க-ரை.) பொருளைச்சம்பாதித்துக் கொடாமையால் பிறப்பு உண்டாம். (௨)

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

(க-ரை.) பொருளை விரும்பிப் புகழை விரும்பாத வர் பிறப்புப் பூமிக்குப் பாரம். (௩)

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ
வொருவரா, னச்சப் படாஅ தவன்.

(க-ரை.) ஒருவராலும் இச்சிக்கப்படாதவன் இற ந்தபின் எதை நினைப்பானோ? (௪)

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்
கிய, கோடியுண் டாயினுமில்.

(க-ரை.) கொடுத்தலும் உண்ணுதலும் இல்லாத வர்க்குக் கோடிபொருள் இருந்தும் பயனில்லை. (௫)

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்
கார்க்கொன், றீத லியல்பிலா தான்.

(க-ரை.) தான் உண்ணுமலும் கொடாமலும் இருப்பவன் செல்வம் வியாதிக்கு ஒப்பாம். (௬)

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிக
நலம், பெற்றா டமியண்மூத் தற்று.

(க-ரை.) கொடாதவன் செல்வமானது அழகுள் ள ஒருத்தி தன்னைக் கொடுப்பார் இல்லாமையால் கணவன் இல்லாது கிழவியானாற்போலும். (௭)

நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

(க-ரை.) பிறரால் இச்சிக்கப்படாதவன் செல்வமானது ஊாநடுவே எட்டிமரம் பழுத்தல்போலும்.

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

(க-ரை.) அன்பற்றுத் தன்னை வருத்திச் சம்பாதித்தபொருளைப் பிறர்கொள்ளுவர். (௯)

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

(க-ரை.) மிகுந்த செல்வம் உடையவர் வறுமை ஆனது மழை வறுமைகொண்ட தன்மை உடையது.

## கዐ௨-ம். அதி.—நாணுடைமை.

அஃதாவது - முன்சொல்லப்பட்டசால்பு பண்பு முதலாகிய குணங்களால் உயர்ந்தோர் தமக்குத்தகாத கருமங்களில் நாணுதல் உடையராம் தன்மை.

கருமத்தா னாணுத னாணுத் திருநுத
லல்லவர் நாணுப் பிற.

(க-ரை.) நாணமானது கருமங்காரணமாக நாணுவதாம். பிறநாணங்கள் பெண்களுடைய நாணங்கள் போலாம். (க)

ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

(க-ரை.) உணவு ஆடை மற்றவை யாவர்க்கும் பொதுவாம். நன்மக்களுக்குச் சிறப்பாவது நாணம் உடைமையாம். (உ)

ஊனைக் குறித்த வுயிரெலலா நாணென்னு
நன்மை குறித்தது சாலபு.

(க-ரை.) உயிர்கள் எல்லாம உடம்பை விடாவாம் நற்குணம் நாணததை விடாவாம். (ங)

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்
கஃதின்றேற், பிணியன்றோ பீடு நடை.

(க-ரை.) பெரியோர்க்கு நாணம் உடைமை ஆப ரணமாம. அஃது இலலாவிடில அவா நடை பிணி யாம. (ச)

பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.

(க-ரை.) பிறர்பழியையும் தம்பழியையும் மதித்து நாணுவாரை உலகத்தாா நாணததுக்கு இருப்பிட மாகுமென்பர். (ரு)

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞா
லம், பேணலர் மேலா யவர்.

(க-ரை.) உயர்ந்தோர் நாணத்தைக் கொள்ளாமல் உலகத்தை விரும்பார். (சா)

நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னண்டுறவார் நாணாள் பவர்.

(க-ரை.) நாணத்தைக்கொள்பவர் உயிரை நீக்கு வார். நாணத்தைக்கொள்ளாதவர் உயிரை நீக்கார்.

பிறர்நாணத் தக்கது தானணு ணுயி
னறநாணத் தக்க துடைத்து.

(க-ரை.) ஒருவன் நாணாது பழியைச் செய்வான் ஆகில் அது குற்றத்தை உடையது. (அ)

குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை.

(க-ரை.) ஒருவனுக்கு ஒழுக்கம் வழுவும் ஆகில் அவ்வழுவு அவன் குலத்தைக் கெடுக்கும். ஒருவன் நாணாது நின்றால் அது நன்மை யாவற்றையும் கெடுக்கும். (௯)

நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

(க-ரை.) நாணம் இல்லாத மக்கள் சஞ்சரிப்பு மரத்தால் செய்யப்பட்ட பாவை கயிற்றால் உயிர் உடையதாக மருட்டியது போலாம். (௧0)

---

## ௧0௩-ம். அதி.—குடிசெயல்வகை.

அஃதாவது-ஒருவன் தான்பிறந்த குடியை உயரச் செய்தலின் விதமாம்.

---

கருமஞ் செயவொருவன் கைதூவே னென்
னும், பெருமையிற் பீடுடைய தில்.

(க-ரை.) ஒருவன் கருமம் செய்தற்குக் கைவிடேன் என்னும் பெருமைபோல் மேன்பாடு உடையது இல்லை.

ஆள்வினையு மான்ற வறிவுமெனு விரண்டி
னீள்வினையா னீளுங் குடி.

(க-ரை.) முயற்சியும் அறிவும் ஆகிய இரண்டின் தொழிலால் ஒருவன் குடி உயரும். (உ)

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்.

(க-ரை.) குடியை உயரச் செய்வேன் என்னும் ஒருவனுக்குத் தெய்வம் முன்வந்து நிற்கும். (௩)

சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

(க-ரை.) தன்குடிக்கான தொழிலைச் செய்வோர்க்கு அது தானே முடிவு பெறும். (௪)

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

(க-ரை.) குற்றம் அற்றவனாய் குடியை உயரச்செய்து வாழ்பவனை உலகத்தார் சூழ்வர். (௫)

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்
பிறந்த, வில்லாண்மை யாக்கிக் கொளல்.

(க-ரை.) ஒருவனுக்கு ஆண்மை என்று சொல்லப்படுவது தன்குடியை உயர்த்திக் கொள்ளுதல்.

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

(க-ரை.) போர்க்களத்தில் வீரர் மேல் ஆகுதல் போல அக்குடி இடத்துப் பாரம் பொறுத்தல் வல்லவர் மேலதாம. (எ)

குடிசெய்வார்க் கில்லைப் பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

(க-ரை.) குடும்பத்தை உயரச் செய்வார்க்குக் காலநியதி இல்லை. (அ)

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்
பத்தைக், குற்ற மறைப்பா னுடம்பு.

(க-ரை.) தன் குடியைக் காக்க முயற்சி செய்பவன் உடலம் துன்பத்திற்குக் கொள்கலமாம். (கூ)

இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி.

(க-ரை.) தாங்குவார் இல்லாத குடியாகிய மரம் துன்பக் கோடரி ஆனது வெட்டக் கெடும். (௧0)

## ௧0௪-ம். அதி.—உழவு.

அஃதாவது-சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாகிய உழுதற்றொழிலாம்.

சுழன்றும் மேர்ப்பின்ன துலக மதனு
லுழந்து முழவே தலை.

(க-ரை.) உலகம் ஏருடையார் வழியது ஆயிற்று தலைமையான தொழிலுள் உழவே ஆம். (௧)

உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்று
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

(க-ரை.) உழுபவர் உலகத்தார் ஆகிய தேர்க்கு அச்சாணி ஆவார். (௨)

உழுதுண்டு வாழ்வாறே வாழ்வார்மற் றெல்
லாந், தொழுதுண்டு பின்செல் பவர்.

(க-ரை.) உழுது உண்டு வாழ்பவரே வாழ்பவர் மற்றவர் தொழுது உண்டு வாழ்பவா. (௩)

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்.

(க-ரை.) உழவு முயற்சி செய்வோர் பலவேந்தர் பூமியையும் குடைநிழலில் காண்பர். (௪)

இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

(க-ரை.) ஒளியாமல் உழுது உண்பவர் ஆகியார் இரப்பவர்க்குக் கொடுப்பர். (௫)

உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவ
தூஉம், விட்டேமென் பார்க்கு நிலை.

(க-ரை.) உழவர் கைம்மடங்கும் ஆகில் யாவரும் விரும்பும் உணவும் துறந்தவர்க்கு நிலையும் இல்லை.

தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெரு
வும், வேண்டாது சாலப் படும்.

(க-ரை.) ஒரு பலப்புழுதி காற்பலமாகக் காயவி டுவான் ஆகில் பிடியெருவும் இல்லாமல் அப்பயிர் விளையும். (எ)

ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு.

(க-ரை.) உழுதலினும் எருப்போடுகிறது நல்லது களை பிடுங்கியபின் காத்தல் நீர்விடுதலினும் நல்லது.

செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்.

(க-ரை.) உழுபவன் விளை நிலத்தில் பேசாதிரு க்கில் அந்த நிலம் அவனுடன் பிணங்கி விடும். (கூ)

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

(க-ரை.) வறியோம் என்று சோம்பலா இருப்ப வனை நிலமகள் கண்டால் சிரிப்பள். (க0)

---

## க0ரு-ம். அதி.—நல்குரவு.

அஃதாவது - அனுபவிக்கப் படுவன யாவும் இல் லாமையாம்.

---

இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது.

(க-ரை.) தரித்திரம் போலத் துன்பம் செய்வது எது எனில் அதுவே.

இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

(க-ரை,) தரித்திரம் என்னும் ஒருபாவி ஒருவன் இடத்து வரும்போது இம்மை மறுமை இன்பம் இல்லாமல் வருவன். (உ)

தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகை
யாக, நல்குர வென்னு நசை.

(க-ரை.) தரித்திரம் என்னும் ஆசையானது பழங்குடி வரவையும் அதற்கு உரியசொல்லையும் கெடுக்கும். (ங)

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும.

(க-ரை.) தரித்திரம் ஆனது உயர்குடியில் பிறந்தவர் இடத்தும் இழிவுசொல் பிறக்கும் சோர்வைத் தரும். (ச)

நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

(க-ரை.) வறுமைத் துன்பம் ஒன்றுக்குள்ளே பல துன்பங்களும் வரும். (ரு)

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்
கூர்ந்தார், சொற்பொருள் சோர்வு படும்.

(க-ரை.) வறியவர் மெய்ப்பொருளைச் சொல்லினும் அச்சொல் பயன் இல்லாமையைத் தரும்.

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

(க-ரை.) வறியவன தன் தாயாலும் அந்நியன் போலப் பார்க்கப் படுவான. (எ)

இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு.

(க-ரை.) நேற்றுக் கொன்ற வறுமை ஆனது இனறும் வருமோ. (அ)

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கணபா டரிது.

(க-ரை.) தீயிலும் நித்திரை செய்யலாம் வறுமையிலே நித்திரை செய்யக் கூடாது. (௯)

துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(க-ரை.) வறியவர்கள் துறவாது இருத்தல் அயல் வீட்டு உப்புக்கும் காடிநீருக்கும் யமன ஆவார்கள்.

---

## ௧0௬௬-ம். அதி.—இரவு.

---

அஃத்ாவது-இனி மானம் கெடாத இரத்தல் இரவாமையோடு ஒத்தலால் இறத்தலே விலக்குதலாம்.

---

இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று.

(க-ரை.) தரித்திரர்கள் கொடுப்பவர்களைக் கண் டால் யாசிக்கக்கடவர்கள். அவர் ஒளித்தார் ஆகில் அவர்க்குப்பழி அல்லது தமக்குப்பழி அல்ல. (க)

இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்.

(க-ரை.) ஒருவனுக்கு யாசித்த பொருள்கள் துன் பம் அடையாமல் வந்தால் யாசித்தலும் இன்பமாம்.

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து.

(க-ரை.) ஒளியாது கொடுப்பவர் இடத்து யாசித் தலும் ஓர் அழகு உடையது. (ந)

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

(க-ரை.) சொற்பனத்திலும் உலுத்தகுணம் இல் லாதவர் இடத்து யாசித்தலும் கொடுத்தலே போ லாம். (ச)

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்
ணின், றிரப்பவர் மேற்கொள் வது.

(க-ரை.) உள்ளபொருளை ஒளியாது கொடுப்பவர் உலகில் இருக்கையால் யாசிப்பவர் யாசகத்தை மேற் கொள்வது. (ரு)

கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்
பிடும்பை, யெல்லா மொருங்கு கெடும்.

(க-ரை.) ஒளியாது கொடுப்பவரைக் கண்டால் யாசிப்பவர்களுக்குத் துன்பம் கெடும். (௬)

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்
துள்ள, முள்ளு ளுவப்ப துடைத்து.

(க-ரை.) பொருள் கொடுப்பவரைக் கண்டால் யாசிப்பவர் மனம் மகிழ்ச்சியை உடையது. (௭)

இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று.

(க-ரை.) யாசகர் இல்லாவிடில் பூமியில் உள்ளோர் செலவு வரவுகள் மரப்பாவை சூத்திரத்தால் ஆடுதல் போலும். (அ)

ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்து
கோண், மேவா ரிலாஅக் கடை.

(க-ரை.) யாசிப்பர் இல்லாவிடில் கொடுப்பவர்க்கு என்ன புகழ் உண்டாம். (௯)

இரப்பான் வெகுளாமை வேண்டு மிரப்
பிடும்பை, தானேயுஞ் சாலுங் கரி.

(க-ரை.) யாசிப்பவன் கோபியாமல் இருக்க வேண்டும் தன்வறுமைதானே சாட்சியாய் விடும். (௧0)

## க0எ-ம். அதி.—இரவச்சம்.

அஃதாவது-மானம் கெடவரும் இரத்தலுக்கு அஞ்சுதலாம்.

கரவா துவந்தீயுங் கண்ணன்னா கண்ணு
மிரவாமை கோடி யுறும்.

(க-ரை.) ஒளியாது கொடுக்கும் கண்ணிற்கு ஒப்பானவர் இடத்தும் யாசியாது இருத்தல கோடி மடங்கு நன்மை ஆம். (க)

இரந்து முயிரவாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

(க-ரை.) பிரமன் உலகத்தோரை யாசகம்செய்யப்படைத்தான் ஆகில் அவன் கெடக்கடவன். (௨)

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும
வன்மையின் வன்பாட் டதில்.

(க-ரை.) வறுமைத் துன்பத்தை நீங்குவோம் என்னும் வலிமைபோல் வலிமை உடையது இல்லை. (௩)

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிட
மில்லாக், காலு மிரவொலலாச் சால்பு.

(க-ரை.) தரித்திரம் உண்டான இடத்தும் யாசியாமையே பெருமை. (௪)

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

(க-ரை.) முயற்சியால் வந்தது கூழாயினும் அதை உண்ணுதல் போல் இன்பம் உடையது இல்லை. (௫)

ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

(க-ரை.) பசுவிற்கு நீர்விடு என்னும் யாசகம் போல் நாவிற்கு இழிவு வேறு இல்லை. (௯)

இரபப னிரப்பாரை யெலலா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

(க-ரை.) யாசிப்பாரை எலலாம் யாசித்தேன் நீங்கள் ஒளிப்பவர் இடத்தில் யாசியாது இருங்கள்.

இரவென்னு மேமாபபி றோணி கரவென்னும்
பார்தாக்கப பக்கு விடும்.

(க-ரை.)யாசகம என்னும தோணி ஒளித்தல் என்னும் வலிய நிலம் தாக்கக் கெடும். (அ)

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

(க-ரை.) யாசிப்பவர் கொடுமையை நினைத்தால் மனம் உருகுகின்றது இல்லையென்னும் கொடுமையை நினைத்தால் உருகும் அளவும் இலலாமலகெடும்.

கரபபவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ
விரப்பவர், சொல்லாடப் போஒ முயிர்.

(க-ரை.) யாசிப்பவர்க்கு இல்லை என்றால் உயிர் போகும் ஒளிப்பவர்க்கு உயிா எங்கே ஒளிக்கும்.(௧0)

---

## ௧0அ-ம். அதி.—கயமை.

அஃதாவது-முன்னே அரசியலுள்ளும் அங்கவியலுள்ளும் சிறப்பு வகையால் சொல்லப்பட்டகுணங்களின் ஏற்புடையவைகளைக் குறிப்பினல் யாவர்க்

கும் பொருந்த வைத்தமையால் அங்கே குறிப்பால் சொல்லியவையும், இங்கே ஒழிபியலுள் வெளிப்படச்சொல்லியவையும், ஆகியகுணங்களுள் யாதுமிலராகிய கீழோரது தன்மையாம்.

---

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பா ரியாங்கண்ட தில்.

(க-ரை.) கீழ்மக்கள் வடிவாலே மக்களை ஒப்பாவர். அவர்கள் ஒப்பானவரை யான்கண்டது இல்லை.

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(க-ரை.) நன்மைகளை அறிபவரிலும் நெஞ்சில் கவலை இல்லாதவராகிய கீழ்மக்கள் நன்மை உடையவர். (௨)

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

(க-ரை.) தேவரும் கயவரும் ஒப்பாவர். தேவரைப்போல கயவரும் தாம் விரும்பியதை செய்து நடத்தலால். (௩)

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

(க-ரை.) கீழ்மகன் பட்டியாய் நடப்பவரைக் கண்டால் அதனிலும் மேலாக நடப்பான். (௪)

அச்சமே கீழ்க ளாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

(க-ரை.) துன்பம் வரும் என்று அஞ்சும் கீழ்மக்க ளுக்கு ஆசாரம இயல்பாக இல்லை. (ரு)

அறைபறை யன்னா கயவாதாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(க-ரை.) கீழ்மக்கள் பறைக்கு ஒப்பாவர் இரகசி யப்பொருளை பிறர்க்குச் சொல்லுதலால். (சு)

ஈர்ங்கை விதிரா கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு

(க-ரை.) கீழ்மக்கள் இரப்பவர்க்குக் கொடார் வரு த்துவோர்க்குக் கொடுப்பா. (எ)

சொல்லப் பயன்படுவா சான்றோர் கரும்பு
போற், கொல்லப் பயன்படுங் கீழ்.

(க-ரை.) மேலோர் குறையைச்சொன்ன உடன் பயன்படுவா கீழோர்வருத்தினால் பயன்படுவர். (அ)

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

(க-ரை.) கீழ்மகன் பிறா உண்டாலும் உடுத்தா லும் கண்டால் பொறாமை கொள்வான். (கூ)

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

(க-ரை.) கீழோர் துன்பம் வந்த இடத்தில் தங் களை விலைக்கொள்ள உரியவர் ஆவர். (கய)

**ஒழிபியல் முற்றிற்று.**

பொருட்பால முற்றிற்று.

# காமத்துப்பால்.

காமம் என்பது புணர்ச்சி, பிரிவு என இருவகைப் படும். மற்றை இருத்தல், இரங்கல், ஊட்டல் என் பனவோ எனமூல, இவா பொருட்பாகுபாட்டினை அறமபொருள் இன்பம் என வடநூல் வழக்குப்பற் றிச் சொல்லுதலால் அப்படியே அவைகளைப் பிரி வின் இடத்து அடக்கினா எனறு அறிக.

---

## களவியல்.

### க௦௯-ம். அதி.—தகையணங்குறுத்தல்.

அஃதாவது-பொழில் விளையாட்டில் ஆசையால் பெண்கள் கூட்டம் நீங்க அங்குத தனித்து நின்ற வளை வேட்டையாடும் ஆசையால் இளையர் கூட்ட நீங்கத்தனித்து வந்ததலைவன் அவள் அழகு தனக்கு வருத்தம் உண்டாக்குதலைச் சொல்லுதலாம்.

---

அணங்குகொ லாய்மயில கொல்லோ கனங்
குழை, மாதர்கொன் மாலுமென் னெஞ்சு.

(க-ரை) இவள் தெய்வப்பெண்ணோ மயிலோ மானிடப்பெண்ணோ இன்னாள் என்று அறியாமல் என்மனம் மயங்குகின்றது. (க)

நோக்கினா ளேோக்கெதிர் நோக்குத ருக்கணங்
கு, தானைக்கொண் டன்ன துடைத்து.

(க-ரை.) இவள் என்பார்வைக்கு எதிரே பார்க்கு தல் ஒருதெய்வப்பெண் போர் செய்யச் சேனையைக் கொண்டு வந்ததுபோலும் தன்மை உடையது. (உ)

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந் தேன், பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

(க-ரை.) தலைவன் தலைவியினுடைய கண்களைப் பார்த்து யமன என்று கூறினன. (௩)

கண்டா ருயிருணணுந் தோற்றத்தாற் பெண் டகைப்; பேதைக் கமர்த்தன கண.

(க-ரை.) இப்பெண்ணின் கண்கள் கண்டவர் கள் உயிரை உண்ணும காட்சியாக மாறுபட்டு இரு ந்தன. (௪)

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர ளுேக்கமிம் மூன்று முடைத்து.

(க-ரை.) இவள் பார்வை யமனோ கண்ணோ மா னோ அறியேன். (௫)

கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்களுர் செய்யல மன்னிவள் கண்.

(க-ரை.) இவளுடைய கண்கள் புருவங்களால் மறைக்கப்பட்டால் எனக்குத் துன்பத்தைச் செய் யாவாம்.

கடாஅக் களிற்றினமேற் கடபடா மாதா படாஅ முலைமேற் றுகில்.

(க-ரை.) இவள் முலைகளின் மேலே தரித்த வஸ்திரமானது யானை முகத்தின் மேலே தரித்த வஸ்திரத்தை ஒக்கும். (எ)

ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

(க-ரை.) என்னுடைய வலிமை ஆனது இவளுடைய நெற்றியைக் கண்டு அழிந்தது. (அ)

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

(க-ரை.) இவளுக்குப் பார்வையும் நாணமும் ஆபரணங்களாக இருக்க வேறு ஆபரணங்களை அணிதல் என்னபயன். (௯)

உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

(க-ரை.) மதுவை உண்டால் மகிழ்ச்சி காமம் கண்டால் மகிழ்ச்சி ஆம் (௧0)

## ௧௧0-ம். அதி.—குறிப்பறிதல்.

அஃதாவது - தலைவன் தலைவி குறிப்பை அறிதலும், தோழிகுறிப்பை அறிதலும், அத்தோழி அந்த இருவர் குறிப்பையும் அறிதலாம்.

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

(க-ரை.) இவள் பார்வை ஆனது இரண்டு ஒன்று நோய் செய்யும். மற்றொன்று அந்நோய்க்கு மருந்தான பார்வையாம். (௧)

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

(க-ரை.) இவள் குறுகிய பார்வை காமத்தினும் அதிகமாம். (௨)

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.

(க-ரை.) அவள் பார்த்தாள் பார்த்துத் தலைகுனிந்தாள் அவள்குறிப்பு இருவர் அன்பும் வளரும தண்ணீராம். (௩)

யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.

(க-ரை.) யான் பார்க்கும்போது பூமியைப்பார்க்கிறாள் யான பாராதபோது தான்பார்த்து நகைக்கின்றாள். (௪)

குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொரு
கண், சிறக்கணித்தாள் போல நகும.

(க-ரை.) நேரே பாராமல் ஒரு கண்ணைச்சுருக்கினவள்போல் பார்த்து நகைக்கின்றாள். (௫)

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்
லொல்லை யுணரப் படும்.

(க-ரை.) புறம்பாகக் கடுஞ்சொல் சொல்லினும் உள்ளே [illegible] சொல் [illegible] அறியப்படும்,

செறுஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோ
க்கு, முறுஅர்போன் றற்றார் குறிப்பு.

(க-ரை.) உள்ளன்பாகச் சொல்லும் கடுஞ்சொல்லும் பகையாது பார்க்கும் கோபப்பார்வையும் ஆசைக் குறிப்பால் வரும். (எ)

அசையியற் குணடாண்டோ ரேஎர்யா னோக்கப், பசையினள் பைய நகும.

(க-ரை.) நான் பாரதத இடத்தில் இரங்கிப்பார்த்து நகைக்கிறாள் அதனாலே நலம் உண்டு. (அ)

ஏதிலார் போலப பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

(க-ரை.) அயலார் போலப் பொதுப்பார்வை பார்த்தல் ஆசை உள்ளவர் இடத்தில் உண்டு. (௯)

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க, ளென்ன பயனு மில.

(க-ரை.) இருவர் பார்வையும் ஒக்குமாகில் வாய்ச்சொற்கள் பயனில்லை. (௰)

---

ககக-ம். அதி.—

அஃதாவது-அப்படிக்குக் குறிப்பறிந்து புணர்ந்த தலைவன் அப்புணர்ச்சியைமகிழ்ந்துசொல்லுதலாம்.

---

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.

(க-ரை.) கண்ணால்கண்டும் காதால்கேட்டும் நாவால் உண்டும் மூக்கான் மோந்தும் மெய்யால் தீண்டியும் அநுபவிக்கப்படும் ஐம்புலன்களும் ஒள்ளிய வளையல்களை உடையவள் இடத்தே உள்ளன. (க)

பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

(க-ரை.) முப்பிணிகளுக்கு மருந்துகள் வேறே உள்ளன. ஆபரணத்தை உடையவள் தன்காமநோய்க்குத் தானே மருந்து ஆனாள். (௨)

தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

(க-ரை.) தாம் விரும்பிய பெண்களினுடைய மெல்லிய தோள்கள் இடத்துத் துயிலுதல்போல விஷ்ணுவின் உலகம் இன்பம் ஆகுமோ. (௩)

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்
னுந், தீயாண்டுப் பெற்றா ளிவள்.

(க-ரை.) தன்னை நீங்கிய இடத்தில் சுடாநிற்கும் தன்னை நெருங்கிய இடத்தில் குளிராநிற்கும். இப்படிப்பட்ட தீயை இவள் எவ்வுலகத்தில்பெற்றாளோ.

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

(க-ரை.) பூவை அணிந்த கூந்தலை உடையவளது தோள்கள் இச்சித்தபொழுது அந்தந்தப் பொருள்கள்போல இன்பம் செய்வனவாம்.

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பே
தைக்கு, அமிழ்தி னியன்றன தோள்.

(க-ரை.) எனது உயிர்தளிர்க்கும்படி தீண்டுதலா
ல் இப்பெண்ணிற்குத் தோள்கள் அமிழ்தால் சமை
க்கப்பட்டன. (௬)

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு.

(க-ரை.) இப்பெண்ணின் புணர்ச்சி ஆனது தம்
முயற்சியால வந்தபொருளைத் தென்புலத்தோர் மு
தல ஐவர்க்கும பகுத்துக் கொடுத்துத் தன்பங்கை
உண்டது போல இன்பம் செய்கின்றது. (௭)

வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

(க-ரை.) காற்றால் இடை அறுக்கப்படாத புணர்
ச்சி ஆனது இருவருக்கும் இனபம் ஆகும். (௮)

ஊட லுணர்தல் புணர்தல் இவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

(க-ரை.) ஊடலும் அதனை நீங்கலும் புணர்ச்சி
யும் விவாகம் செய்து கொண்டவர் பெற்றபலன்.

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

(க-ரை.) இவள் இடத்தில் புணரப்புணர உண்
டாகும் ஆசை ஆனது நூலாலும் அறிவாலும் பெர

ருள்களை அறியவறிய முன்னம் அறியாமை கண்டாற்போலக் காணப்படுகின்றது. (௧௦)

## ௧௧உ-ம். அதி.—நலம்புனைந்துரைத்தல்.

அஃதாவது - தலைவன தலைவி நலத்தினை வருணித்துச் சொலலுதலாம.

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

(க-ரை.) அனிச்சப்பூவே வாழ்வாயாக நீ எல்லாப்பூவிலும நற்குணமுடையை எம்மால் விரும்பப்பட்டவள் உன்னிலும் மெல்லியகுணத்தை உடையவள். (௧)

மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

(க-ரை.) மனமே இவள் கண்களைப் பலரால் காணப்படும் பூவை ஒக்குமென்று நினைத்துத் தாமரை குவளை நீலமுதலிய மலர்களைக் கண்டால் மயங்குகிறாய் நின் அறிவு இருந்தவிதம் என்னை. (உ)

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண வேய்த்தோ ளவட்கு.

(க-ரை.) மூங்கில்போலும் தோள்களை உடையவளுக்கு மேனி தளிர் பல் முத்தம் கண்கள் வேல்

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

(க-ரை.) குவளைமலர்கள் பார்க்கில், இவள் கண்ணுக்கு ஒப்பாகோம் என்று கவிழ்ந்து நிலத்தைப்பாக்கும். (ச)

அனிச்சப்பூக் கால்களையால் பெய்தா ளுசுப்
பிற்கு, நல்ல படாஅ பறை.

(க-ரை.) இவள் தன்மென்மையை நினையாமல் அனிச்சமலரைக் காம்புகளையாமல் சூடினாள் ஆகையால் இடைமுரியும். (ரு)

மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

(க-ரை.) வானத்து மீன்கள் வேறுபாடு பெரிதாகவும் தம் மதியினையும் அம்மடந்தை முகத்தினையும் இதுமதி இதுமுகம் என்று அறியமாட்டாது தன்னிலையில் இருந்து கலங்கித் திரிகின்றன. (சு)

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

(க-ரை.) அம்மீன்கள் அங்ஙனம் கலங்குதற்குக் காரணம் யாது முன் குறைந்த இடம்வந்து நிரம்பியே விளங்கும்மதிக்கண்போல இம்மாதர் முகத்தில் களங்கம் உண்டோ. (எ)

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

(க-ரை.) சந்திரனே வாழ்வாயாக பெண்கள்முகம் போல ஒளிவீசவல்லை ஆகில் நீயும் என்னால் இச்சிக்கப்படுவாய். (அ)

மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி.

(க-ரை.) சந்திரனே மலர்போலும் கண்களை உடையவள் முகத்தை ஒக்கவேண்டுவை ஆகில் இது போல யான் காணத் தோன்று பலர்காணத் தோன்றாதே. (௯)

அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப பழம.

(க-ரை.) அனிச்சமலரும் அன்னப்பறவையின் இறகும் மாதர்களடிக்கு நெருஞ்சிப்பழம்போல் வருத்தம் செய்யும். (௧0)

## ௧௧௩-ம். அதி.—காதற்சிறப்புரைத்தல்.

அஃதாவது - தலைவன் தன் ஆசை மிகுதியைச் சொல்லலும் தலைவி தன் ஆசை மிகுதியைச் சொல்லலுமாம்.

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

(க-ரை.) இம்மெல்லிய மொழியினை உடையாளது வாலியபற்களில் ஊறிய நீரானது பாலுடனே தேனைக்கலந்த கலவை போலும். (௧)

உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன
மடநதையோ டெமமிடை நட்பு.

(க-ரை.) உடம்போடு உயிரிடை உளவாகிய நட புக்கள் எததன்மையோ அத்தன்மையே இம்மடந் தையோடு எம்மிடத்தில் உளவாகிய நட்புக்கள்.(உ)

கருமணியிற் பாவாய்நீ போதாயாம வீழுந
திருநுதற் கிலலை யிடம.

(க-ரை.) என்கண்ணில் கருமணியின் இடத்து உறையும் பாவையே நீ அவவிடம்விட்டுப போவாயா க போகாது இருப்பாயாகில் எம்மால விருமபப்பட்ட திருநுதலை உடையாட்கு இருக்க இடம இல்லை.(ந)

வாழ்த லுயிரக்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

(க-ரை.) தெரிந்த ஆபரணத்தை உடையாள் எனனைப்புணருமபோது உயிர்க்கு உடம்போடு கூடி வாழ்தல் போலும் பிரியும்போது அவவுடமபி நின றுஉயிர் பிரிதல் போலும. (௪)

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கணணாள் குணம.

(க-ரை.) ஒளியினவாகிப் போர்செய்யும் கண்ணி னை உடையாள் குணங்களை நான்மறந்தேன் ஆகில் நினைப்பேன் ஒருபோதும் மறத்தலை அறியேன் ஆத லால் நினைத்தலையும் அறியேன். (ரு)

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

(க-ரை.) தாங்காணுமைபற்றித் தூரத்தில்போயி ஞா என்று நினைப்பவா நினைக்கக்கடவர் எம்முடைய நாயகர் எங்கண்ணுள்ளே நின்றும் போகார் நாம் அறியாமல் இமைததோம் ஆகில் அதனுல் வருந்துவதும்செய்யார் ஆதலால் காணப்படாா நுண்ணியர்.

கணணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

(க-ரை.) எம்முடைய நாயகர் எங்கண்ணுள்ளே இருக்கின்ருர் ஆதலால் கண்ணில் மை எழுதேம் அவர் மறைதலை அறிந்து. (எ)

நெஞ்சத்தாா காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிநது.

(க-ரை.) எம்முடைய நாயகர் நெஞ்சுள்ளே இருக்கின்ருர் ஆகையால் உண்ணும் போது சூடாக உண்டலை அஞ்சுவோம். அவர் அதனுல் சூடு உறுதலை அறிந்து. (அ)

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னு மிவ்வூர்.

(க-ரை.) என்கண் இமைக்கும் ஆனுல் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலை அறிந்து இமையேன் அவ்வளவில் அவரைத்துயிலா நோய் செய்தார் அன்பிலர் என்று சொல்லும் இவ்வூர். (௯)

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்
துறைவ, ரேதில ரென்னுமிவ் வூர்.

(க-ரை.) காதலர் எப்பொழுதும் என் உள்ளத் துள்ளே மகிழ்ந்து வாசம செய்வா அதனை அறி யாதவரைப் பிரிந்து வாசஞ்செய்வர் அன்பிலர் என்று சொல்லும் இவ்வூர். (கo)

## ககசு-ம். அதி.—நாணுத்துறவுரைத்தல்.

அஃதாவது - தூரப்படுததப்பட்டுப் பொறுதவனு கிய தலைவனும, அறததோடு நிறகததொடங்கிய தலைவியும, தமது நாணம் இழததலைச் சொல்லுத லாம.

காம முழுநது வருநதினாக் கேம
மடலலல திலலை வலி.

(க-ரை.) அரியமகளிரோடு காமத்தை அநுபவித் துப் பின அதுபெறு து துன்பம அடைந்த ஆடவர் க்குமுன்னும் காப்பாய் வருகினற மடல் அல்லது இனி வலியது இல்லை. (க)

நோனு வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.

(க-ரை.) அவவருததத்தினைப் பொறுத உடம்பும் உயிரும் அதற்குக் காவலாகிய மடன்மாவினை ஏறக் கருதுகின்றன. அதனை விலக்குவதாகிய நாணத் தை ஒழித்துவிட்டு. (உ)

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்
றுடையேன், காமுற்று ரேறு மடல்.

(க-ரை.) நாணத்தையும் ஆண்மையையும் முன்னமே உடையேன அவை காமத்தால் நீங்குதலால் காமமிக்கார் ஏறும் மடலினை உடையேன். (ந)

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

(க-ரை.) நாணமும் ஆண்மையுமாகிய புணைகளைக் காமவெள்ளமானது கொண்டுபோகின்றது. (ச)

தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

(க-ரை.) மாலைப்பொழுதின் இடத்து அநுபவிக்கும் துன்பத்தையும் அதற்கு மருந்தாகிய மடலினையும் முன்னறியேன் இப்பொழுது எனக்கு வளையலை உடையவள் தந்தாள். (ரு)

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண.

(க-ரை.) உன்மாது காரணமாக என்கண்கள் ஒருபோது நித்திரை செய்யாவாம அதனால் யாவருமநித்திரை செய்யும் பாதி இராத்திரியில் மடனமா ஏறுதலை நினைப்பேன். (சா)

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

(க-ரை.) கடல்போலக்கரையற்ற காமநோயினை அநுபவித்து மடல் ஏறுதலைச் செய்யாது இருக்கிற பெண்பிறப்பைப் போலத் தக்க பிறப்பு உலகத்தில் இல்லை.

நிறையரியா மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

(க-ரை.) இவர் நிறையால் நாம்மேற்கொள்ளுதற்கு அறியரென்று அஞ்சுதல் செய்யாது மிகவும் அளிக்கத் தக்கவர் என்று இரங்குதல் செய்யாது மகளிர காமமும அவர் மறைததலைக் கடந்து சபை இடத்து வெளிப்படுவதா இருந்தது. (அ)

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

(க-ரை.) யான் முன் அடங்கி நிற்பதால் எல்லாரும் என்னை அறியார். இனி அவவாறு நில்லாது நானே வெளிப்பட்டு அறிவிப்பேன் என்று நினைத்து என் காமம் இவவூர்வீதியில் மயங்கிச் சுழல்கின்றது.

யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

(க-ரை.) நாம் கேட்கும்படி அல்லாமல் கண்ணால் காணும்படி எம்மை அறிவில்லார் சிரிக்கின்றார். அவர் அங்ஙனம் செய்கின்றது நாம் அடைந்த நோயைத் தாம் அடையாமையால். (௰)

---

## ககரு-ம். அதி.—அலரறிவுறுத்தல்.

அஃதாவது-களவொழுக்கம் வேண்டிய தலைவன் பிறர்சொல்லுகின்ற அலர் தனக்கு ஆகின்றவித்தைத் தோழிக்கு அறிவித்தலும் மணமாக உட்

போக்காக ஒன்று வேண்டிய தலைவியும் தோழியும அவ்வலரை அவனுக்கு அறிவு உறுத்தலுமாம்.

---

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

(க-ரை.) உன்மாதுக்கும் எமக்கும் உண்டாகியநட்பு அலரா எழுதலால் என் அரிய உயிரானது அவளைப்பெற்றதுபோல நிலைபெறும். அந்நிலை பேற்றைத் தெய்வத்தால் நானே அறிவது அல்லது பலரும் அறியார்.

மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

(க-ரை.) மலாபோலும் கண்களை உடையவளது அருமை அறியாது இவ்வூர் அவளை எளியவள் ஆக்கி அவளோடு அலர்கூறுதலை எமக்கு உபகரித்தது.(உ)

உறுஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறுஅது பெற்றன்ன நீர்த்து.

(க-ரை. எங்களுக்குப் புணர்ச்சி உண்டா இருக்கையை இவ்வூர் அறிதலால் விளைந்த அலர் எனக்கூறுவது ஒன்றோ அது கேட்ட என்மனம் அப்புணர்ச்சியைப் பெறுது இருந்தே பெற்றது போலும் குணம் உடைத்து. (ங.)

கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

(க-ரை.) என்காமம் இவ்வூர் எடுக்கின்ற அலரால் அலர்தலை உடைத்தாயிற்று. அவ்வலர் இல்லை ஆகில் தன் இயல்பு இழந்து சுருங்கும். (ச)

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம், வெளிப்படுந் தோறு மினிது.

(க-ரை.) கள் உண்பார்க்குக் களிக்குந்தோறும் கள் உண்டல் இனிது ஆவதைப்போல எனக்குக்காமம் அலராந்தோறும் இனிது ஆகின்றது. (ரு)

கண்டது மன்னு மொருநா ளலாமன்னுந் திங்களைப் பாம்புகொண் டற்று.

(க-ரை.) தலைவனை நான காணப்பெற்றது ஒரு நாளேயாம். அதனால் உண்டான அலரானது அவ்வளவு இல்லாமல் சந்திரனைப் பாமபுகொண்ட அலர் போல் எங்கும் பரந்தது. (சு)

ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன் னீராக நீளுமிந் நோய்.

(க-ரை.) இக்காமநோயாகிய பயிர் இவ்வூரின் மகளிர் எடுக்கின்ற அலரானது எருவாக தாய்சொல்கின்ற கடுஞ்சொல்லானது நீராக வளர்கின்றது. (எ)

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற், காம நுதுப்பே மெனல்.

(க-ரை.) அயலார் எடுக்கின்ற அலரால் உண்டாகும் காமத்தை அவிப்பேம் என்று நினைத்தல் நெய்யால் நெருப்பை அவிப்பேம் என்று நினைப்பதை நிக்கும். (அ)

அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்
றூர், பலர்நாண நீத்தக் கடை.

(க-ரை.) தம்மைக்கண்ட நாளில் உன்னைவிட்டு
நீங்கேன் அஞ்சுதல் ஒழியென்ற அவரே இன்றுகண்
டார் பலரும் நாணும் வகை நம்மைத்துறந்தபின் நா
ம்ஏதிலாகூறும் அலருக்கு நாணக்கூடுமோகூடாது.

தாம்வேண்டி னல்குவா காதலர் யாம்வேண்
டுங், கௌவை யெடுக்குமிவ் வூர்.

(க-ரை.) உடன் செல்லுதற்குக் காரணமாக நோ
க்கி நாமுன் விரும்புவதாகிய அலரை இவ்வூர்தானே
எடாநின்றது இனிக்காதலர் தாமும் யாம் வேண்டிய
க்கால் அதனை இனிது நேர்வார் ஆதலால் இவ்வலர்
நமக்கு நன்ருய் வந்தது.                    (௧0)

களவியல் முற்றிற்று.

---

## கற்பியல்.

---

### ௧௧௬-ம். அதி.—பிரிவாற்றமை.

---

அஃதாவது-மணம்செய்துகொண்டபின் தலைவ
ன் அறம் பொருள் இன்பங்களின்பொருட்டுத் தலை
வியைப் பிரிந்து தூரத்திலும் அவவிடத்திலும் செல்
லு நாளில் அப்பிரிவை அவள் பொறுக்கமாட்டாதவ
ளாம் தன்மையாம்.

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்று
நின், வல்வரவு வாழ்வார்க் குரை.

(க-ரை.) நீ எம்மைப் பிரியாமை உண்டாகில் அதனை எனக்குச்சொல் அஃதொழியப்பிரிந்து போய் விரைந்து வருதல் சொல்லுவை ஆனால் அதனை அப்பொழுது உயிர் வாழ்வார்க்குச் சொல். (க)

இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.

(க-ரை.) தழையும் கண்ணியும் கொண்டு பின் நின்ற நாளில் அவரதுபார்வைமாத்திரமும்புணர்ச்சி குறித்தமையால் நமக்கின்பம் உடைத்தா இருக்குமென்று அப்புணர்ச்சி தான் நடந்துகொண்டிருக்கவும் அது பிரிவர் என்றஞ்சும் அச்சத்தினை உடைத்தாயிற்று அவர் அன்பின்னிலைமை இதுவென்றது.

அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

(க-ரை.) பிரியேன் என்று அதஞ்சொல்லும் நம் பிரிவாற்றாமையும் அறிதல்உடையராய் காதலர்கண்ணும் ஒரோவழிப்பிரிவு நிகழ்தல் ஆனவர் சொல்லுந் தலையளியும்பற்றி நம்மஇடத்து அன்புடையர் எனத்தெளியும் தெளிவு அரிதா இருந்தது. (ந)

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்த
சொற், றேறியார்க் குண்டோ தவறு.

(ச-ரை.) எதிர்ப்பட்ட நாளே தலையளிசெய்து உன்னைவிட்டுப்பிரியேன் அஞ்சாதிருவென்றவர் தா

மேபின் பிரிவாராகில் அவர்க்கு அல்லால் அவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றம் உண்டோ.　　(௪)

ஓம்பி னமைந்தார் பிரிவோமபன் மற்றவா
நீங்கி னரிதாற் புணாவு.

(க-ரை.) என் உயிரைச்செல்லாமல் காத்தாயாயின் அதனை ஆளுதறகு அமைந்தாருடைய பிரிவினையை நிலைக்கச்செய்வாயாக, அவர் நிலையாமல் செல்வராகில் அவரால் ஆளப்பட்ட உயிரும் செல்லும் சென்றால் பின் அவரைக்கூடுதல் எனக்கு அரிதாம்.

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

(க-ரை.) நமது பிரிவின் பொறுமை அறிந்த தலைவா தாமே நம்முன்னின்று தம்பிரிவினை உணர்த்தும் வன்கண்மை உடையர் ஆயினர் அத்தன்மையராய் பின்பு நமது ஆறறுமை அறிந்துவந்து தலையளிசெய்வர் என்று இருக்கும் ஆசை விடப்படும்.　　(௬)

துறைவன் றுறந்தமை தூற்றுகொன் முன்கை
யிறையிறவா னின்ற வளை.

(க-ரை.) துறைவன் என்னைப் பிரிந்தமையை அவன் உணர்த்தாமல் தாமே உணர்ந்தேன் முன்கையி னிறையினின்றும் கழலாநின்ற வளைகள் எனக்கு அறிவியாவோ அவன் உணர்த்த உணர்ந்துவந்து நீ அறிவித்தல் வேண்டுமோ.　　(௭)

இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு.

(க-ரை.) மகளிர்க்குத் தங்குறிப்பறியும் தோழி யர் இல்லாத வேற்றூரின்கண் வாழ்தல் துன்பமா கும் மேலும் தங்காதலரைப் பிரிதல் அதனினும் துன் பம் ஆகும். (அ)

தொடிற்சுடி னலலது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

(க-ரை.) தீயைத்தொட்டால் சுடச்சுடும் ஆதலா ல், காமமாகிய நோய்போலத் தன்னைவிட்டு அகன் றால் தப்பாது சுடவல்லதோ. (௯)

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார பலா.

(க-ரை.) நீ சொல்லுகின்றது ஒக்கும பிரிவை அறிவித்தபோது அதற்கு உடனபட்டுப் பிரியும் போது உண்டாகிற துன்பநோயையும் நீக்கி அப்பி ரிவையும் பொறுத்து இருந்து உயிர்வாழும் மக ளிர் பலர். (௰)

---

## ௧௧௭-ம். அதி.—படர்மெலிந்திரங்கல்.

அஃதாவது - பிரிவு பொறுக்கமாட்டாதவளாகிய தலைவி தான் உறுகின்ற துன்பத்தை எப்போதும் நினைத்தலால் மெலிந்து இரங்குதலாம்.

---

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை
யிறைப்பவர்க், கூற்றுநீர் போல மிகும்.

(க-ரை.) இந்நோயைப் பிறர் அறியாமல் நாணி மறைப்பேன். இந்நோயோ இறைப்பவர்க்கு ஊற்று நீரைப்போல மிகும். (க)

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்
தார்க், குரைத்தலு நாணுத் தரும.

(க ரை.) இக்காமநோயை இவவிடத்தோர் அறியாமல் மறைப்பதற்கும் வல்லவளாயில்லை. இந்நோய் செய்தார்க்கு உரைக்க எண்ணினதுவும் எனக்கு நாணந்தரும இனி எனசெய்வேன். (உ)

காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனு வுடமபி னகத்து.

(க-ரை,) காமநோயும் அதனைச்செய்தவர்க்கு அறிவிக்கக்கூடாத நாணும் தம்மைப் பொறாத என் உடம்பின்கண்ணே உயிர் காவடித்தண்டாகத் தொங்குகின்றன. (ங)

காமக் கடன்மன்னு முணடே யதுநீந்து
மேமப் புணைமன்னு மில.

(க-ரை.) யாவர்க்கும் உளவாய் நின்ற இவவிரண்டின் உள்ளும் எனக்கு உண்டாகின்றது காமக்கடலே அதனை நீந்தும் காப்பாகிய புணை இல்லை. (ச)

துப்பி னெவனவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

(க-ரை.) இன்பம் செய்தற்கு உரியநட்பின்கண்ணே துன்ப அவாவினைச் செய்ய வல்லவர் துன்பம் செய்தற்கு உரிய பகைமைக்கண் என்செய்வர். (ரு)

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

(க-ரை.) காமப்புணர்ச்சியால் இன்பம் செய்யும் போது அவவின்பம் கடல்போலப் பெரிதாம். அக் காமந்தானே பிரிவால் துன்பம் செய்யுமபோது அத் துன்பம் அக்கடலினும் பெரிதாம். (௬)

காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

(க-ரை.) காமமாகிய கடலைநீந்தியும் அதன்கரை காண்கிலேன் எல்லாரும் நித்திரைசெய்யும் பாதி இரவிலும் யான் ஒருதுணையும் இல்லாமல் தனித்து இறவாது இருக்கின்றேன். (௭)

மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை.

(க-ரை.) இந்த இரவு உலகத்தில் நிலைபெற்ற உயிர்களை எல்லாம் தூங்கச் செய்தலால் எனனை அல்லது வேறுதுணையை உடையதா இல்லை. (அ)

கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
ணெடிய கழியு மிரா.

(க-ரை.) காதலரோடு நாம் இன்புற்ற நாள்க ளிலே உரியவையா இருந்து அவர் பிரிவைப் பொ றுக்கமாட்டாத இந்நாள்களிலே நெடியதாய்ச் செல்கின்ற இராக்காலம் அக்கொடியவரது கொடுமை க்குமேலே அதிககொடுமையைச் செய்கின்றது.(௯)

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின்
வெள்ளநீர், நீந்தல மன்னோவென் கண்.

(க-ரை.) மனம்போல காதலர் இருக்கிறதேயத்திற்கு விரைவில் செல்லவேண்டும் ஆனால் எனது கண்கள் வெள்ளமாகிய தண்ணீரை நீந்தா. (௧௦)

## ௧௧௮-ம். அதி.—கண்விதுப்பழிதல்.

அஃதாவது - கண்கள் தலைவனைக்காணுதற்கு விரைதலாலே வருந்துதலாம்.

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டா
நோய், தாங்காட்ட யாங்கண் டது.

(க-ரை.) ஆராத காமநோயை நாம் அறிந்தது தாம் காதலரை எமக்குக்காட்டியதால் அன்றோ கண்கள் இன்று எம்மைக்காட்டச்சொல்லி அழுகின்றது எதை நினைத்து. (௧)

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணரா
ராப், பைதல் லுழப்ப தெவன்.

(க-ரை.) மேல்விளைவதனை ஆராய்ந்து அறியாமல் அன்று தலைவரைப்பார்த்த உன்கண்கள் இன்று இது நம்மால் வந்தது ஆதலால் பொறுத்தல் வேண்டுமென்று கூறுபடுத்தி அறியாமல் துன்பம் அனுபவிப்பது எதைநினைத்து.

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

(க-ரை.) இக்கண்கள் அன்று காதலரைத்தாமே விரைந்துநோக்கி இன்று தாமே இருந்து அழுகின்ற இவவறியாமைச்செயல் நம்மால் சிரிக்கத்தக்க இயல்பினை உடையது. (௩)

பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா
வுய்வினோ யென்க ணிறுத்து.

(க-ரை.) உன்கண்கள் யான் உய்யமாட்டாமைக்கு ஏதுவாகிய ஒழிவில்லாத நோயை என்கண்ணே நிறுத்தி தாமும் அழமாட்டாதவண்ணம் நீர் வற்றிவிட்டன. (௪)

படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்.

(க-ரை.) எனக்குக் கடலும் சிறியதாகும்படி பெரியதாகிய காமநோயைச்செய்த எனது கண்கள் தாமும் நித்திரை இல்லாமல் துன்பத்தை அனுபவிக்கின்றன. (௫)

ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது.

(க-ரை.) எமக்கு இந்தக் காமநோயைச்செய்த கண்கள் தாமும் தூங்காமல் அழத்தலைப்பட்டது மிகவும் இனிது ஆயிற்று. (௬)

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

(க-ரை.) விரும்பி உள்ளம் குழைந்துவேண்டி அன்று அத்தலைவரைப்பார்த்த கண்கள் இன்று தூங்காமல் அழுது துன்பததை அனுபவித்து தம் உள்ளே இருக்கிற நீர் அற்றுப்போகுக. (எ)

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண.

(க-ரை.) மனத்தால் விரும்பாது இருந்து சொல்லுமாத்திரத்தால் விரும்பியகாதலர், இங்கே இருக்கின்றார் அவவிருத்தலால் பயன்யாது, கண்கள் அவரைக்காணாமல் பொறுக்கவில்லை. (அ)

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

(க-ரை.) காதலர் வாராத நாள்களிலே தூங்காவாம் வந்தநாள்களிலே அவர் பிரிவுக்கு அஞ்சி தூங்காவாம், அந்த இருவழியும் எனது கண்கள் பொறுத்தற்கு அரிய துன்பத்தை உடையனவாம். (௯)

மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

(க-ரை.) எம்மைப்போலும் அறையாநின்ற பறையாகிய கண்ணை உடையவர் தமது நெஞ்சத்தில் அடக்கிய இரகசியத்தை அறிதல் இவ்வூரில் உள்ளவர்களுக்கு எளிது.

## ௧௧௯-ம். அதி.—பசப்புறுபருவரல்.

அஃதாவது - பசப்புறுதலாகிய வருத்தம் தலைவனது பிரிவு பொறாமையால் வருவதோர் நிறவேறுபாடாம்.

---

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்த
வென், பண்பியார்க் குரைக்கோ பிற.

(க-ரை.) என்னை விரும்பிய தலைவர்க்குப் பிரிவை உடன்பட்ட நான் அதனைப் பொறாமல் இப்பொழுது என் இயல்பை எவர்க்குச்சொல்லுவேன்.

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

(க-ரை.) நான் பொறுத்திருக்கவும் இப்பசப்பு நிறம் அவர் உண்டாக்கினார் என்னும் களிப்புமிகுதியால் என்னுடம்பின்மேல் ஏறிச்செலுத்துகின்றது.

சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து.

(க-ரை.) பிரிகின்றபொழுதே அவ்விரண்டிற்கும் தலைமாறாக இக்காமநோயையும் பசலையையும் எனக்குத்தந்து என்மேனி அழகையும் நாணத்தையும் அவர்கொண்டுபோயினர். (௩)

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு.

(க-ரை.) அவர் சொற்களை நான் மனத்தால் நினைக்கின்றேன் வாயால் சொல்லப்படுவதும் அவர் நற்குணமே அப்படிக்கு இருந்தும் பசலைநிறம் வந்து நின்றது இது வஞ்சனையாயிருந்தது. (ச)

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்கா
ணென், மேனி பசப்பூர் வது.

(க-ரை.) அக்காலத்து எமது தலைவர் பிரிந்துசெல்வாராக எனது வடிவம் பசலைநிறம் அடைவது இங்கே அன்றோ. அப்படிப்பட்டது இன்று வேறொன்றோமோ. (ரு)

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்
கன், முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

(க-ரை.) விளக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரும் இருள்போல இப்பசப்புநிறம் தலைவனது புணர்ச்சியின் சோர்வுபார்த்து நெருங்கிவரும். (சா)

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வ
ளவி, லள்ளிக் கொள்வற்றே பசப்பு.

(க-ரை.) முன்னொருநாளில் காதலரைத் தழுவிக்கிடந்த நான் அறியாது சற்று விலங்கினேன் அப்போது பசலை நிறம் அள்ளிக்கொள்வதுபோல வந்து நிறைந்தது. (எ)

பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

(க-ரை.) பொறுத்திராமல் பசலை நிறம் அடைந்தாள் என்று என்னைப்பழிசொல்வது அல்லாமல்,

இவளை அவர் துறந்து போனார் என்று சொல்லுவார் இல்லை. (அ)

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

(க-ரை.) இப்பிரிவை நானே உடன்படும்வகை சொல்லியவர் இன்று உன்கருத்தால் நல்லநிலையி னர் ஆவராயின் என்மேனிபட்டது பட பசலைநிறம் அடையக்கடவது. (கூ)

பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்
தார், நல்காமை தூற்ரு ரெனின்.

(க-ரை.) அன்று தாம் குறையை நயப்பித்துக் கூடினவாக்கு இன்று அருளாமையை நட்புடை யோர் தூற்ருர் ஆயின், பசப்புத்தான் ஆயினள் என்று சொல்லப் பேரைப் பெறுதல் எனக்குநன்று.

---

## கஉ0-ம். அதி.—தனிப்படர்மிகுதி.

அஃதாவது - தனிமையால் உண்டாகும் துன்ப மிகுதியாம்.

---

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்ருரே
காமத்துக் காழில் கனி.

(க-ரை.) தம்மால் விரும்பப்படும் கணவர் தம் மைப்பெற்ற மகளிர் காமநுகர்ச்சி என்னும் வித்தில் லாத பழத்தைப் பெற்ருர் அன்றே. (க)

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்
வார்க்கு, வீழ்வா ரளிக்கு மளி.

(க-ரை.) தம்மை விட்டிருக்க மாட்டாத மகளிர்க்கு அவரை விட்டிருக்க மாட்டாத கணவர் அளவறிந்து வந்து செய்யுந்தலையளி தன்னையே நோக்கி உயிர்வாழ்வார்க்கு வானம் அளவு அறிந்து வந்து பெய்வதுபோலும். (உ)

வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு.

(க-ரை.) விரும்பப்படுகிற கணவரால் விரும்பப்படுகிற மகளிர்க்கு காதலர் பிரிந்தாலும் நம்மை நினைத்து விரைவில் வருவார். வந்தால் இன்புற்று நாம் வாழ்வோம் என்று இருக்கிறதருக்கு அமையும்.

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

(க-ரை.) கற்புடைய மகளிரால் நன்கு மதிக்கப்படுவாரும் தம்மால் விரும்பப்படுகிற கணவரால் விரும்பப்படார் ஆயின் தீவினை உடையவரே ஆவர்.(ச)

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்ப
வோ, தாங்காதல் கொள்ளாக் கடை.

(க-ரை.) தாமும் நம்மிடத்துக் காதல்செய்யாத போது, நம்மாலே காதல் கொள்ளப்பட்டவர் நமக்கு என்ன இன்பத்தைச் செய்வார். (இ)

ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது.

(க-ரை.) மகளிர் ஆடவர் எனப்படும் இருவா இட த்திலும் ஆசையானது ஓர் இடத்தில் உண்டானல் துன்பத்தைத்தரும் காவடிப்பாரம்போல இரண்டு இடங்களிலும் ஒத்து இருக்குமானல் இன்பத்தைத் தரும். (௬)

பருவரலும் பைதலுங் காணுன்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான்.

(க-ரை.) இன்பத்தை அனுபவிக்கும் இருவர் இ டத்திலும் ஒத்து இராமல் ஒருவர் இடத்தில் இருந் து போர்செய்யும் காமன் அவவிடத்துப் பசப்பாலா கிய நோயையும் துன்பமிகுதியையும் அறியானே.

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில.

(க-ரை.) தம்மால் விரும்பப்படும் காதலர் இட த்து இருந்து இனியசொல்லைப்பெறாது வாழ்வாரது பிரிவுபொறுத்து உயிர் வாழ்கின்ற மகளிர்போல தை ரியமுடையவர் உலகில் இல்லை. (அ)

நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

(க-ரை.) என்னல் விரும்பப்பட்ட காதலர் என் னிடத்தில் அன்பு இல்லாதவர் ஆயினும், அவர் இ டத்தில் உண்டாகும் எவ்விதசொற்களும் என் செ விக்கு இனிமையைத் தாத்தக்கன. (௯)

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.

(க-ரை.) உன்னோடு நெருங்காதவர்க்கு உனது மிகுந்தநோயைச் சொல்லப்பொருந்திய நெஞ்சே நீ பொறுக்கமாட்டாய் ஆயினும் உனக்குத் துயரஞ் செய்கின்ற கடலைத்தூர்க்க முயற்சிசெய் அது எளிது. (௧0)

## ௧௨௧-ம். அதி—நினைந்தவர் புலம்பல்.

அஃதாவது - முன்கூடிய காலத்தினுடைய இன்பத்தை நினைந்து பாசறையிடத்தில் தலைவன் தனிமை அடைதலும், தலைவி தனிமை அடைதலுமாம்.

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.

(க-ரை.) முன்னாளில் அனுபவித்த இன்பத்தைப்பிரிந்த இடத்து நினைத்தாலும் அப்பொழுது பெற்றதுபோல நீங்காப்பெருமகிழ்ச்சியைத் தருதலால், உண்டபோதல்லது மகிழ்ச்சியைத்தராத கள்ளைப்பார்க்கிலும், காமமே இன்பந் தருவது. (௧)

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்
வார், நினைப்ப வருவதொன் றில்.

(க-ரை.) தம்மால் விரும்பப்படுவோரைப் பிரிந்த இடத்து நினைந்தால், அப்பிரிவால் வருவதோர் துன்பம் இல்லையாம். அதனால் காமம் எவ்வளவு ஆயினும் இன்பந்தருவது ஒன்றேகாண். (௨)

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும்.

(க-ரை.) எனக்குத் தும்மல் உண்டாவதுபோல த்தோன்றிக் கெடுகின்றது. அதனால் தலைவர் என்னை நினைப்பவர்போல நினையாா ஆதல் வேண்டும்.()

யாமு முளேங்கோ லவாநெஞ்சத் தெங்நெஞ் சத், தோஒ வுளரே யவா.

(க-ரை,) எமது நெஞ்சத்தில் அவர் எப்பொழுதும் உள்ளவராகவே இருக்கின்றார். அப்படியே அவரது நெஞ்சிலும் நாமும் இருக்கின்றேமோ இல்லையோ. (௪)

தங்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நா ணார்கொ, லெங்நெஞ்சத் தோவா வரல்.

(க-ரை.) தம்முடைய நெஞ்சத்தின் இடத்தில் எம்மைக் காவல்கொண்ட தலைவர், எமது நெஞ்சின் இடத்து ஒழியாமல் தாம் வருதலுக்குநாணாரோ.

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரோடி யா, னுற்றநா ளுள்ள வுளேன்.

(க-ரை.) நான் அவரோடு புணர்ந்தகால இன்பத்தை நினைத்தலால், இத்துன்பவெள்ளத்தில் உயிர் வாழ்கின்றேன் அது இல்லை ஆனால், நான் வேறே எத்தால் உயிர்வாழ்வேன். (௬)

மறப்பி னெவனுவன் மற்கொன் மறப்பறியே னுள்ளினு முள்ளஞ் சுடும்.

(க-ரை.) அந்த இன்பத்தை மறத்தல் அறியேன் ஆகி இன்று நினைந்துநிற்கவும் பிரிவானது என் உள்ளத்தைச் சுடுகின்றது. அப்படிப் பிரிவுபொறுத்து நான் மறந்தால் எத்தால் இறவாது இருப்பேன்.()

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.

(க-ரை.) தலைவர் தம்மை எவ்வளவு நினைத்தா லும் அதற்குக் கோபியார். அவர் எனக்குச் செய் யும் இன்பம் ஆவது அவ்வளவு அன்றோ. (அ)

விளியுமென் னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

(க-ரை.) முன் எல்லாம் நாம் இருவரும் வேறு அல்ல என்று சொல்லுவாரது அருள் இல்லா மையை மிகவும் நினைந்து எனது இனிது ஆகிய உயிர் கழிகின்றது. (௯)

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

(க-ரை.) சந்திரனே என்நெஞ்சை விடாது இரு ந்து விட்டுப் போனவரைக் கண் அளவான் ஆயி னும் எதிர்ப்படும்வகை நீ மறையாது இருப்பாயாக.

---

## ௧௨௨ ம். அதி.—கனவுநிலையுரைத்தல்.

அஃதாவது - தலைவி தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதலாம்.

---

காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.

(க-ரை.) யான் வருந்துகிறதை அறிந்து அது தீரக் காதலர் விடுத்த தூதைக்கொண்டு என் இடத்து வந்த கனவினுக்கு விருந்தாக யாது செய்வேன். (க)

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

(க-ரை.) தூங்காது அழிகின்ற என்கயல்போன்ற உண்கண்கள் நான் இரந்தால் தூங்கும் ஆனால் கனவிலே காணப்பட்ட தலைவர்க்குப் பொறுத்திருக்கிறதன்மையை யானே விரியச் சொல்லுவேன்.

நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர்.

(க-ரை.) நனவில் வந்து அருள் செய்யாத தலைவரைக் கனவின்கண்ணே காணுதலால் என் உயிரானது நீங்காதிருக்கின்றது. (ங)

கனவினா னுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தரற்கு.

(க-ரை.) நனவில்வந்து அருள் செய்யாதவரை அவர் போன இடந் தேடிக்கொண்டு வந்து தருதலால், அக்கனவில் இன்பம் ஆனது எனக்கு உண்டாகின்றது. (ச)

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

(க-ரை.) முன்னே நனவில் தலைவரைக்கண்டு அனுபவித்த இன்பமும், இன்று கனவில் கண்டு

அனுபவித்த இன்பமும் கண்ட பொழுதே இனி மை ஆயிற்று, அதனால் எனக்கு இரண்டும் ஒத் திருக்கின்றன. (௫)

நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்.

(க-ரை.) நனவு என்று சொல்லப்படுகின்ற ஒரு பாவி இல்லாவிட்டால் கனவில்வந்து கூடிய தலை வர் என்னைப் பிரியார். (௬)

நனவினா னல்காக் கொடியார் கனவினா
னென்னெம்மைப் பீழிப் பது.

(க-ரை.) ஒரு தினம் ஆயினும் நனவில்வந்து அருள்செய்யாதபாதகர் தினந்தோறும் கனவில்வந்து எமமை வருத்துவது எந்தச்சமபந்தம்பற்றி. (௭)

துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவா விரைந்து.

(க-ரை.) என்னெஞ்சைவிட்டு நீங்காத காதலர் யான் தூங்கும்பொழுது வந்து தோளின்மேல் உள் ளவராய்ப் பின் விழிக்கும்பொழுது விரைந்து ப ழைய நெஞ்சத்தில் இருப்பவர் ஆவர். (௮)

நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்.

(க-ரை.) தமக்கு ஒரு காதலர் இல்லாமையினால் கனவிலே அவரைக்கண்டு அறியாத மகளிர் தாம் அறிய நனவில் வந்து அருள் செய்யாத காதலரை அன்பிலர் என்று நொந்துக்கொள்வர்.

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

(க-ரை.) இந்த ஊரில் உள்ள மகளிர் நனவின் இடத்தில் நம்மைவிட்டு நீங்கினார் என்று தலைவர் மேலே கொடுமை சொல்லப்பட்டவர், கனவின் இடத்தில் அவர் நீங்காது வருதலைக்கண்டு அறியாரோ. (௧0)

௧௨௩-ம். அதி.—பொழுதுகண்டிரங்கல்.

அஃதாவது - மாலைப்பொழுது வந்த இடத்து அதனைக்கண்டு தலைவி இரங்குதலாம்.

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

(க-ரை.) பொழுதே நீ முன்னாட்களில் வந்த மாலையோ அல்லை, அந்நாட்களிலே காதலரைக்கூடிய மகளிரது உயிரை உண்ணுகிற முடிவுகாலமாக இருந்தாய். (௧)

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்
போல், வன்கண்ண தோநின் றுணை.

(க-ரை.) மயங்கிய மாலையே நீயும் எம்மைப்போல் ஒளி இழத்தலை உடையதாக இருந்தாய், உனது துணையும் எமது துணைபோல் இரக்கம் இல்லாமை உடையதோ சொல்லு.

பனியரும்பிப் பைதலகொண மாலை துனியரு
ம்பித், துன்பம் வளர வரும.

(க-ரை.) தலைவர் கூடிய நாள் எல்லாம் என்
முனனே நடுக்கம அடைந்து பசநது வந்த மாலை
ஆனது எனக்கு உயிர்வாழ்தலில் வெறுப்பு உண்
டாகி அதற்கு உண்டாகிற துன்பம வேளைக்கு ஒரு
விதமாய் மிக வளருகினறது. (௩)

காதல ரிலவழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும.

(க-ரை.) தலைவா உள்ளபொழுது எல்லாம் என்
உயிர்தளிர்க்க வந்த மாலை, தலைவா இல்லாத இப்
பொழுது கொலை செய்கிற களததுக்கொலைஞர்போ
ல அந்த உயிரைக கொளளுதறகு வருகினறது.(௪)

காலைக்குச செய்தநன் றென்கொ லெவன்கொ
லயான், மாலைக்குச் செய்த பகை.

(க-ரை.) காலையும் மாலையும் அவர் கூடிய நாள்
போல் அல்லாமல் இன்று வேறுபட்டுவருகின்றன.
அவைகளுள் காலைப்பொழுதிற்கு என்னாலே செய்
யப்பட்ட உபகாரம் யாது, நான் மாலைப்பொழு
திற்கு செய்யப்பட்ட அபகாரம் யாது. (௫)

மாலைநோய் செய்தன் மணநதா ரகலாத
காலை யறிந்த திலேன்.

(க-ரை.) முன் எல்லாம் எனக்கு நட்பாய் இன்ப
ஞ்செய்து வந்தமாலை, இன்றுபகையாய்த் துன்பஞ்
செய்தலை தலைவர் பிரிதற்கு முன்னே அறியப்பெற்
றேன் இல்லை.

காலை யரும்பிப் பகலெல்லாம போதாகி
மாலை மலருமிந் நோய்.

(க-ரை.) இககாமநோயாகியபூ காலைப்பொழுதில் அரும்பாய், பகற் பொழுது எல்லாம் முகிழாய் முதிர்ந்து மாலைப்பொழுதில் மலாகினறது. (எ)

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொலலும படை.

(க-ரை.) முன் எல்லாம் இன்பஞ்செய்த இடையனது வேணு நாதம், இப்போது நெருப்புப்போலே சுடுவதும் ஆகிமாலைக்குததூதும ஆகி அம்மாலை வந்து என்னைக் கொல்லும் போது கொலை செய்யும் படையும் ஆயிற்று. (அ)

பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும போழ்து.

(க-ரை.) இதற்கு முன் எல்லாம் யான் மதிமயங்கி நோயை அனுபவித்தேன், இணிக்கண்டாரும் மதிமருளும் வகை மாலைக்காலம் வரும் பொழுதுஇவ்வூர் எல்லாம் மயங்கிநோயை அனுபவிக்கும், (௯)

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர.

(க-ரை.) காதலர் பிரிவைப்பொறுத்து இறவாது இருந்த என்உயிர் ஆனது பொருள் இயல்பே தமக்கு இயல்பாக உடையவரை நினைந்து இப்படி மயங்கு மாலையிலே மாய்கின்றது. (௧௦)

## கஉ௪-ம். அதி.—உறுப்புநலனழிதல்.

அஃதாவது—தலைவியினுடைய கண்ணும் தோளும் நெற்றிமுதலிய அவயவங்களும் அழகு அழிதலாம்.

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண.

(க-ரை.) இப்பொழுமை நம்மிடத்தில் இருக்க நெடுந்தூரத்திலே சென்ற தலைவரை நினைத்து அழுதலால் உனகண்கள் ஒளிஇழந்து முன்னே தமக்கு நாணின நல்லமலர்களுக்கு இன்று நாணிவிட்டன.

நயந்தவர் நலகாமை சொலலுவ போலும
பசந்து பனிவாருங் கண்.

(க-ரை.) நிறம் வேறுபட்டுநீரைப்பொழிகின்ற கண்களநம்மால் விரும்பப்பட்டவரது அருள்செய்யாமையைப் பிறர்க்குச் சொல்லுவ போலும் இனி நீ பொறுத்தல் வேண்டும். (உ)

தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.

(க-ரை.) தலைவர்கூடியநாளில் இன்பமிகுதியால் பூரித்தநினது தோள்கள் இன்று அவர் பிரிந்தமையை விளங்க அறிவிப்பவைபோல்வாடுகின்றன.(ந)

பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

(க-ரை.) அன்று தந்துணைவர் நீங்குதலால்,அவரா லேபெற்ற செயற்கை அழகேஅல்லாமல், பழைய இயற்கை அழகும் இழந்த இத்தோள்கள், இன்று அதற்குமேலே தம்பெருமை இழந்து பசும்பொன் வளைகள் சுழலுகின்றன. இவை இப்படிச் செய்யுந் தன்மையன அல்ல. (௪)

கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

(க-ரை.) தழுவுங்கை விலகினும் பொறுதவருக்கு இவவாறு கால நீடிப்பில என்ன ஆகுமோ என்று நினையாத கொடியவரது பொல்லாங்கை வளைகளுங் கழன்று பழைய இயற்கை அழகும் இழந்த இததோள்கள். இனி அதனைமறைக்கும்வழியாது சொல்லுகின்றன. (௫)

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற நொந்து.

(க-ரை.) யான் பொறுக்கவும் என்வசப்படாமல் வளைகள் கழலும்படி தோள்கள் வாட அவற்றைக் கண்டு அவரை நீ கொடியவர் என்று சொல்வதைப் பொறாமல் என் உள்ளே நோகின்றேன். (௬)

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து.

(க-ரை.) நெஞ்சே இவளாலே கொடியவர் என்று சொல்லப்பட்ட அவர்க்கு வாடுகின்ற என் தோளினால் விளைகின்ற ஆரவாரத்தைச் சொல்லி ஒரு

மேம்பாட்டை அடையவல்லேயோ, வல்லை ஆனல் அதனை ஒப்பது வேறு இல்லை. (எ)

முயங்கிய கைகளை யூக்கப பசந்தது
பைநதொடிப் பேதை நுதல.

(க-ரை.) தன்னை இறுகததழுவிய கைகளை இவ ளுக்கு நோய்செய்யும என்று நினைதது ஒருதினம் தளாத்தினேனாக அவவளவும் பொறுமல் பசியவ ளைகளை அணிநத பேதையின நெற்றி ஆனது நிறம் வேறுபட்டது. அப்படிப்பட்ட நெற்றி இப்பிரிவிற் குயாது செயயுமோ. (அ)

முயக்கிடைத் தணவளி போழப பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

(க-ரை.) அப்படித தழுவிய கைகளைத் தளர்த்த லால் அப்புணாச்சிககு நடுவே சிறுகாற்று நுழைந் ததாக அவவளவு இடை நடும் பொறுமல் பேதை யினது பெரிய குளிர்ந்தகண்கள் பசலை நிறம் அடை ந்தன. அப்படிப்பட்ட கண்கள் மலைகளும் காடுக ளும் நாடுகளும் ஆகிய இந்த இடை நடுகளை எல் லாம் எப்படிப்பொறுத்தன. (கூ)

கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
யொண்ணுதல் செய்தது கண்டு.

(க-ரை.) தனக்கு அயல் ஆகிய ஒளிபொருந்திய நெற்றியால் விளைக்கப்பட்ட பசப்பைப்பார்த்து சிறு காற்று நுழையவந்த கண்களின் பசப்போ! துன் பம் அடைந்தது. (கo)

## கஉரு-ம். அதி.—நெஞ்சொடுகிளத்தல்.

அஃதாவது - பிரிவு பொறுமை மேற்படத் தனக்கு ஓர் பற்றுக்கோடு காணாத தலைவி தன்னெஞ்சோடு செய்திறன் அறியாது சொல்லுதலாம்.

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெ
னைத்தொன்று, மெவ்வநோய் தீர்க்கு மருந்து.

(க-ரை.) நெஞ்சே ஒன்றாலுந் தீராத நோயைத் தீர்க்குமருந்து ஆவது ஒனறை நான் அறியும்படி ஆக எப்படிப்பட்டது ஒன்றாயினும் அறிந்து எனக்குச் சொல்லாயோ. (க)

காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

(க-ரை.) எனது நெஞ்சே வாழ்வாய் ஆக, அத்தலைவா நம்மேல் ஆசை இல்லாதவரா இருக்க நீ அவர்வரவுபார்த்து வருந்துதற்குக் காரணம் உன் அறியாமையே வேறொன்றும் இலலை. (உ)

இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந் துள்
ளல, பைதனோய் செய்தார்க ணில்.

(க-ரை.) நெஞ்சே அவர் இடத்துக்கும் போகாமல் இங்கும் இறந்து விடாமல் இருந்து அவர்வரவை நினைந்து நீ வருந்துகின்றது என்னை, இத்துன்ப நோய் செய்தவர் இடத்து நமக்கு இரங்கிவரநினைத்தல் உண்டாகாது.

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்
ளைத், தின்னு மவர்க்காண லுற்று.

(க-ரை.) நெஞ்சே நீ அவர் இடத்துப்போக வே
ண்டும் ஆனால் இக்கண் களையும் உடன் கொண்டு
செல்லு, நீமாத்திரம் செல்வாய் ஆனால் இக்கண்கள்
அவரைக்காண வேண்டி நீகாட்டு என்று தின்பவை
போல் வருத்தும். (ச)

செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சே
யா, முற்றா லுறாஅ தவர்.

(க-ரை.) நெஞ்சே நாம் தம்மை விரும்ப நம்மை
விரும்பாத தலைவரை வெறுத்தார் என்று நினைந்து
பிணங்கிக் கைவிட்டிருக்கும் வழி நமக்கு உண்டோ
இல்லை. (ரு)

கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்து
ணராய், பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு.

(க-ரை.) எனது நெஞ்சே யான் தம்மோடு பிண
ங்கினால் அப்பிணக்கை நீக்கவல்ல தலைவரைப்பார்த்
தால் பொய்யாக ஆவது ஒருதரம் பிணங்கிப் பின்
அதனை நீங்கமாட்டாய், நீ இப்போது அவரைக்
கொடியவர் என்று பொய்க்காய்வாகக் காய்கின்றாய்
இனி அதனை ஒழிந்து அவர் இடத்துக்குச் செல்
லத் துணி. (சு)

காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்
சே, யானோ பொறேனிவ் விரண்டு.

(க-ரை.) நல்ல நெஞ்சே ஒன்று நாணம் விடமா
ட்டாய் ஆகில், காமவிருப்பத்தை விடு, ஒன்று காம

விருப்பத்தை விடமாட்டாய் ஆகில், நாணத்தை விடு, இரண்டும் விடாமை உன் கருத்து ஆகில் ஒன்றற்கொன்று பகை ஆகிய இந்த இரண்டையும் நானே ஒன்றுசேரத் தாங்கவல்லவள் அல்ல. (எ)

பரிந்தவர் நலகாரென றேங்கிப் பிரிநதவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

(க-ரை.) எனது நெஞ்சே அவர் இப்பொருமை அறியாமையால் நொந்து அருள செய்யாதவர் ஆயினர் என்று நினைந்து, அதை அறிவிக்கும் பொருட்டு நம்மைப்பிரிந்து போனதலைவா பினனே ஏங்கித் துன்பம் அடைந்து போகநினைத்தநீ ஒன்றும் அறியாய். (அ)

உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

(க-ரை.) எனது நெஞ்சே காதலர் உன் உள்ளே இருப்பவர் ஆகமுன் எல்லாம் கண்டு இருந்தும், நீ இப்பொழுது புறத்தே தேடியார் இடத்துக்குச் செல்லுகின்றாய். (கூ)

துன்னத் துறநதாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின்.

(க-ரை.) நம்மைக் கூடாதவண்ணம் துறந்து போனவரை நாம் உள்ளத்தில் வைத்து இருக்கிறோம் ஆக முன் இழந்த புறத்து அழகே அல்லாமல் இன்னமும அகத்து அழகையும் இழப்போம். (க0)

## ௧௨௬-ம். அதி—நிறையழிதல்.

அஃதாவது - தலைவி மனதிலேஅடக்கப்படுமவைகளை ஆசை மிகுதியால் அடக்கமுடியாமல் வாய் விட்டுச் சொல்லுதலாம்.

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

(க-ரை.) நாணுகியதாழினைக்கேத்த நிறை என்றுசொல்லப்படுகின்ற கதவைக்காம வேட்கைஆகிய குந்தாலி முறிக்கின்றது. இனி அவைநிற்றலும் இல்லை ஆனல் பொறுத்தலும் இல்லை. (க)

காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை, யாமத்து மாளுந் தொழில்.

(க-ரை.) எல்லாருந் தொழில் ஒழிகிற நடு இராத்திரியிலும் என் நெஞ்சத்தைத் தொழிலிலே தண்டித்து ஆளுகின்றது. ஆதலால் காமம் என்றுசொல்லப்பட்ட ஒன்று கண்ணோட்டம் இல்லாததாய் இருந்தது. (உ)

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்
பின்றித், தும்மல்போற் றோன்றி விடும்.

(க-ரை.) இக்காமத்தை நான் என் உள்ளே மறைக்க நினைப்பேன். அதனால் இது என் கருத்தின் வழிவாராமல் தும்மலைப்போல வெளிப்பட்டு விடுகின்றது.

நிறையுடையே னென்பேன்மன் யானோ
வென் காமம், மறையிறந்து மன்று படும.

(க-ரை.) நான் இதுவரையும் என்னை நிறை உடையேன என்று நினைத்து இருப்பேன் அதனால், எனது காமம் மறைந்து இருத்தலைக்கடந்து பலரும் அறியப்படுகின்றது. (௪)

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை
காமநோ, யுற்றா ரறிவதொன் றன்று.

(க-ரை.) தம்மை நீங்கிப்போனவர் பின்செல்லாது தாமும் நீங்கி நிற்கிற நிறை உடைமை ஆனது, காமநோய் அடைந்தவரால் அறியப்படுவது ஒன்று அல்ல. (௫)

செற்றவர் பின்சேறல வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர்.

(க-ரை.) என்னை நீங்கிச்சென்றவர் பின்னே யான் செல்லல் வேண்டுதலால் என்னை அடைந்த துன்பம் ஆனது, எத்தன்மையது மிக நன்று. (௬)

நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.

(க-ரை.) நம்மால் விரும்பப்பட்ட தலைவர் வந்து காமத்தினாலே நாம் விரும்பியவைகளை செய்யும் அளவில், நாணென்று சொல்லப்பட்ட ஒன்றையுமோ அறியக்கூடாமல் இருந்தது. (௭)

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

(க-ரை.) நமது நிறை ஆகிய அரணத்தை அழிக்கிற ஆயுதம் பல பொய்கள் பேசவல்ல கள்வனது தாழ்ந்த சொற்கள் அன்றோ, ஆனபின் அது நிற்கும் விதம் எப்படி. (அ)

புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங், கலத்த லுறுவது கண்டு.

(க-ரை.) அவர் வந்தபொழுது பிணங்கக்கடவேன் என்று நினைத்து அவர் எதிர் நில்லாமல் வேறு ஓர் இடத்திலே போயினேன் போகியும், என் நெஞ்சம் ஆனது நிறையில் நில்லாமல் கீழே அறுத்துக் கொண்டுபோய் அவரோடு கலக்கத்தொடங்குவதை அறிந்து அது இனி வாயாது என்று தழுவினேன்.

நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினாக் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.

(க-ரை.) நிணத்தைத் தீயில் இட்டால் அது உருகுமாறுபோல் தம் தலைவரைக்கண்டால் நிறை அழிந்து உருகுகின்ற நெஞ்சினை உடைய மகளிர்க்கு யாம் பிணங்கிப் பின் புணர்ந்து அந்நிலையிலே நிற்கக்கடவோம் என்று நினைவு உண்டாகுமோ. ()

## கஉஎ-ம். அதி.—அவர்வயின்விதும்பல்.

அஃதாவது - தூரதேசப் பிரிவிலே தலைவனும், தலைவியும், ஆசை மிகுதியால் ஒருவரை ஒருவர் காணுதற்கு விரைதலாம்.

